திரிபுரம் அச்சகம், சென்னை-12, தொலைபேசி : 666165.



# போகர் ஏழாயிரம்

## முதலாம் ஆயிரம்



அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி
திருக்கோயில் சித்த மருத்துவநூல்
வெளியீட்டுக் குழு

1975

வெளியீட்டுத்தொடர் எண்: 14.

# போகர் ஏழாயிரம்

## முதலாமாயிரம்

பதிப்பாசிரியர்:

ரா. கங்காதரத் தேவர்







அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்
சித்த மருத்துவநூல் வெளியீட்டுக் குழுவினருக்காக
கௌரவத் தலைவர்
டாக்டர் இரா. தியாகராசன், எல்.ஐ.எம்.,
அவர்களால் பதிப்பிக்கப்பெற்று
தமிழ்நாடு அரசுக்கு நன்கொடையாக அளிக்கப்பட்டது.

1975

முதற் பதிப்பு—1975

இரண்டாம் பதிப்பு—1975







அச்சிட்டோர் :
திரிபுரம் அச்சகம்,
55, ஸ்டாரன்ஸ் சாலை,
சென்னை-600012.

## அருள்மிகு
## பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்
### சித்த மருத்துவநூல் வெளியீட்டுக்குழு

டாக்டர் இரா. தியாகராசன், எல். ஐ. எம்.,
பொறுப்பு அலுவலர்,
சித்த மருத்துவ மைய ஆராய்ச்சி நிலையம்,
சென்னை-600029. ... தலைவர்

டாக்டர் ஆ. ஆனந்தகுமார், ஜி. சி. ஐ. எம்.,
தலைவர், இந்திய மருத்துவ மத்தியக் கழகம்,
சென்னை-600005. ... பொருளாளர்

திரு. கு. சின்னப்பன், தலைவர், அறங்காவலர் குழு,
அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி
திருக்கோயில். ... உறுப்பினர்

டாக்டர் ப. சிற்சபை, காஞ்சி,
துணைத்தலைவர்,
இந்திய மருத்துவ மத்தியக் கழகம். ... உறுப்பினர்

திரு. வி. எஸ். கோதண்டபாணி, பி.எஸ்ஸி., பி. எல்.,
நிருவாக அதிகாரி, அருள்மிகு பழநி
தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில். ... உறுப்பினர்

டாக்டர் பு. மு. வேணுகோபால், எச். பி. ஐ. எம்.,
இயக்குநர், இந்திய மருத்துவத்துறை,
சென்னை-600029. ... சிறப்பு அழைப்பினர்

### சித்த மருத்துவ அறிவியல் வளர்ச்சிக் குழு
### உறுப்பினர்கள்

1. டாக்டர் இரா. தியாகராசன், எல்.ஐ.எம்.,
பொறுப்பலுவலர், சித்த மருத்துவ
மைய ஆராய்ச்சி நிலையம், சென்னை-600029. தலைவர்

2. டாக்டர் பு. மு. வேணுகோபால், எச். பி. ஐ. எம்.,
இயக்குநர், இந்திய மருத்துவத்துறை,
சென்னை-600029. செயலர், உறுப்பினர்

3. டாக்டர் சி. எஸ். உத்தமராயன், எச். பி. ஐ. எம்.,
முன்னாள் இயக்குநர், இந்திய மருத்துவத்துறை,
சென்னை-600005. உறுப்பினர்

4. டாக்டர் எம். சண்முகவேலு, எச். பி. ஐ. எம்., முன்னாள் மருத்துவப் பேராசிரியர், இராமநாதபுரம். உறுப்பினர்

5. டாக்டர் கே. இராதாகிருஷ்ணன், எல். ஐ. எம்., மருத்துவ அலுவலர். ஊராட்சி ஒன்றிய மருந்தகம், காவேரிப்பாக்கம், வட ஆர்க்காடு. ,,

6. டாக்டர் எ. சிறில் ஹென்றி, எல். ஐ. எம்., ஓய்வுபெற்ற மருத்துவ அலுவலர், நகராட்சி மருந்தகம், திருச்சி. ,,

7. டாக்டர் ஆ. ஆனந்தகுமார், ஜி. சி. ஐ. எம்., தலைவர், இந்திய மருத்துவ மத்தியக் கழகம், சென்னை-600005. ,,

8. டாக்டர் ப. சிற்சபை, ஆர். ஐ. எம். பி., துணைத்தலைவர், இந்திய மருத்துவ மத்தியக் கழகம், சென்னை-600005. ,,

9. பண்டிட் பெ. முத்துகருப்பப் பிள்ளை, ஆர். ஐ. எம். பி., தலைவர், சித்த மருத்துவ சங்கம், மதுரை ,,

10. டாக்டர் டி. வி. கல்யாணசுந்தரம், ஆர். ஐ. எம். பி., தலைவர், சென்டிரல் சித்தா மெடிக்கல் கவுன்சில், சென்னை-600012. ,,

11. டாக்டர் என். சேது ரகுநாதன், தமிழ்ப் பேராசிரியர், விருதுநகர். ,,

12. திரு. நீ. கந்தசாமிப் பிள்ளை முன்னாள் செயலர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சை. ,,

### சிறப்பு அழைப்பினர்கள்

1. டாக்டர் பொன். குருசிரோன்மணி, பி. ஏ., ஜி.சி.ஐ.எம்., முதல்வர், அரசினர் இந்திய மருத்துவக் கல்லூரி, பாளையங்கோட்டை.

2. டாக்டர் மு. வே. ரமணன், எல் ஐ. எம்., பேராசிரியர், மேல் பட்டப்படிப்பு, அரசினர் இந்திய மருத்துவக் கல்லூரி, பாளையங்கோட்டை.

3. டாக்டர் டி. வி. சுப்பாரெட்டி, கௌரவ இயக்குநர், இந்திய மருத்துவ வரலாற்று ஆராய்ச்சி நிலையம், ஐதராபாத்.

4. டாக்டர் டி. வி. இரத்தினவேலுசுப்பிரமணியம், பி. எஸ்ஸி., எம். டி., எம். ஆர். சி. பி. (லண்டன்), சென்னை-600010.



மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர்

மாண்புமிகு

பேராசிரியர் க. அன்பழகன் எம். ஏ., அவர்கள்

அளித்த

## அணிந்துரை

முன்தோன்றிய—மூவா முதன்மொழியாம் தமிழுடனும் அதன் நாகரிகத்துடனும் பிறந்து வளர்ந்த—சித்த மருத்துவத்தின் நன்மையும் மேன்மையும் உலகம் என்றும் இழந்துவிடாது காப்பது நம் கடன். தமிழகத்திலும் பிற தென் மாநிலங்களான திராவிடத்திலும் சித்த மருத்துவம் இன்றும் பலரால் — வழிவழியாகவும் கற்றறிந்தும் — கையாளப்பட்டு வரினும் அதன் சிறப்பும் புகழும் நிலை பெறுவதற்கு நாம் ஆற்ற வேண்டிய பணிகள் பலவாகும். தமிழக அரசின் ஆதரவாலும்—இத் துறை வல்லுநர்களின் முயற்சியாலும்—மருத்துவ முறைகளுள் சித்த மருத்துவமும் இடம் பெற்று வளருகிறது. எனினும், அதன் தனிச் சிறப்புகள் அறிவியல் ஆய்வாளர்கள் ஒப்புக் கொள்ளு மாறு ஆய்வுகள்மூலம் நிலை நிறுத்தப்பட்டாக வேண்டும் என்பதை நாம் கருத்தில் கொண்டு செயற்பட வேண்டும். அந்த நிலை உருவாவதற்கு—ஓலைச் சுவடிகளாகவும்—ஒரு காலத்தில் அச்சேறியும் இன்று கிடைத்தற்கரிதாகவும் உள்ள நூற்றுக்கணக்கான சித்த மருத்துவ நூல்கள்—உடனடியாகப் பதிப்பிக்கப்பட வேண்டும். இவை வெளி வந்தால்தாம், இன்று சித்த மருத்துவம் பயிலும்

மாணவரும், இளம் மருத்துவரும், அவற்றைப் பயின்று பயன் பெற இயலும். மருந்து செய்முறைகளை ஒப்புநோக்கி உண்மை தெளியவும், மருந்துகளின் தரத்தை உறுதிப் படுத்தவும், அரிய மூலப் பொருள்கள் கிடைக்காத விடத்து மாற்று மூலப் பொருள்களைக் கொண்டு மருந்து செய்திடவும், மருந்து உற்பத்தியைப் பல மடங்காகப் பெருக்கி மக்களுக்குப் பரவலாகக் கிடைக்கச் செய்யவும் வாய்ப்பாகும்; பரவலாக எங்கும் எளிதில் கிடைப்பதால் செல்வாக்குப் பெற்றுள்ள அலோபதி மருந்துகட்கு ஈடு கொடுத்து மக்களிடம் செல்வாக்குப் பெறவும் முடியும்.

எனவே, சித்த மருத்துவ நூல்கள் வெளியிடும் முயற்சிக்குத் தகுந்த நிதி உதவி வேண்டும் என்னும், எனது வேண்டுகோளை இசைவுடன் ஏற்று அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங் காவல் குழுவினரும்—அதன் தலைவர் திரு. பு. மனோகரன் அவர்களும்— இதற்காக இரண்டு இலட்சம் ரூபாய் நிதி ஒதுக்க முன்வந்ததுடன் சித்த மருத்துவ நூல் வெளி யீட்டுக்கென டாக்டர் இரா. தியாகராசன், எல். ஐ. எம்., அவர்களைத் தலைவராகக் கொண்ட ஒரு குழுவையும் அமைத்துச் செயல்படுத்தலாயினர்.

இக் குழுவின் தலைவரும் உறுப்பினர்களும் ஆர்வத் துடன் ஈடுபட்டு ஆற்றிவரும் நற்பணியும்— பல்வேறு வகையிலும் அவர்கட்குத் துணை நிற்போர் ஆற்றும் பணியும்—இந்திய மருத்துவத்துறை இயக்குநர் டாக்டர் பு. மு. வேணுகோபால் அவர்களின் இயக்குவித்திடும் திறனும் எனது பாராட்டுக்குரியனவாகும்.

அருள்மிகு பழநி திருக்கோயில் அறங்காவலர் குழு வினருக்கும் அக்குழுவின் தலைவருக்கும் எனது நன்றியும் பாராட்டும் உரியவாகும்.

இந்த நூல் வெளியீட்டுக் குழுவினரால் தேர்ந் தெடுக்கப் பெற்று முதலில் வெளியிடப்படும் நூல் வரிசை யில், போகர் ஏழாயிரத்தில் தற்போது கிட்டியுள்ள முதல் மூன்று ஆயிரங்களும் ஆகும். அவற்றுள், முதல் இரண்டு ஆயிரங்கள் திரு. வே. கங்காதரத் தேவர் அவர் களால் பதிப்பிக்கப்பட்டுள்ளது.



இன்று கிட்டாத பதிப்பாக உள்ள இந்நூல் (போகர் முதலாம் ஆயிரம்) வெளிவருவது மிகுந்த பயன்தர வல்லதாகும்.

இந்நூலை இயற்றியருளியவர், போற்றுதலுக்குரிய சித்தர் போகர் என்பவராவர். இவர் போகர் நிகண்டு, போகர் எழுநூறு, போகர் கற்பம் முதலிய பல நூல்களையும் இயற்றியுள்ளார்.

மறைபொருளாய்ப் பேணப்பட்டு அதனாலேயே உருவழிந்து மறைந்து போவதற்கு ஆளாகிவிட்ட சித்த மருத்துவ உண்மைகள்—இருட்டறையிலிருந்து வெளிக் கொணரப்பட்டு—ஒளி காண்பதற்கு வழிகண்ட வல்லுநர் களில் திரு. வே. கங்காதரத் தேவரும் ஒருவராவர்.

"மிகக் கொடிய நோய்களையும், அறத் தீர்க்கும் பற்பம் செந்தூரமாகிய முறைகள், நமது நாட்டு மருத்துவத்தில் இருப்பதுபோல மற்ற மருத்துவத்தில் இல்லையென நமது மருத்துவ நூல் பயிற்சியுள்ள ஐரோப்பிய மருத்துவர்கள் மனப்பூர்வமாக ஒப்புக் கொள்கின்றார்கள். ஆங்கில மருத்துவம், நாட்டு மருத்துவம் ஆகிய இரண்டிலும் சிறப் புள்ளவர்களான சிறந்த பண்டிதர்களின் தீர்மானமாவது:

"அறுவை செய்தல் முதலிய இரண மருத்துவத் தில் ஆங்கில முறை வைத்தியம் மிகவும் மேலானது. மற்ற நோய்களின் மருத்துவத்தில் தற்கால சாந்தி யாகச் செய்வதிலும் ஆங்கில வைத்தியமே அதிகம் சிறந்தது. ஆனால், நாட்பட்ட நோய்களையும் பெரிய நோய்களான குன்மம், நீரிழிவு, சயம், எருவாய் நோய், பாண்டு, மந்தாக்கினி, மேகம், தாது இழப்பு முதலிய கடின நோய்களையும் அறத் தீர்ப்பதற்கு நாட்டு மருத்துவ முறைகளே மிக மேன்மையானவை. அவற்றுள்ளும் முறைக் கிரமமாகச் செய்யப்பட்ட பற்ப செந்தூரங்களே மிக மேன்மை பெற்றவை" என்பதே.

இந்த அபிப்பிராயமானது மிகவும் சரியானதெனவும் உத்தமமானதெனவும் அதிகம் வாய்மையானதெனவும், சிறந்த மருத்துவர்களான ஒவ்வொருவரும் முழுமனத் தோடு ஏற்றுக் கொள்வார்கள்.

இக் கூற்று உண்மையாவதை, நவீன கருவிகள் வளர்ச்சியால் ஆலென வளர்ந்து அடர்ந்து நிற்கும் அலோபதி மருத்துவமும் ஏற்கும் வண்ணம் நடைமுறையில் செயல்படுத்தி எண்பிக்கும் வல்லமையும், ஆராய்ச்சி முறையில் சான்றுகளை உருவாக்கும் முயற்சியும் ஓங்க வேண்டும் என்பதே எனது பேரவா.

இந்த உயர்ந்த நோக்கத்துக்கு உறுதுணையாகுமாறு—இந்த அரிய நூலைப் பதிப்பித்து வழங்கிச் சென்ற வே. கங்காதரத்தேவர் அவர்களின் தொண்டு,

'செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.'

என்னும் குறள் கூறும் பெரியருக்குச் சிறந்த ஓர் எடுத்துக் காட்டு ஆகும்.

இந்த நூல்களின் வெளியீடு மேலும் பல நூல்களை வெளியிடும் முயற்சியில் ஈடுபட்டுள்ளோரை ஊக்கப்படுத்துவதற்குத் துணை செய்வதாகும் என நம்புகிறேன். அவர்தம் முயற்சி வளர வாழ்த்துகிறேன்.

சென்னை
20—3—1975

க. அன்பழகன்

## இரண்டாம்பதிப்பின் முன்னுரை

உலக மொழிகளில் மிகப் பழமையானது தமிழ்மொழி; அதுபோல் தமிழ் மருத்துவமுறையும் அத்தகைத்தே. இம் மருத்துவ முறையைத் தோற்றுவித்தவர் சித்தர்கள் எனப்படுவர். ஆகையால், இம்மருத்துவத்திற்குச் சித்த மருத்துவமென்று பெயர் அமையலாயிற்று. அச்சான்றோர்கள் தாம் கண்ட உண்மைகளையும் மருத்துவ நுணுக்கங்களையும், மருந்து சரக்குகளின் குணம் முதலானவைகளையும் மாணவர்கள் பலரை ஏற்று ஓதியும் ஓதுவித்தும் பற்பல ஏடுகளில் பதிவு செய்தும் உலகோர்க்கு உதவி செய்து தம் மருத்துவமுறைகளைப் பரப்பி வந்தார்கள்.

காலப்போக்கில், சிறிது சிறிதாய் இயற்கையின்—நிலநடுக்கம் கடற்கோள் போன்ற—சீற்றம் காரணமாகவும், வெளிநாட்டார் படையெடுப்பு, சிதலை, இராமபாணம் போன்றவைகளின் தாக்குதலாலும் பல ஏடுகள் அழிந்தவை போக மிகுந்தவைகளில், சில மேலைநாட்டு நூல் நிலையங்களுக்கு எடுத்துச் செல்லப்பட்டனவெனக் கூறப்படுகின்றது. இன்னும், எஞ்சியுள்ள ஏடுகளாலும், அம் மருத்துவக் கலையைத் தொன்றுதொட்டுக் கையாண்டுவரும் மருத்துவர்கள் வாயிலாகவும், பல நூற்றாண்டுகளாக அதன் அடிப்படை உண்மை தனித்தன்மை காரணமாகவும் சித்த மருத்துவம் அழியாது நிலை பெற்றிருக்கிறது.

தஞ்சையையாண்ட மராட்டிய மன்னர் சரபோஜி அவர்களின் ஆட்சிக் காலத்தில் சித்த, ஆயுள்வேத, யூனானி மருத்துவ ஏடுகள் எல்லாம் சரசுவதி மகால் நூல் நிலையத்தில் அரியணை ஏறின. மருத்துவப் புலவர்களின் அனுபவங்கள் ஏடுகளில் ஏறி ஏமமுற்றன. மருத்துவம் செய்முறையும், பிணித்தீர்வும் அவர் ஏற்படுத்திய தன்வந்திரி மகாலில் மறுமலர்ச்சியுற்றன. அவர் ஆட்சிக்குப்பின் சித்த மருத்துவம் அரசு ஆதரவை இழந்து பழையபடி குடிமக்களின் ஆதரவு கொண்டு ஆங்காங்கு வழக்கில் இருந்து வரலாயிற்று.

மிக அண்மையில், வெள்ளையராட்சிக் காலத்தில் நீதிக்கட்சிச் சார்பில் முதல் அமைச்சராகப் பணியாற்றிய பானகல் அரசர், 1924இல் இந்திய மருத்துவப் பள்ளியைத் தோற்றுவித்துப் பல கிராம மருத்துவமனைகளையும் அமைத்து இயங்கச் செய்து சித்த மருத்

துவம் முதலான இந்திய மருத்துவ முறைகளின் மறுமலர்ச்சிக்கு வித்தூன்றினர். அக்காலத்தில் மேற்படி கல்வி நிலையத்தில் பயிலும் மாணவர்களுக்கு அமைந்த பாடத்திட்டபடி கற்பிக்கப் போதிய பாடப் புத்தகங்களும் முதல் (மூல) நூல்களும் இல்லாக்குறையை ஓர்ந்து பாடப் புத்தக ஆக்கக்குழுவை அரசு அமைத்தது. அந்நாள் சித்த மருத்துவத்துறைத் தலைமை ஆசிரியராய் இருந்த பண்டிட் வைத்திய ரத்னம், மருத்துவ சிரோன்மணி காலஞ்சென்ற திரு. க. ச. முருகேச முதலியார் அவர்கள் குணபாடம் (மூலிகை வகுப்பு) என்னும் நூலைத் தன் சொந்த முயற்சியால் இயற்றி அரசினர்க்கு நன்கொடையாக அளித்து வெளியிடச் செய்தும், குழுவினர் அரசு வழி வெளியிட்ட நஞ்சு நூல், பாலவாகடம் என்ற நூல்களைப் பார்வையிட்டும் உதவினர். அக்குழுவினர் நூற்றுக்கும் மேற்பட்ட மருத்துவச் சுவடிகளையும் அச்சிட்ட நூல்களையும் சேகரித்து, ஒரு நூல் நிலையம் ஏற்படுத்தினர்.

மேற்படி பள்ளி, கல்லூரியாக மிளிர்ந்தபோது, அந்நாள் கௌரவ இந்திய மருத்துவ இயக்குநராகப் பணியாற்றிய டாக்டர் ம. ரா. குருசுவாமி முதலியார் ஊக்கம் கொடுத்தமை காரணமாக 1950இல் சித்த மருத்துவம், மருத்துவாங்கச் சுருக்கம், நோயில்லா நெறி, குணபாடம் (மூலிகை வகுப்பு), தாது சீவ வகுப்பு என்ற நூல்களும் அப்போது பணிபுரிந்து வந்த கல்லூரி விரிவுரையாளர் களைக் கொண்டு எழுதுவித்து அரசுவழி வெளியிடப்பெற்றன.

அக்கல்லூரி நிகழ்ந்த காலத்திலும் பின்னர்ப் பாளையங்கோட் டைக் கல்லூரி தோன்றிய பின்னுங்கூடப் பாடநூல்களும் துணை நூல் களும் நிரம்பாமை பெருங்குறையாக நீடித்து வருவதாயிற்று.

ஆகவே, பண்டைய சித்த மருத்துவ ஓலைச்சுவடிகளையும் கையேடுகளையும், ஒருமுறை அச்சாகிப் பின் விற்பனைக்குக் கிட்டாத புத்தகங்களையும் சேகரிக்கவும், மருந்து செய்முறை அட்டவணை தயாரிக்கவும், பாட நூல்கள் வெளியிடவும் ஆகிய பணிகள் செய்ய (pharmacopiea committee 1966 G. O. MS. 2163 Dt. 23-8-60) ஒரு குழுவும், சித்த மருத்துவக் கல்வி மற்றும் பாடநூற் குழு என்று (G. O. MS. No. 1060 health Dt. 13-6-66) ஒரு குழுவும், திருவருட்பா, திருப்புகழ் முதலியவைகளில் உள்ள மருத்துவப் பகுதி களை ஆய்வதற்காக ஒரு குழுவும் எனத் தமிழக அரசு குழுக்களை ஏற்படுத்தியது. அதன் விளைவாக அறுவை மருத்துவம், சூல் மருத்துவம் என்ற நூல்கள் வெளிவந்தன,

மீண்டும், விரைவில் பயன்காண வேண்டி 1973 ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 15ஆம் நாள் தமிழக அரசினர் மேற்கூறிய குழுக்களை ஒருங்கிணைத்துச் சித்தமருத்துவ அறிவியல் வளர்ச்சிக்குழு



என்னும் ஒரு குழுவைத் (G. O. MS. No. 2571 of 23—10—73) தோற்றுவித்தார்கள். அக் குழுவின் பணிகளாவன: சித்த மருத்துவ அரிய சுவடிகள், கையேடுகள், அச்சாகிய பழைய நூல்கள் ஆகியவைகளைச் சேகரித்துப் பாதுகாத்தல்; ஓலைச்சுவடிகளை ஆய்ந்து கையெழுத்துப்படி, தட்டெழுத்துப்படி முதலியவைகளை எடுத்து அச்சியற்றி வெளியிடல்; ஒருமுறை அச்சில் வெளிவந்து விற்பனைக்குக் கிடைக்கப் பெறாத நூல்களை மீண்டும் வெளியிடல்; இதுவரை அச்சிடப் பெறாத நூல்களை வெளியிடல் என்பனவாம். அதன்படி இக் குழுவினர் இதுவரை 400 சுவடிகளையும் 100 கையெழுத்துப் படிகளையும், 230 அச்சான பழைய நூல்களையும் சேகரித்துள்ளனர்.

இக்குழுவினர் தாம் மேற்கொண்ட பணிகளைச் செயலாற்ற, இந்திய மருத்துவத் துறை இயக்குநர் அலுவகத்தில் ஒரு தனி அலுவலரையும் அவற்கு உதவியாளர்களையும் நியமித்துள்ளனர், அவர்கள் நூல்களைப் படியெடுத்துத் திருத்தம் செய்து அச்சியற்றத் தக்க வகையில் செய்து வருகின்றனர்.

அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் நிதியி லிருந்து சித்த மருத்துவநூல் வெளியீட்டுக்கென்று ஒதுக்கப்பட்ட இரண்டு இலட்சம் ரூபாயைக் கொண்டு மேற்படி நூல்களை, நடை முறைச் சிக்கல்களைத் தவிர்த்து வெகு விரைவில் வெளியிட மேற்படி சித்த மருத்துவ அறிவியல்வளர்ச்சிக் குழுவிலுள்ள உறுப்பினர் சிலரு டன் அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங் காவலர் குழுத் தலைவர் உயர்திரு. பு. மனோகரன் அவர்களையும் மேற்படி திருக்கோயில் திருவாக அதிகாரியையும் கொண்டு அருள் மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக்குழு ஏற்படுத்தப்பட்டது. அக்குழு முடிவெடுத்த படி முதல் வெளியீட்டு வரிசையில், தற்போது கிட்டியுள்ள போகர் ஏழாயிரத்தின் முதல் மூன்று ஆயிரங்களும் இடம் பெறும். மேற் படி நூலின் ஆசிரியர் போகர் என்னும் சித்தரேன்பது வெளிப் படை. இவரைப் பதினெண் சித்தரில் ஒருவரென்பர். இவர் போகர் நிகண்டு, மூலிகைத் தொகுப்பு, கற்பம் முந்நூறு, வர்ம நூல் முதலிய பல அரிய நூல்களை யாத்து அளித்துள்ளார் என்று தெரிகிறது. இவருடைய ஆசான் காலாங்கிநாதர் என்றும், இவருடைய பாட்டனார் திருமூலரென்றும் இவருடைய பாடல் களிலிருந்து புலப்படுகின்றன. இவருடைய சீடர் புலிப்பாணி என்பர். இவர் தம் சீடருடன் பழநியில் வாழ்ந்து பல சித்து விளையாடல்கள் செய்த காரணத்தால் பழநியைச் 'சித்தன் வாழ்வு' என்று பல நூல்கள் கூறும். அத்தகையவற்றில் ஒன்றுதான்

பழநி மலைமீதுள்ள ஞான தண்டாயுதபாணி திருவுருவம் என்பது பலர் கருத்தாகும். இவர் உலக நாடுகள் பல சுற்றிக் கண்டும், ஆய்ந்தும் அதன் பயனைப் பல மொழிகளில் புலமை பெற்றும், பல கலைகளில் வல்லுநராகவும் திகழ்ந்தாரென்று அறியக் கிடக்கின்றது.

இவருடைய வரலாறுகளைப் பல நூல்களில் பற்பல விதமாகக் காணலாம். அவைகளை இங்கு விவரிக்க இடமில்லை யாதலால் இம்மட்டோடு நிறுத்திக் கொண்டு இவரியற்றிய ஏழாயிர மென்னும் நூலின் முதலிரண்டு ஆயிரங்களை 1893இல் பாண்டேச்சுரம் வே. கங்காதரத் தேவரென்பவர் அச்சியற்றி உதவியதைத் தழுவியும், சென்னை, சைதாப்பேட்டை, காலஞ்சென்ற திரு. தணிகாசல வைத்தியர் திருமகனார் திரு. டாக்டர் த. தங்கவேலு அவர்கள் கொடுத்து உதவிய இரண்டு கையெழுத்துப் படிகளை ஒப்புநோக்கித் தனிப்பிரதி எடுத்தும் மேற்படி நூல்களுக்குக் குறிப்புரையும், அருஞ்சொல்லுரையும் எழுதி இணைத்தும் தனித்தனிப் படிகளாகப் பதிப்பித்தளிக்க முன் வந்துள்ளோம். அவற்றுள், முதலாம் ஆயிரத்தின் முற்பகுதி சரக்குவைப்பு முறைகளையும் பிற்பகுதி இயற்கைச் சரக்குகளின் விவரங்களையும் கூறும் நூலாகும். மூன்றுமாயிரம் அறுபத்து நான்கு வகைப் பாடாணங்களின் வைப்பு, இயற்கை முதலியன கூறும் நூலாகும்.

மேற்கண்ட அரிய நூல்களின் வெளியீட்டுப் பணிக்குப் பெருந் தொகை தேவைப்படுவதால், இப்பெரும் பணியை விரைவில் செயல் படுத்த உளங்கொண்ட நம் தமிழக அரசின் நல்வாழ்வுத் துறை அமைச்சர் மாண்புமிகு பேராசிரியர் உயர்திரு. க. அன்பழகன் எம். ஏ., அவர்கள் பேரார்வங்கொண்டு மேற்படி பணி முட்டின்றி முடிவதற்கு அரசு நிதியிலிருந்து ஆண்டொன்றுக்கு ஐம்பதாயிரம் ரூபாய் வழங்க ஆணை பிறப்பித்தார். மேலும், அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவலர் குழுத் தலைவர் உயர்திரு. பு. மனோகரன் அவர்களைக் கொண்டு முதல் தவணையாக மேற்படி திருக்கோயில் கருவூல நிதியிலிருந்து இரண்டு இலட்சம் ரூபாயை ஒதுக்கி வழங்கச் செய்தமையும், சித்த மருத்துவ நூல்கள் விரைவில் வெளியாக வாய்ப்புத் தேடித் தந்தமையம், காலஞ்சென்ற திரு. டாக்டர் ஜி. டி. நாயுடு அவர்களைக் கொண்டு காலஞ்சென்ற திரு. டி. வி. சாம்பசிவம் பிள்ளையவர்கள் தொகுத்து வைத்திருந்த மருத்துவப் பேரகராதியின் முதல் மூன்று பகுதிகளையும் பிற சித்த மருத்துவ இலக்கிய நூல்களையும் அச்சிட்டு வெளியிடச் செய்தமை யும் அமைச்சர் பெருமகனார் சித்த மருத்துவ மறுமலர்ச்சிக்கு முழுமன



துடன் ஆற்றிவரும் செயற்கரிய ஆக்கச் செயல்களாகக் கூறிப் பெருமிதமடையலாம். இதற்குத் தமிழகம் என்றென்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது.

அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங் காவலர் குழு முன்னாள் தலைவர் உயர்திரு. பு. மனோகரன் அவர்கள் தமக்குள்ள பற்பல அறப்பணிகட்கிடையேயும் இக் குழுவின் கூட் டங்களில் பங்குகொண்டு, நூல் வெளியீட்டுக்கான பற்பல வழிமுறை களையும் ஆலோசனைகளையும் வழங்கி வெளியீட்டுப்பணி ஊக்கமும் ஆக்கமும் பெற்றுத் தங்குதடையின்றி நூல்கள் வெளிவர, மேற்படி திருக்கோயில் நிதியிலிருந்து மேற்படி அறங்காவலர் குழுவினரைக் கொண்டு முதல் தவணையாக இரண்டு இலட்ச ரூபாய் வழங்கச் செய்ததோடு, சித்தமருத்துவக் கல்லூரி ஒன்று பழநியில் தோற்று விக்க உடன்பட்டமைக்கும் சென்னையில் மத்திய சித்த மருத்துவ நூலக மொன்றை நிறுவக் கட்டடம் கட்டித்தர முயன்று வருகின்ற மைக்கும் இக்குழுவினரும், இதில் பணியாற்றி வருபவர்களும் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டவர் ஆவார்கள்.

மேற்படி அறங்காவலர் குழுத்தலைவர் அவர்களுக்கு உறுதுணை யாக இருந்து ஒத்துழைத்து வரும் மேற்படி திருக்கோயில் நிருவாக அதிகாரியாகிய உயர்திரு. வி. எஸ். கோதண்டபாணி பி. எஸஸி., அவர்களுக்கும் இப்பணிகள் நிறைவுபெற ஆக்கிய தீர்மானங்களுக்கு ஒப்புதல் அளித்துவரும் இந்து சமய அறநிலையப் பாதுகாப்புக் குழுத் தலைவர் உயர்திரு. கே. எஸ். நரசிம்மன் பி .ஏ , ஐ. ஏ. எஸ்., அவர் களுக்கும் இக் குழுவினரின் உளங்கனிந்த நன்றி உரித்தாகுக.

இக் குழுவினர் பணியாற்றுவதற்கு ஏற்ற இடவசதியும் பிற வசதிகளும் தம் அலுவலகத்தின் ஒரு பகுதியில் கொடுத்து, பணி இடையீடின்றி நடைபெற வேண்டிய ஆலோசனைகளும் ஊக்கமும் அளித்துவரும் இந்திய மருத்துவத் துறை இயக்குநர் டாக்டர் பு. மு. வேணுகோபால், எச். பி. ஐ. எம்., அவர்களுக்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

அடக்க விலையில், அச்சடிக்கும் தாள்கள் சேஷசாயி பேப்பர் மில்சாரிடமிருந்து மிக விரைவில் கிடைக்கும்படி செய்த முத்தமிழ்க் காவலர் உயர்திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களுக்கு இக்குழு நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளது.

மற்றும், இந்நூல்களை அச்சியற்ற ஏற்றவண்ணம் மூலப்படிகளைத் திருத்தம் செய்வித்தும், அச்சுப்படிகளைத் திருத்தம் செய்தும்

இக் குழுவுக்குத் துணைபுரிந்துவரும் தனி அலுவலர் டாக்டர் வி. விசுவநாதன், எல். ஐ. எம்., அவர்களையும் அன்னாருக்குத் துணைபுரிந்து வரும் புலவர்கள் மு. சௌரிராசன், வி. செ. விநாயகம், வை. முரு. முத்துக்குமாரசாமி, ஆகியவர்களையும் இக்குழு மனமுவந்து பாராட்டுகிறது.

ஒவ்வொரு நூலையும் குறுகிய காலத்தில் அழகிய முறையில் அச்சியற்றிய அந்தந்த அச்சகத்தாரின் சேவைக்கு இக்குழு மனமுவந்து பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்கிறது.

சான்றோர் மிகுந்த இவ்வுலகு இந்நூல்களில் காணும் குற்றங் கண்டு முனியாது நனியாதரவு தந்து எம்மை ஊக்குவிக்குமென்ற துணிவுடன் இந் நூல்களை வெளியிடுகின்றனம்.

டாக்டர் இரா. தியாகராசன், எல். ஐ. எம்.,
தலைவர்

அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்
சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக்குழு.

இந்திய மருத்துவத்துறை
இயக்குநர் அலுவலகம்,
சென்னை-600029.

## முதற்பதிப்பின் முகவுரை

அநாதி முத்தசித்துருவாய் நிலைபெற்று நிற்பவரும், நவநாட்டு சித்தர், பதினெண்சித்தர் முதலியோர்க்குப் பிரதான ஆசிரியராய் விளங்குபவராகிய சிவபெருமான், அநாதி பெற்ற சித்துருவாகிய ஆன்ம வருக்கங்கள், சாதன சாத்திய ரூபங்களான தருமார்த்த காமமோட்சங்களையடைந்து உய்யும்பொருட்டு, லௌகிகவைதிக மார்க்கங்களாகிய, "வேதாந்த சித்தாந்த வைத்தியவாத" மருமங்களோடு கூடிய ஏழுலட்சம் நூற்பாக்களைப் பராசத்தியாகிய உமாதேவியாருக்குத் திருவாய் மலர்ந்தருளினர்.

அவ்வம்மையார், அதனைத் திருநந்தி தேவருக்கு உபதேசித் தருளினர். அவர் தாமுணர்ந்த 'ஏழுலட்சம் இயல்பை எல்லாம்" திருமூலருக்கு "எளிதான வாயிரமா யிசைத்து வைத்தார்" அவர் "ஏழுலட்சம் நூற்பாக்களின் போக்கை யெல்லாம்" "கரும்பான பாகு போற்றிரட்டி" காலாங்கிநாதருக்கு எண்ணாயிரம், ஐயாயிரம், மூவாயிரம், ஆயிரம், முந்நூறு, முப்பது, மூன்று என்ற நூற்பாத் தொகைகளாக முறையே ஏழு நூற்களை எடுத்திசைத்தார். அவர் அவற்றை ஐந்து காண்டங்களாக வகுத்துப் போகமுனிவருக்குப் போதித்து அருளினர். அவர் சிவபெருமானும் நந்திதேவரும் திருமூலத்தேவரும் காலாங்கிநாதரும் திருவாய் மலர்ந்தருளிய நூல்களையும், சனகாதிநால்வர், பதஞ்சாலியார், வியாக்கிரபாதர், சிவமுனிவர், தட்சிணாமூர்த்தி ஆகியோர் செய்த பிற நூல்களையும் ஏனையச் சித்தர் நூல்களையும், நன்கு ஆராய்ந்து, அவற்றின் உட்கருத்துகளைத் திரட்டி ஏழாயிரம் செய்யுள்களால் ஆகிய ஒரு நூலாக்கித் தன் திருப்பெயரினால் இந்நூல் நின்று நிலவும்படி அமைத்தார். ஆகையால், இதற்குப் "போகமுனிவர் ஏழாயிரம்" என்று பெயராயிற்று. இந்நூல், ஏழுகாண்டங்களாக வகுக்கப் பட்டிருக்கின்றது. இது காரணமாக இந்நூலுக்குப் "போகமுனிவர் சப்தகாண்டம்" என்னும் ஒரு பெயருண்டு. இது, "தியங்காத சாரணைதான் கட்டு மார்க்கம், குடமான குடோரியொடு கிராவ ணந்தான்—கொடிதான பறிக்குருவு சிந்தூ ரங்கள், தடமான லவணமொடு சத்துச் செம்பு—தனிப்பதங்கம் குளிகையொடு செயநீ ராகும், கடமான திராவகமு மயனக் கூட்டங்-கடிசான மூலிகைமா வவிழ்தந் தானே" என்ற பதினாறினையும் உறுப்பாகக் கொண்ட "வாதத்தின் சித்தியோடே" "ஞான-மேற்றமாங் காயசித்தி யோகசித்தி, கூண்பித்த குளிகைசித்தி கமன சித்தி-கூறுந மந்திரத்தின் சித்தி யெல்லாம்" விவரித்துச் சொல்லும்.

இவ்வேழு காண்டங்களுள், முதற் காண்டத்தின் செய்யுள் தொகை ஆயிரம் அவற்றுள்,

முதல், முந்நூற்றுச் சொச்சஞ்செய்யுள் மோட்சமடைதற்குச் சாதனமாயுள்ள "ஞானமார்க்கம்" என்னும் பெயர் பெறும். இது மூலாதார முதலிய சடாதாரங்களின் கோணங்கள், இதழ்கள், அவ்விதழ்களிலுள்ள காவல் தெய்வங்கள், அவ்வத் தெய்வங்கட்குரிய அட்சரங்கள், அவ்வாருதாரத்திற்குரிய முக்கிய தெய்வங்கள் அத்தெய்வங்களின் பீசங்கள், பூதபீசங்கள் முதலியவற்றையும், துவாதசாந்தத்தில் நிருத்தஞ்செய்யும் மனோன்மணியின் மாண்பையும், காயத்திரியின் சிறப்பையும், வாசிகளின் வண்மையையும், முப்பாழின் மொய்ம்மையும், தசதீட்சைத் தன்மையையும் சாம்பவி கேசரிகளின் சார்பையும், யோகங்களின் தொகை வகை விரிகளையும், மண்டலத்திரயத்தின் வரிசையையும், அடயோகம், பரியங்கயோகம், மந்திரயோகம் முதலியவற்றின் சிறப்புகளையும் விளக்கிச் சொல்லும்.

இரண்டாவது, முந்நூற்றுச் சொச்சச் செய்யுள் யோக முயற்சிக்குக் கருவியாகிய உடல் நிலைபெறுமாறு கூறிய கற்ப விதியால் அமைந்த "காயசித்தி மார்க்கம்" என்னும் பெயர் பெறும். இது, காயத்தைச் சித்திசெய்து கொள்வோர்க்கு மறுக்கவும் ஏற்கவுமாகிய உணவுகளையும் யாண்டும் ஒழுகவேண்டிய ஒழுக்க நெறியையும், கற்பங்கொள்ளும் பருவத்தையும், அக்கற்பங்களின் விவரத்தையும், அக்கற்ப மூலிகைகளால் சமைக்கப்பட்ட இரச உபரசங்களின் கட்டு, களங்கு, மெழுகு முதலியவற்றையும், அவற்றின் செந்தூர பற்பங்களையும், எட்டெட்டுப் பர்டாணங்களின் வழியனவாகிய கற்பங்களையும் வேதைகளையும், மூலிகைகளுக்குக் கறுப்பு நிறத்தை உண்டாக்கும் விதத்தையும், மகாமூலிகைகளின் மாண்பையும், காந்தம் முதலியவற்றின் சத்துகளையும், இரசகுளிகைமுதலியவை இயற்றும் திறத்தையும், கெந்தகத்திலுள்ள செம்பைக் கிரகிக்கும் வழியையும், அந்த நல்ல செம்பினாலே ஆனந்த திருநடனமாடிய திருக்கூடலாகிய சிதம்பரத்தில் அமைத்து வைத்த மாண்பையும், இன்னும் பலவற்றையும் விவரித்துச் சொல்லும்.

மூன்றுவது, முந்நூற்றுச் .சொச்சஞ் செய்யுள்கள் அந்த யோக கற்பங்கள் இடையூறின்றி எளிதில் நிறைவேறுமாறு கூறிய, ஏம வித்தையாகிய "வாத முறை" என்னும் பெயர் பெறும். இது பஞ்சலோக முதலியவற்றின் பழக்கங்களையும், அவற்றிற்குப் பிரிவுகளாகிய பதங்க ரசம், உலோகங்களின் சத்துக்கள் முதலியவற்றையும், சத்தி சிவங்களாகிய வெடியுப்பு, சவுக்காரம் முதலியவற்றின் சுண்ணங்களையும், பஞ்சலோகம் முதலியவற்றின் களங்குகளையும் அவற்றின் இனங்களாகிய சத்து, சுண்ணம், செயநீர் முதலியவற்றையும், அவற்றின் செய்முறையாகிய வேதைகளையும் காயசிதம்பரத்தின் காட்சியையும், இன்னும் பலவற்றையும் விவரித்துச் சொல்லும். இம்முந்நூற்றுச் சொச்சஞ் செய்யுளாற் கூறிய வாதமுறைக்குப் "பதங்கப்போக்கு" என்னும் ஒரு பெயர் வழங்கும்.



இரண்டாவது காண்டம் முதலியவற்றின் கருத்துகள் அவ்வக் காண்டங்களின் முகவுரையில் எழுதப்படும். இது நிற்க,

இந்தப் "போகமுனிவர் ஏழாயிரத்தை" அச்சிடுவதற்காக எடுத்துக் கொண்ட முயற்சியும் உழைப்பும் அதிகம். படிகள் ஒன்றுபோலொன்றிருக்கவில்லை. இந்நூல் எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தப்பாவினால் இயற்றப்பட்டது. அப்பாக்களில் சில மூன்று அடிகளாகவும், சில ஐந்து அடிகளாகவும் இருக்கின்றன. சிலபாக்களினது அடிகள், முற்பாதி மூவகைச்சீர் இரண்டுடனே ஈரசைச்சீர் இரண்டுகூடியும் இம்முறை மாறியும் நடக்கின்றன. சில பாக்கள் அடிகளின் முற்பாதி பிற்பாதிகளின் முதலிறுதிகளில் அடையவே மூவசைச்சீர் இரண்டும் ஈரசைச்சீர் இரண்டுமாக விருக்க நடக்கின்றன. அன்றியும் சிற்சில பாக்களுக்கு எதுகை மோனைகள் மாறுபடுகின்றன. ஆயினும், இக்குற்றங்களைத் "துணிந்த நன்மையினர் நலங்கொண் மணிபொதியும் அன்களங்கறவையாகா-தெனவுண்மை நயந்திடுவர்" என மதித்து ஏட்டுப் படிகளிலுள்ளவாறே திருத்த வேண்டுமெனக்கருதி, உயர்பெருந்தகை திருமயிலை-இரத்தின முதலியார் அவர்கள் கொடுத்த படி ஒன்று திருபெருந்திரு. புதுவை இரத்தினவேலு முதலியாரவர்கள் கொடுத்த படி ஒன்று திருபெருந்திரு. வண்ணாரப்பேட்டை நாதமுனி நாயுடு அவர்கள் கொடுத்த படி ஒன்று, என் சொந்தப் படி ஒன்று ஆகிய இந்நான்கையுங் கொண்டு பலமுறை ஆராய்ந்து அச்சிடத் துணிந்தேன்.

இந்நூலை அச்சிடுவதற்குத் தூண்டுகோலாயிருந்த உயர்பெருந் திருமயிலை-இரத்தின முதலியார் அவர்களது நன்றியை யான் என்றும் மறவேன். இவரைப்போற் மருத்துவ நூல்கள் உதவிய ஏனைய நண்பரது நன்றியையும் யான் மறந்திலன்.

இம்முதற்காண்டம்போல மற்றைய ஆறுகாண்டங்களையும் இடையூறின்றி இனிது அச்சிட்டு வெளியிடச் செய்யும்படி சிவபெருமான் திருவருள்பாலிப்பாராக.

இங்ஙனம்

பா. கங்காதரன்

# பொருளடக்கம்

———

# போகர் ஏழாயிரம்

# முதலாம் ஆயிரம்

## பாயிரம்

### காப்பு

"ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தி னிளம்பிறை போலு மெயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தனைப்
புந்தி யில்வைத்தடி போற்று கின்றேனே"

கரிமுகன்றன் பதம்போற்றி கடவுள்பதம் போற்றி
கடாட்சித்தே யெனையீன்ற ஆயிபதம் போற்றி
அரியயன்றன் பதம்போற்றி வாணிபதம் போற்றி
அருள்தந்த லட்சுமிதன் பாதமலர் போற்றி
துரியமாம் பாட்டரென்ற மூலர்பதம் போற்றி
துணையான காலாங்கி யையர்பதம் போற்றி
திருவிகற்ப சமாதியுற்ற இருடிபதம் போற்றி
நிறைந்துநின்ற பூரணமே மெய்க்காப்புத் தானே. (1)

### நூல் வரலாறு

தானான வேழுலட்சஞ் சிவன்றான் சொன்ன
சாத்திரத்தின் கருவெல்லாந் தரிக்கப் பண்ணிக்
கோனான குருநூலா மேழு காண்டங்
கொட்டினேனே வாதமென்ற முறைகள் தம்மைப்
பானான பாட்டரைத்தான் கருக்கள் கேட்டுப்
பயின்றெடுத்த வாயிசொல்லின் பண்பைக் கேட்டுத்
தேனான காலாங்கி யையரையுங் கேட்டுச்
செப்பினேனிவ் வேழாயி ரத்தைக் காணே. (2)

போகர் ஏழாயிரம்

# நூல்

## ஆருதாரம்

### மூலாதாரம்

காணவே மூலமஃ தண்டம் போலக்
காரணமாய்த் திரிகோண மாக நிற்கும்
பூணவே மூன்றின்மேல் வளைய மாகும்
புறம்பாக விதழதுவும் நாலு மாகும்
நாணவே நாற்கமலத் தட்ச ரங்கள்
நலமான வ-ச-ஷ ஸவ்வு மாகும்
மூணவே முக்கோணத் துள்ளொளியோங் கார
முயற்சியா யதற்குள்ளே அகார மாமே. (3)

அகாரத்தின் மேலாகக் கணேசர் நிற்பர்
அதிலேயோர் கோணத்தி லுகார நிற்கும்
உகாரத்தில் வல்லபையாஞ் சத்தி நிற்பா
ளொடுங்கியதோர் முனை யொன்றில் கதலிப் பூவாய்ப்
புகாரமாய் முகங்கீழ்க்குண் டலியாஞ் சத்தி
பெண்பாம்பு போல் சுருட்டிச் சீறிக் கொண்டு
சுகாரமாய்ச் சுழிமுனையூ டுருவி நிற்பாள்
துரியாதீ தம்மென்றவ வத்தை தானே. (4)

அவத்தைதனக் கிருப்பிடமு மூல மாகு
மழகான கதலிப்பூ எட்டிதழாய் நிற்கும்
நவத்தைக்கு நந்தியவள் வாயில் நிற்பார்
நற்சிவமாஞ் சிகார மல்லோ கோடி பானு
மவத்தைக்கு வாய்திறவாள் மலரால் மூடும்
மைந்தனே யெட் டிதழி லெட்டுச் சத்தி
பவத்தைக்குச் சத்தியெட்டின் பேரே தென்றால்
பாங்கான வணிமாவும் லகிமாத் தானே. (5)



தானன மகிமாவுங் கரிமா வோடு
தங்குமீ சத்துவமும் வசித்து வமாகும்
பூனன பிராத்திபிரா காம்யத் தோடு
புகழெட்டுத் தேவதையுந் தளத்தில் நின்றே
ஏனன விதழாலே மூடிக் கொள்வா
ரேற்றமாம் நந்தியைத் தான் காணொட் டாமல்
வானன வஸ்துவைநீ பானம் பண்ணி
வங்கென்று வாங்கியுமே கும்பித் தூதே. (6)

ஊதிநு லெண் மர்சத் திலகி ரியாலே
யுலாவுவா ரிதழெல்லாந் திறந்து விட்டுப்
போதிநு லாயிசொன்ன ஏவல் கேட்பார்
புகுந்துபார் நந்தி கண்டால் யோக மாகும்
வாதிநுல் பத்தான வருடத் துக்கும்
வாசலையே திறவாமல் மூடிக் கொள்வாள்
ஏதிநு லிதற்குள்ளே வாசி மாட்டே
யிடத்தோடில் வங்கென்ன வுள்ளே வாங்கே. (7)

வாங்கியே நந்திதனில் யங்கென் றுகும்பி
வலத்தோடில் சிங்கென்றுள் ளாக வாங்கித்
தாங்கியே யங்கென்றி ருத்திக் கும்பி
தளமான தெருவாறும் வெளியாய்க் காணும்
ஓங்கியே மாணிக்க வொளிபோல் தோன்று
முத்தமனே மூலத்தி னுண்மை காணும்
தேங்கியே வல்லபையாஞ் சத்தி தானுஞ்
சிறந்திருப்பாள் பச்சைநிற மாகத் தானே. (8)

பச்சைநிற வல்லபையைப் பணிந்து போற்று
பாங்கான ஆறுக்கும் பருவஞ் சொல்வாள்,
மொச்சையா மூலமது சித்தி யானல்
மூவுலகுஞ் சஞ்சரித்துத் திரிய லாகும்,
கச்சைநிறக் காயமுமே கனிந்து மின்னுங்
கசடகன்றேயாறு தலங்கண்ணில் தோன்றுந்
துச்சைநிற வாதம்சொன் னபடி கேட்குந்
துரியத்தின் சூட்ச மெல்லாந் தோன்றும் பாரே. (9)

பாரென்ற புரியட்டம் நாலிற் சேர்க்கும்
பளிச்சென்று மூலத்தின் சோதி காணும்
காரென்ற தீபவொளி கண்ணே கூசுங்
கணபதியுன் கண்முன்னே நிருத்தஞ் செய்வார்
ஊரென்ற யோகத்துக் குறுதி சொல்வா
ருற்பனமாம் வாதத்தினுண்மை சொல்வார்
நேரென்ற சதாசிவத்தி னிலையுஞ் சொல்வார்
நீச்சென்று விட்டக்கால் யோகம் போச்சே. (10)

போச்சென்று விடாதேநீ மூலந் தன்னைப்
போகையிலு மிருக்கையிலு மனதை யுன்னு
பேச்சென்ற பிறர்சத்தங் கேளாப் பக்கற்
புறத்திருந்து லட்சியத்தைப் பூட்டி வாங்கு
மாச்சென்று வாசியைநீ தவறெட் டாதே
மனந்தன்னை மூலத்தில் மருவிச் சொக்கு
வேச்சென்று கடினம்போல் முன்னே காணும்
விடாதேநீ மாச்சலாய் விரவி யுன்னே. (11)

உன்னியே பழகுமட்டுங் கடிசாய்க் காணு
முட்புகுந்து பார்த்துவந்தா லுறுதி கூடும்
வன்னியே துலங்குமட்டு மனஞ்ச லிக்கும்
மாசற்ற வொளிகண்டால் மகிழ்ச்சி யாகும்
பின்னியே பிங்கலையி லிடையுங் கூடும்
பேரான சுழினைதனில் நெட்டிட் டேறும்
நன்னியே நமனும்வெருண் டப்பாற் போவான்
நாளெல்லாங் கடிகையுமாம் நாட்டம் பாரே. (12)

நாட்டமாய் லகுவாக மூலம் பாரு
நலமான வாசியைக்கொண் டூதி யூதி,
ஊட்டமாய்ச் சக்கரத்தில் நின்று நின்றே
யுத்தமனே நந்திகண்டால் வாதங் காணும்,
தூட்டமாய் வெறும்பேச்சாம் வார்த்தை சொன்னால்
சுடுகாட்டுப் பிணமான சொல்லுக் கொக்கும்,
பூட்டமாய் மூலத்தி னொளிகாண் மட்டும்
பொற்கொடிபோற் சுழிமுனையுந் திறந்து போமே, (13)



சுழிமுனையே திறந்தக்கால் மனமொ டுங்குஞ்
சுழியிலே யகப்பட்ட துரும்பு போலாம்
வழிமுனையே யாதார மேற லாகும்
மகத்தான சித்தியஃ தெட்டு மாகும்
சுழிமுனையாஞ் சுழித்தியுள்ளே யழித்தி டாது
கணக்கோடே வாசியென்ற குதிரை யேறாய்
இழிமுனையி லிறந்தக்கா லங்கொன் றில்லை
யேறுவது கடினமெத்த இகத்தோ டேறே. (14)

ஏறவே யைம்புலனு முலக்கை யாக
விடும்பான வாங்காரமுரலு மாக
ஆறவே யாசையஃ துருவ மாக
வழும்பான மனதையுள்ளே மாட்டிக் கொண்டு
மூறவே யசையாதே யிடித்துச் சண்ணி
முழுமோச மாக்கியல்லோ மிரளப் பண்ணும்
தேறவே யோகமொடு ஞானம் ரெண்டும்
தெரியாதே யிறந்தவர்கள் கோடி தானே. (15)

கோடியென்ற நரசென்ம மண்ணா சையாலுங்
குணமான தீனியதி னாசை யாலும்
மோடியென்ற மோகப்பெண் ணாசை யாலும்
மோகத்தால் பூட்டும்பொன் னாசை யாலுஞ்
சூடியென்ற சுகபோகச் சுகியி னாலுந்
துணையான பாசத்தின் மயக்கத் தாலும்
வாடியென்ற வுலகமெல்லா மயக்க மாச்சு
மக்களே வாய்ஞானம் பேச்சு மாச்சே. (16)

ஆச்சென்ற பேச்சாலே யொன்று மில்லை
யரிதான சாத்திரத்தை யாய்ந்து பார்த்து
மூச்சென்ற மூச்சாலெல் லாரு மாண்டார்
மூச்சடக்கிச் சாகாமல் முயற்சி கேளு
நாச்சென்ற நடுமூலங் கண்டத் தூணி
நலியாமல் வாய்வினது வீட்டிற் கட்டில்
தோச்சென்ற தேசியெங்கு மோடா தப்பா
சோடசத்தில் சீவகளை யிருப்பு மாமே. (17)

இருப்பான மூலத்தில் கணேசன் பாத
மிருத்தியே வாசியைநீ யதற்குள் மூட்டு
தருப்பான பிராணயந் தவறிற் ருனல்
தம்பித்து வரவழைத்துத் தளத்தில் ரேசி
குருப்பான மாத்திரைதா னேற வேறக்
குறிகளெல்லாங் குறிப்பாக அறிவில் தோற்றும்
மறுப்பான வாசியது நழுவிற் ருனல்
மனிதனல்ல மாடென்ற வார்த்தை யாமே. (18)

வார்த்தையால் தர்க்கத்தா லொன்று மில்லை
வல்லமையா லைம்புலனை மறித்துக் கட்டி
ஆர்த்தியா லக்கரத்தை விழியி ரண்டி
லமைத்துமனந் தன்னையதற் குள்ளே நாட்டித்
தேர்த்தியால் தேசியென்ற குதிரை தன்னைச்
சிக்கெனச்சிங் கென்றகடி வாளம் பூட்டி
மூர்த்தையால் மூலத்தில் மறித்துக் கட்டி
முனையான சுழிமுனைமட்டு மூட்டிப் பாரே. (19)

மூட்டியே மதுவுண்ணு கற்ப முண்ணு
மூதண்ட காயத்தைச் சித்தி பண்ணு,
காட்டியே கனத்தமூ லிகையை யுண்ணு
கசடகற்று குஞ்சனத்தில் கண்ணொளிதான் மீறும்,
ஆட்டியே யண்ணாக்கில் கபத்தைத் தள்ளி
யடுக்காறு தளத்திலுள்ள ஆமம் நீக்கு,
வாட்டியே யைம்புலனை வாளால் வீசு
மறவாதே யிரவு பகல் வாசி மாட்டே. (20)

மாட்டவே மார்க்கமூ லத்தில் நில்லு
மறவாதே யொன்றில்நின் றுதேறி னக்கால்
ஆட்டவே யடிமரத்தைத் தத்தி யேற
வாச்சரியம் நுனிமட்டு மேற லாகும்
மூட்டவே மூலமது பழகி னக்கால்
முகிந்தவிட மாறுகடந் தப்பால் தாண்டித்
தூட்டவே துவாதசாந் தத்தில் புக்குஞ்
சுருதிமுடிந் திடமறிந்து சேர லாமே. (21)



சேரவே சகத்திரமுண் டகத்தின் பூவைச்
சேர்ந்தேறிச் சந்திரமண் டலத்திற் புக்கங்
காரவே யறிவென்ற மனதாற் கொய்த
யானைமுகன் வல்லபைகுண் டலியாந் தாய்க்கும்
தூரவே பதத்தில்வைத் தர்ச்சித்துத் தூபம்
பலதீபம் பணிமாறி விவேகத் தாலே
தூரவே சோமப்பா லுகந்த ளித்துத்
துசம்நாட்டி மூலத்தில் குதிரைமுனை கட்டே. (22)

கட்டியே யஞ்சலித்துக் குண்டலியாந் தாயைக்
கருத்தில்வைத் துக்கணபதி வல்லபை கடம்மை
முட்டியே முகிழ்திறந்து வழிதா வென்று
முனையான சத்தியெண்மர் முயக்கந் தீரத்
தெட்டியே வஸ்துவைத்தான் பானம் பண்ணில்
செயலழிந்து கபாடமது திறப்பா ரப்பா,
எட்டியே நந்திபத மிறைஞ்சிப் போற்றின்
ஏற்றமாந் தொழிலெல்லா மெளிசி லாமே. (23)

எளிசிலே நந்திவந்தங் கிதக்க மாகி
யெயெட்டா மறுபத்து நாலு மீவார்
நெளிசிலே வாதங்கை கட்டி நிற்கும்
நீச்சான கருவெல்லாம் நிசமாய்த் தோன்றும்
களிசிலே காயமது சித்தி யாகுங்
கருத்தூன்றித் தானவனுய்க் கலந்து போவாய்
அளிசிலே யாலமுண்டா னுட்டுங் காணு
மாச்சரியஞ் சிலம்பொலியு மைக்கிய மாமே. (24)

அயிக்கியமாய் விழாதேநீ காமத் தீயி
லனுதினமும் வேதாந்த முடிவைப் பாராய்
ஒயிக்கியமா யொருவருடன் வாயா டாதே
யூமைபோ லிருந்துன்னி யுன்னிப் பாரு
தியக்கமாய்ப் பொய்கொலைகள் செய்தி டாதே
சேர்ந்தேறு வாசியென்ற தேசி தன்னில்
மயக்கமாய் வத்துவைநீ பானம் பண்ணி
மதத்தாலே யழியாதே மாயை நீக்கே (25)

நீக்கியே யைம்புலனை யறுத்துச் சாடு
நித்திரையைத் தள்ளி விட்டுக் காலை யுண்ணு
தூக்கியே ரேசகபூ ரகங்க ளோடு
சுயம்பான கும்பகமுங் கணக்காய்ச் சூட்டு
தாக்கியே யமிர்தவெள்ளத் தன்னை யுண்ணு
சங்கற்ப விகற்பமென்ற சட்டை நீக்கு
வாக்கியே பிராணய வரிசை தன்னை
மறவாமல் மாட்டு தற்கு மார்க்கஞ் செய்யே. (26)

செய்துமே யுற்றுப்பார் கருத்தை யூன்றித்
திகையாதே புலனாடு கணேசர் காண்பாய்
கொய்துமே பூசைபண்ணிக் குட்டிக் கொண்டு
கூர்ந்துமே வாசிதனை யிருத்தி வைத்தே
ஒய்துஓம் ஸ்ரீயும்ஹ் ரீயுங் கிலியு
முயர்கெங்கெங் கணபதி யென்றுச் சரிக்க
நய்துமே நந்தியவர் கோடிக திரொப்பு
நற்சுழியி லொளிகண்டால் நமனு டானே. (27)

நாடாமற் போவதென்ன வென்று கேட்கில்
நற்சத்த பரிசமொடு ரூபங் கந்தந்
தாடாமல் ரசத்தோடு பொறிக ளைந்துந்
தனக்கேற்ற வழிபோகில் மனந்தா னோடும்
வீடாமல் விவேகத்தில் போகொட் டாமல்
மீட்டுமே புலனை வெட்டி வீசிப் போடு
தோடாமல் காதைநீ போக்கி னக்கால்
சொல்லொன்றுங் கேளாது சூட்டிப் பாரே. (28)

சூட்டிப்பா ரின்னமுநீ பரீட்சை கேளு
துடிகண்ணைப் போக்கிடிலோ ரூபங் காணு
வாட்டிப்பார் மூக்கதனை யடைத்துக் கொண்டால்
வளமான வாசமொன்றுந் தோற்றி டாது
ஊட்டிப்பார் வாயதனி லுப்பை யிட்டா
லுறக்கரிச்சங் குப்பென்ற ருசியே காணும்
ஏட்டிப்பா ரெறும்பதுவு முடம்பி லூர்ந்தா
லேற்றமா மறிவாலே பரிச மாச்சே. (29)



ஆச்சிந்த மனம்வேறாய் நின்ற யானு
லறிவுமகா மந்திரியின் விவேக மாகும்
ஓச்சிந்த மனத்தைநித்தம் பிராணு யாம
முயர்ந்தேறி வாசியைநீ யிடத்தே பூரி
மூச்சிந்த மூலத்தில் முதிர்ந்து கும்பி
முனையான வலம்ரேசி தவறி டாமல்
காச்சிந்த மூலத்தில் நின்று நின்று
கரைகண்டு தேறியேமேன் மேலே யேறே. (30)

ஏறியே பாரென்று பாட்டர் சொன்னு
ரெனையீன்ற காலாங்கி நாதர் தாமும்
பாரிதுவே வழியென்று பக்குவத்திற் சொன்னார்
பதஞ்சலி வியாக்கிரமர் சிவயோக முனியும்
மீறியே யேறுதற்கு விளக்கஞ் சொன்னார்
மிக்கபரா பரத்தாயு மிதுவே சொன்னள்
ஆறியே நான்பார்த்த வனுபோ கத்தை
யனுபவித்தே ழாயிரத்தில மைத்திட் டேனே. (31)

அமைத்திட்ட சிகாரமென்னு மட்ச ரத்தை
யழும்பர்தாம் வெளியிலாவா கனமே செய்வார்
குமைத்திட்டக் கொள்ளாத போதந் தன்னைக்
கூறுவார்கள் வெளிதன்னில் கூகூ கூகூ,
நமைத்திட்ட வொருசொல்லா லெழுகோடி நரகில்
நணுகியே பிறவியென்னுங் கடலி லாழ்வார்,
சிமைத்திட்ட சித்தரெல்லா மூலத் துள்ளே
சிங்கென்றங் குன்னியேதி யானிப் பாரே. (32)

தியானித்தே யுள்ளடக்கிப் பூசை செய்வார்
செயகண்டி சங்கோசை காதிற் கேட்கும்
தியானிப்பார் சிலம்பொலியி னியக்கங் கேட்கும்
சிதம்பரமா நடனத்தின் செயலுங் காணும்
தியானிப்பார் சச்சிதானந் தவெள்ளந் தன்னைத்
தெவிட்டாம லுண்டிருப்பார் தேவி யீவாள்
தியானிப்பா ரனுதினமும் சிவன்தேவி பதத்தில்
திடமாக மனவிலங்கு மாட்டு வாரே. (33)

மாட்டியே மனவிலங்கைப் பூட்டிக் கொண்டு
மகிழ்ச்சியா யானந்த மயமு மாகிப்
பூட்டியே வாசியைக்கும் பித்துக் கொண்டு
புரளாமல் தம்பித்து நிற்பா ரையா
நாட்டியே மனமொன் றுய்த்தி டீகரித்து
நாதாந்தப் பெருவெளியை நாடு வார்கள்
தூட்டியே துவாதசாந் தத்திற் புக்குஞ்
சுருதியந்தத் துள்ளிருந்து துதிசெய் வாரே. (34)

### சுவாதிட்டானம்

துதிசெய்த மூலத்தைத் தாண்டி யப்பால்
துடியான நான்கெனுமங் குலமே தாண்டப்
பதிசெய்த பிரமனது வீடு மாகும்
பகர்ந்தசுவா திட்டான மென்று பேராம்
அதிசெய்த நால்வட்டம் வளையஞ் சுற்றில்
ஆறிதழா மவ்விதழி னட்ச ரங்கள்
பதிசெய்த ப$^{3}$ ப$^{4}$ ம ய ர-ல வாகும்
பாங்கான நடுப்பீசம் நங்—லங் ஆமே. (35)

நகாரமென்னு மெழுத்ததுவும் பிரமற் காகும்
லவ்வென்னு மெழுத்ததுவும் பிரிதிவி பீசம்
புகாரமென்னுந் துரியாதிக் கிருப்பி டந்தான்
புகழ்கின்ற இருக்கான வேத மாகும்
அகாரமென்னு மன்னமாம் வாக னந்தா
னதினுடைய நிறம் பொன்னின் நிறம தாகும்
மகாருகின்ற விவருடைய தொழிலின் கூறு
மயிரெலும் பிறைச்சிதோல் நரம்போ டஞ்சே. (36)

அஞ்சான பொன்னிறம் பிரமன் பக்க
லடங்காத வாணிநிற்பா ளறிந்து கொள்ளு
தஞ்சான சதுமுகமு மபயவர தத்தந்
தண்டுகமண் டலமுமட்ச மாலை யோடு
பஞ்சான பத்மதளம் பத்மமணி மாலை
பகர்ந்தநவ ரத்தினமாங் கிரீடத் தோடு
திஞ்சான தியானித்துத் தேசியைத்தா னிறுத்திச்
சிறந்தசபா மந்திரத்தைச் செபித்தங் குன்னே. (37)



உன்னியே சரசுவதி யைத்தியானித் தூதி
யுறுதியா யேறுவதற் குண்மை கேளு
தன்னியே சகலவித்தை தருந்தாய் நீயே
தயாநிதியே சிங்குவையில் தரிக்குந் தாயே
முன்னியே நீபிரிந்தால் மூடனுவான்
முனைந்துநீ முன்னின்றால் முத்த னுவான்
கன்னியே யோகசித்தி வாத சித்தி
காயசித்தி ஞானசித்தி கடாட்சிப் பாயே. (38)

என்றுமே தியானித்து வாசி வைத்தங்
கிழுத்துமே நங்கென்றே யிருத்திக் கும்பி
நன்றுமே நகாரத்தால் பிறந்தார் கோடி
நல்வினைக்குந் தீவினைக்கு மெடுத்த காடாய்
என்றுமே பிறவியகன் றிருக்க வென்றே
யேற்றமா மலர்களைக்கொண் டருச்சித் தேத்த
என்றுமே நான்முகன்றன் பதியை விட்டே
படியளந்த திருமாலின் பதியிற் புக்கே. (39)

### மணிபூரகம்

மாலினுட வீடதுதா னறுவிரலின் மேலே
மாசற்ற பிறைபோலே கோட்டை யாகும்
பாலினுட வளையம்போல் பத்திதழாஞ் சுற்றில்
பகர்ந்தவப் பத்திதழி னட்ச ரங்கள்
தாலினுட-ட$^{3}$-ட$^{4}$-ண-த-த$^{2}$-த$^{3}$-த$^{4}$-
தயங்காதநவ்வுடனே -பப$^{2}$-ஃவ்வாகும்
ஆலினுட மங்நடுவிற் பூத மப்பாம்
அதன்பீசம் வங்கென்றே யறிய லாமே. (40)

அறிந்தமணி பூரகத்தின் வீடு மாகு
மப்பனே துரியமதற்கிருப்பி டந்தான்
பிறிந்தெசுரு வேதமுமாம் படிக வண்ணம்
பிரியாம லிருக்குமிதன் வாம பாகம்
கறிந்தவறு சுவையுமங்கே காண லாகுங்
கதித்தநீர் மச்சையோ டுதிரம் மூளை
வெறிந்ததோர் விந்துவோ டைந்து மாகும்
மிக்கசங்கு சக்கரமுங் கருடவா கனமே. (41)

வாகனமாய் லட்சுமியின் சமேதர் பக்கல்
வாசியொடு மங்ஙென்றே யிருத்திக் கும்பி
ஆகனமாய் ஓம்நமோநா ராய ணயவென்
றனுசரித்துச் செபஞ்செய்தஞ் சலிதான் பண்ணு
தேகனமாய்ச் செகமெல்லா மிரட்சிக் குந்தாய்
திரோதைதன் மயக்கத்தில் சூழற்றுந் தாய்தான்
மோகனமாய் மோகமெல்லா மான வீடு
மூக்கிறச்சி குடியிருந்து முதிர்ந்த வீடே. (42)

வீடாகத் திரோதைதா னிருந்த வீடு
வெகுபோகங் காமியத்தை விடுத்த வீடு
வாடாக மனங்கலங்கி நின்ற வீடு
மாயமெல்லாங் குடிகொண்ட மகத்தாம் வீடு
பேடாகக் கருத்தழிந்து பெண்ணைத் தேடிப்
பேய்க்கூத்தாய் நின்றலைந்த பெரிய வீடு
சாடாக வரம்பழித்த சாதி வீடு
தன்மயமாய் வாசிகொண்டு தாக்கி டாயே. (43)

தாக்கியே சந்திரமண் டலத்திற் பூவைச்
சகத்திரமா மிதழாலே தரிக்கப் பண்ணிப்
பாக்கியே பலதூப தீபந் தம்மைப்
பண்பாக மனதாற்பா வகமே பண்ணி
ஆக்கியே மேலேற வருள் தா வென்ற
யட்டமா சித்திகள்தந் தனுப்ப வென்று
போக்கியே யைம்புலனைப் பொறியின் பக்கல்
போக்காம னிறுத்தென்று போற்றிச் செய்யே. (44)

செய்யவே மாலோடு லக்குமி தாமும்
சித்தமகிழ்ந் தப்போது சித்தி யீவார்
பையவே யேறுதற்குப் பயனுஞ் சொல்வார்
பற்பலவாந் தொழிலின்பக் குவமே சொல்வார்
உய்யவே யிறக்காமல் சடந்தா னிற்க
வுறுதியாம் யோகத்துக் குண்மை சொல்வார்
ஐயவே யட்டாங்க மனைந்து பார்க்க
வதற்கதற்கு மங்கமெல்லா மறிவிப் பாரே. (45



அநாகதம்

அறிவுக்கு மேலேறி யெட்டாமங் குலத்துக்
கப்பாலே யநாகதத்தின் வீட்டைக் கேளு
முறிவுக்கு முக்கோண மாக நிற்கும்
முதிர்வளையம் பன்னிரண் டிதழு மாகும்
பரிவுக்குக் க க$^2$ க$^3$ க$^4$ ங ச ச$^2$
பேரான ஜ ஜ$^2$ ஞ ட ட$^2$ வாகும்
இறிவுக்கங் கிதழில்நிற் குமட்ச ரங்க
ளேற்றமாஞ் சுழுத்தியதற் கிருப்பு மாமே. (46)

ஆமென்ற சிகாரத்தி னெழுத்து நடுவாகு
மாண்மையாம் பூதமது தேயு தானும்
தேமென்ற செம்புநிறச் சிவப்பு மாகும்
தேயுவின்றன் பீசமது ரவ்வு மாகும்
ஓமென்ற வொளிகோடி பானு வாகு
முருத்திரனு முருத்திரியு நடுவே நிற்பார்
கோமென்ற வவருடைய குணமே தென்னில்
கொடும்புசிப்புச் சோம்பல்பயந் தூக்க மாமே. (47)

தூங்கவே யெழுப்பிமெள்ளப் பெண்ணைச் சேர்க்கும்
சுகமைந்துஞ் சிவனுமைக்குந் தொழில்தா னப்பா
ஓங்கவே யிரத்தினசிம் மாசன முமாகும்
உமாசகிதர் சடாமகுடா ரத்தி மாலை,
மாங்கவே மான்மழுவும் வரிப்புலித் தோல்
மகாகோடி சூரியப்ர காச மாகும்,
தாங்கவே விபூதிதா ரணர்தேவ தேவர்
சர்ப்பாப ரணந்தரித்த தயாளர் தாமே. (48)

தாமென்றே தியானித்து வாசியைநீ வைத்துத்
தம்பித்து ஓம்ஆம்ஊம் சிவயநம வென்றே
ஓமென்றங் குன்னியே யுருத்திரித்தாய்ப் பதத்தை
யுறுதியாய் மனந்தன்னை யொவ்வப் பண்ணி
ஆமென்ற வைம்புலனை யறிவால் தள்ளி
யாதியந்த மில்லாத தாயே யென்று
காமென்ற கடாட்சம் வைத்தேயருள் தாவென்று
கருத்தாக மனந்தன்னை யொளியில் வையே. (49)

ஒளியான நந்திவா கனமு மாகும்
ஒருசாம வேதத்தி னுறுப்பு மாகும்
களியான காமப்பால் பாய்ச்சல் செய்து
கடுநரையுந் திரையொடுகண் புகைச்ச லாகி
வெளியான சடமழித்து விந்தை யூற்றி
வெறுங்கூத்தாய் ஞானமெல்லாம் விழலாய்ப் பண்ணும்
கொளியான விவருடைய கூத்தைக் கண்டு
கும்பித்துக் குறியோடே கூர்ந்தி டாயே. (50)

## அருஞ்சொற் பொருள்

### பாட்டு எண் : 1 முதல் 50 வரை

காப்பு : இந்து = சந்திரன். எயிற்றனை = (தந்தம்) பல்லுடையவனை; நந்தி = சிவபெருமான்; கொழுந்து = தளிர்; புந்தி = உள்ளம்.

பா. எண் 1—கரி = யானை; கடாட்சித்து = கடைக்கண்ணால் பார்த்து ஆயி = தாய்; (மனோன்மணி); இருடி = (ரிஷி) முனிவர்; மெய்க்காப்பு = உண்மையான ஆதரவு.

பா. எண் 2—தரிக்க = நிலைபெற; கொட்டினேனே = மிக்க அளித்தேன்; கருக்கள் = மறைமுகமாய் இருப்பவை.

பா. எண் 3—திரிகோணம் = மூன்று மூலைகள் உள்ள சக்கரம்; வளையம் = வட்டம்; அட்சரங்கள் = எழுத்துகள்; ஒளியோங்காரம் = பிரணவச்சோதி.

பா. எண் 4—கதலிப்பூ = வாழைப்பூ; ஊடுருவி உட்புகுந்து வெளிப்பட்டு நிற்றல்.

பா. எண் 5—பானு = ஞாயிறு; அணிமா = அட்டசிதில் யிலொன்று, அஃது ஆன்மாவைப் போலாதல்.

பா. எண் 6—லகிமா = அட்டசித்திகளில் ஒன்று ; பஞ்சினொய்தாதல் கனமின்மை யாகுதல்; மகிமா = மகத்துவம், மிகவும் பருத்தல் ;



கரிமா = அட்டசித்தியிலொன்று, அஃது இருப்பு மலையினுங் கனத்தல்;
ஈசத்துவம் = யாவர்க்கும் தேவனாகுதல்;
வசித்துவம் = யாவரும் வணங்க நிற்றல்;
பிராத்தி = அட்டசித்தியில் ஒன்று ; உறுதியின்மை, நிலையின்மை;
பிராகாமியம் = அட்டபாக்கியங்களில் ஒன்று, நிறைவு.
தளம் = இதழ்; வத்துபானம் = அமுதபானம்; வாங்கி = மூச்சை உள்ளே இழுத்து; கும்பித்து = அடக்கி (முறைப்படி); ஊது = மூச்சை அடக்கி வெளிவிடு; இது பிராணாயாமம் எனப்படும். (வாயால் மூச்சைஇழுத்தலும் விடுதலும் கூடாது.)

பா. எண் 7—எண்மர்சத்தி = அணிமாதி என்பர் (முன் பாக்களில் காண்க) உலாவுவார் = இருந்த இடம் விட்டுப் பெயர்ந்து இதழில் நடமாடுவார்; இடத்தோடில் = இடது மூக்குத் துவாரத்தின் வழியாய் மூச்சு வெளி நடந்தால்.

பா. எண் 8—வலத்தோடில் = வலது மூக்குத் துவாரத்தின் வழியாக மூச்சு வெளிநடந்தால்; தெரு ஆறு = ஆறு ஆதார மார்க்கங்களும்; மூலத்தின் = மூலதாரத்தின்;

பா. எண் 9—பருவம் = காலம்; கசடு = மலினம், குற்றம்; சூட்சம் = நுணுக்கம்.

பா. எண் 10—புரியட்டம் = சூக்கும தேகம். (இதன் விளக்கம் கொங்கணர் 500 என்னும் நூலில் பா. எண் 151, 152 இல் விரிவாகக் காணலாம்; மூலம் = மூலாதாரம்; நிருத்தம் = நடனம்; யோகம் = சீவான்மா பரமான்மாவுடன் இணைந்திடல்; உற்பனம் = தோன்றல்; வாதம் = இரசவாதம்; நீச்சு = (போலி) நீத்து = விலக்கி.

பா. எண் 11—புறத்திருந்து = வெளியே இருந்து; லட்சியம் = குறிக்கோள்; தவறொட்டாதே = நழுவவிடாதே; மருவி = சேர்ந்து; சொக்கு = மனதை ஓடவொட்டாமல் நிலைக்கச்செய்; மாச்சலாய் = விடாமுயற்சியுடன்;

பா. எண் 12—உன்னி = மனம் வைத்து; கடிசு = வன்மை; உறுதி கூடும் = திடம் அதிகரிக்கும்; சலிக்கும் = வெறுக்கும்; சுழினை = சுழிமுனை; நெட்டிட்டேறும் = விசையுடன் மேல்நோக்கிப் போகும்; வெருண்டு = பயந்து; கடிகை = நொடி.

பா. எண் 13—தூட்டமாய் = பேரிரைச்சலாய்;

பா. எண் 14—சுழி = சுழற்காற்று; இழிமுனை = இழிவான இடம்; இதம் = இனிமை; ஏறே = முன்னேற்றம் பெறு

பா. எண் 15—ஐம்புலன் : மெய், வாய், கண், மூக்கு, செவி; ஆங்காரம் = சினம்; மிரள = வெருள.

பா. எண் 16—தீனி = உணவு; மோடி = அழகு; மோகம் = ஆசை; பாசம் = பிணிப்பு; (மனை, மக்கள், மண், பொன் இவைகள் மேலுள்ள ஆசையால் ஏற்பட்டது.)

பா. எண் 17—ஆய்ந்து = ஆராய்ந்து; கண்டம் = கழுத்து; தேசி = கழுதை; சோடசம் = பதினாறு.

பா. எண் 18—இருத்தி = தாபித்து; தம்பித்து = கும்பகம் செய்து; ரேசி = மூச்சை வெளிவிடு; மாத்திரை = அளவு; மறுப்பு = எதிர்ப்பு.

பா. எண் 19—வல்லமை = திறமை.

பா. எண் 20—மதுவுண்ணு = மதியொளியமுதம்உண்; அடுக்காறு தளம் = ஒன்றன் மேலொன்றாக அடுக்காயுள்ள ஆறு ஆதாரங்கள்; ஆமம் = அபக்குவநிலை;

பா. எண் 21—தத்தி = பாய்ந்து; முகிந்தவிடம்—முடிவடைந்த இடம்; துவாதசாந்தம் = சிதாகாசப் பெருவெளி; சுருதி = வேதம்.

பா. எண் 22—சகத்திர முண்டகத்தின் பூ = சகஸ்ராரம் என்னுமிடம்; கொய்த = பறித்த; பணிமாறி = தொண்டுகள் செய்து; விவேகம் = புத்தி; துசம் = (த்வஜம்) கொடி;

பா. எண் 23—அஞ்சலித்து = வணங்கி; முகிழ் = மொட்டு; சத்தியெண்மன் = அணிமா முதலிய எட்டு சத்திகள்; முயக்கம் = கூடிப்பணி செய்தல்; கபாடம் = கதவு; எளிசில் = எளிதில்.

பா. எண் 24—அறுபத்து நாலும் = அறுபத்து நான்கு கலைகள் ஆலமுண்டான் = சிவன்.



பா. எண்: 25—வேதாந்தம் = உபநிடதம்; உன்னியுன்னி = தியானித்து; காலைஉண்ணு = காற்றைச் சாப்பிடு; (பிராணயாமம் செய்); ரேசகம் = மூச்சு வெளிவிடல்; பூரகம் = மூச்சை உள்ளிழுத்தல்; மாட்டுதற்கு = செய்வதற்கு;

பா. எண்: 26—கருத்து = மனம்; ஊன்றி = கட்டி; திகை = மயங்கு; "ஓம் ஸ்ரீ ஹ்ரீம் க்லீம் கங்கங் கணபதயே நம;" இது மஹாகணபதி மஹாமந்திரம்; நமன் = யமன்; நாடான் = அணுகான்.

பா. எண்: 27 சத்தம் = ஒலி (சப்தம்); பரிசம் = ஊறு (ஸ்பரிசம்); ரூபம் = ஒளி; கந்தம் = மணம் (நாற்றம்);

பா. எண்: 29 வாசம் = மனம்; கரிச்சு = கரித்து.

பா. எண் 30—இடத்தே = இடது மூக்குத்துவார வழியாக; பூரி = மூச்சை உள்ளே வாங்கு; வலம் = வலது மூக்குத் துவாரம் (வழியாக) ரேசி = மூச்சை வெளிவிடு; கும்பி = (கணக்காக) மூச்சையடக்கு.

பா. எண்: 31—வியாக்கிரமர் = புலிப்பாணி;

பா. எண்: 32—கொள்ளாத போதம் = ஏலாத விளக்கம்;

பா. எண்: 33—செய கண்டி = சேகண்டி என்பாரும்உண்டு (கஞ்சக் கருவி); இயக்கம் = அசைவு, மன விலங்கு = மனமாகிய தளை;

பா. எண்: 34—புரளாமல் = வழுவாமல்; சுருதியந்தம் = உபநிடதம்.

பா. எண்: 36—பிரிதிவி = மண்; இருக்கான் வேதம் = இருக்கு வேதம்; இறைச்சி = ஊன்;

பா. எண்: 37—அடங்காத = மகா; வாணி = சரசுவதி; அபயம் = தஞ்சம்; வரதத்தம் = வரதஹஸ்தம் = வரங்கள் நல்குங் கை; தண்டு = யோகதண்டம் கமண்டலம் = கரகம்; அட்சமாலை = உருத்திராக்க (ஜப) மாலை; பத்மதளம் = தாமரையாதனம்; பத்மமணி = தாமரை மணியாலாகிய (அணி) மாலை; அசபாமந்திரம் = ஹம்சகாயத்திரி;

பா. எண்: 38—தயாநிதி = கருணைக்கருவூலம்; சிங்குவை = நா (ஜிஹ்வா); தரிக்கும் = தங்கும்.

பா. எண்: 39—எடுத்தகாடாய் = தோன்றிய ( பிறவி ) காடாக; நான்முகன்றன் பதி = பிரமனுடைய இருப்பிடம் ( சத்தியலோகம் ) என்னும் சுவாதிட்டானம்; திருமாலின் பதி = (வைகுந்தம்) மணிபூரகம்;

பா. எண்: 40—அறுவிரல் = ஆறங்குலம் ( அங்குளி = விரல் ); தாலினுட = நாவாலசைத்து உச்சரிக்கத் தக்க; அப்பு = நீர்.

பா. எண்: 41—வன்னம் = வண்ணம் = நிறம்; அறுசுவை = இனிப்பு உப்பு, கார்ப்பு, புளிப்பு, கைப்பு, துவர்ப்பு; கதித்த = சுரக்கும்படியான; மச்சை = மூளை (என்பினுள் இருக்கும் தாது); உதிரம் = குருதி;

பா. எண்: 42—சமேதர் = உடனுனவர்; அஞ்சலி (தான்) பண்ணு = கைகூப்பி வணங்கு; மோகனம் = அழகு; மோகம் ஆர்வம்;

பா. எண்: 43—திரோதானம் = மறைத்தல்;

பா. எண்: 44—சகத்திரம் = ஆயிரம்; மனதால்பாவகமே பண்ணி = மானசீகமாய் உன்னிப் பாவனை செய்து (படைத்து); அட்டமாசித்திகள் = இதன்வகை விரிவை பா. எண் 5, 6ல் காண்க; பொறி = ஐந்து அவை :- மெய், வாய், கண், மூக்கு, செவி, என்பன.

பா. எண்: 45—அட்டாங்கம் = யோகத்தின் எட்டுபகுதிகள் அவை:- இயமம், நியமம், ஆசனம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தியானம், சமாதி என்பன; அளைந்து = கலந்து.

பா. எண்: 46—சுழுத்தி = (சுஷுப்தி) = ஐந்து அவத்தைகளி லொன்று.

பா. எண்: 47—தேயு = தீ; புசிப்பு = உண்ணல்.

பா. எண்: 48 - சகிதர் = உடனிருப்பவர்.

பா. எண்: 49—உன்னி = மனத்தில் கொண்டு, ஒவ்வப்பண்ணி = அடங்கச்செய்து.

பா. எண்: 50—கண் புகைச்சலாகி = கண் பார்வை மங்கி (புகை யூடேகாண்பது போலாதல்); கூத்து = நடனம்; கூர்ந்து = கவனித்து; குறியோடே = குறிக் கோளுடன்.



கூர்ந்திட்டு நடுவணையில் காந்தி காணுங்
கூகைக்கி ராக்காலங் குறிகண் டாற்போல்
ஆர்ந்திட்டே யவர்பதத்தில் மனவிலங்கு மாட்டி
யறிவோடே யசையாம லதற்குள் நின்றே
ஏர்ந்திட்டங் கேறுதற்கு வழியைக் கேட்டே
எட்டெட்டுச் சித்திக்கு மியல்பு வாங்கி
வார்ந்திட்டு வாதத்தின் கருவெல்லாங் கேட்டு
வகையான காயசித்தி மார்க்கங் கேளே. (51)

கேளாமே சந்திரமண் டலத்திற் புக்குங்
கொடியான மலர்வாங்கிப் பதத்தில் வைத்துத்
தேளாமே சிவனோடு சத்திக் குந்தான்
சிதையாமல் மனந்தன்னைத் திருவடிக்கீழ்ச் சேர்த்து
வாளாமே மந்திரத்தை யுன்னி யுன்னி
வாசியைநீ மறவாமல் மருவிப் பூட்டித்
தூளாமே நீயகற்றித் தூபந் தீபந்
தோத்தரித்து விடைதரவே சுளுக்கா யேறே. (52)

விசுத்தி

ஏறியே பன்னிரண்டங் குலமே தாண்ட
வேற்றமாம் விசுத்தியென்ற தலமு மாகும்
மாறவே யறுகோணம் வளைய மொன்று
மகத்தானவோர் பதினறி தழுள தாகும்.
ஆறவே யிதழுக்கு ளட்ச ரங்கள்
அ-ஆவும் இ-ஈ யும் உ-ஊ வோடு
தூறவே ரு-ரூ வும் லு-லூ வோடு
துணையாம் ஏ-ஐ ஓ-ஔ அம்-அஹவே (53)

அம்முதலா யோர்பதினா றெழுத்து மிட்டே
யறுகோண நடுவேவ காரம் நிற்கும்
வம்முதலாய் மகேசுவர மகேசுவரியும் நிற்பார்
மகத்தான சொர்ப்பனத் துக்கிருப்பு மாகும்
யும்முதலாய்ப் பூதமது வாயு வாகும்
புகழான பீசமது யவ்வு மாகும்
நம்முதலா யதர்வணவே தந்தா னாகும்
நல்லமனே வாகனமாய் நாட்ட லாமே. (54)

நாட்டவே யிவருடைய தொழிலி னட்பு
நடத்தலோ டோடலும் மயங்கிக் கிடத்தல்
நீட்டமாம் நிறுத்தல் கலங்கா திருத்தல்
நிலையைந்தின் விபரத்தை நிலைக்கக் கேளு
பூட்டமாம் புசித்தலோடி ராகங் கேட்டல்
பொங்கியகோ பஞ்சண்டை சுமையைத் தாங்கல்
ஓட்டமாம் ஓங்காரம் ஊனைக் கண்டால்
உயர்வாயைத் திறந்திடுத லுறுதி காணே. (55)

உறுதியாம் ருசியாறும் வாயி னுள்ளே
உரிசைதான் வாய்க்குள்ளே யப்பா லில்லை
பருதியாம் பரமென்ற பீட மப்பா
பரத்தினடி யென்றுமே பண்பு மாகும்
பிறுதியாம் பேரெட்டின் களையை வாங்கிப்
பிசகாமல் நாலதனி லொக்கச் சேர்த்தே
அறுதியா யாதார மெல்லாம் பார்த்தே
யப்பனே நாலுக்கு ளழைத் திடாயே. (56)

அழைத்திட்டு நாலுக்குள் வங்கென் றூணய்
ஆதியாம் ஓம்நமசி வாய வென்றே
துழைத்திட்ட வாசியைநீ வாயு வீட்டில்
சுருக்கிட்டுக் கட்டிடவே யோடா தப்பா
பழைத்திட்ட பதினறு தளத்திற் ருனும்
பாங்கான சீவகலை யிருப்பு மாகும்
திழைத்திட்ட சீவகலை யிருந்த தாலே
சிறப்பாகப் பாடிவைக்குந் திறமை யாமே. (57)

திறமையா யுரிசையோ டுண்ணப் பண்ணும்
சீவகலை யிருந்துகொண் டெட்டு நாலாய்ப்
புறமையா யிருந்துகொண்டு நாலும் பாழாய்ப்
புத்தியுள்ள சீவகலை மதிபோல் தேய்ந்து
நறமையாய் நரைதிரையாய்ச் சேர மாண்டு
நலமான சீவகலை போகிறதைக் காணூர்
குறமையாய் நாதமது கண்டத்திற் காணும்
குறிப்பான திரோதையதன் கூத்துத் தானே. (58)



தானன வாயுவதின் வீட்டில் நின்று
தம்பித்தாத் தாளைத்தாள் விலங்கு பூட்டி
போனன சந்திரமண் டலத்திற் பூவால்
போற்றியே யடிவணங்கி வாசி பூட்டித்
தோனன மேலேற வழிதா வென்று
சுத்தசை தன்னியத் தைத்தோத் தரித்து
வானன வாதசித்தி யோக சித்தி
மகத்தான காயசித்தி மார்க்கங் கேளே. (59

மார்க்கமா மந்திரத்தை யுன்னி யுன்னி
வாசியைநீ மறவாமல் மருவிப் பூட்டி
ஆர்க்கமா யங்வென்று கும்பித் துநிற்கில்
ஆத்தாளு மப்பனுமே யகம கிழ்ந்து
மார்க்கமாய் வாதத்தின் வழியுஞ் சொல்லி
வரிசையோ டேறுதற்கு வழியுஞ் சொல்வார்
ஊக்கமாம் மகேசுவரத் தின்பதியை விட்டே
உயர்ந்தேறிப் பதினோரங் குலமே லேறே. (60)

## ஆக்கினை

மேலேறி யிருபுருவ நடுமை யத்தில்
மிகையான அண்டம்போல் நிற்கு மப்பா
வாலேறி வட்டமாம் வீடு போலே
வளையமொன்றி ரண்டிதழ்தான் ஹ ள வாகும்
ஆலேறி யங்வென்ற வட்சரந்தா னடுவே
யாகாச பூதமாம்வங் பூத பீசம்
ஆலேறி மனோன்மணியுஞ் சதாசிவனும் நிற்பார்
அவத்தைதான் சாக்கிரத்தின் வீடு மாமே. (61)

வீடுமாம் வண்ணமது மேக வண்ணம்
விளைக்கின்ற தொழிலதுதான் காமக் குரோதம்
வாடுமாம் லோபமொடு மோக மாகும்
மகத்தான மாச்சரியத் தோடைந் தாகும்
நாடுநான் முகன்மாலும் சிவன்ம கேசன்
நலமாகக் காப்பார்கள் திக்கைத் தாலும்
தாடுசதா சிவந்தானுந் தளவா யாகுந்
தளவாயைக் கண்டக்கால் சகல மாமே. (62)

தளவாயைக் கண்டக்கால் சமுசயங்கள் தீரும்
சங்கற்ப விகற்பமென்ற சட்டை நீங்கும்
தளவாயைக் கண்டக்கால் தாயோடு சேர்ப்பார்
சச்சிதா னந்தத்தின் தன்மை காண்பார்
தளவாயைக் கண்டக்கால் சகலசித்தி யாகுந்
தளவாயோ டெடுத்தகள்ள ஊனந்து நிறமாகும்
தளவாயை மற்றென்றால் காணு தப்பா
சாங்கமா யுரைத்துநீ வாசி மாட்டே. (63)

உரைத்துமே யாக்கினையாஞ் சக்க ரத்தி
லுகந்துமே மனோன்மணியை யுச்ச ரித்து
மரைத்துமே மந்திரத்தைச் சொல்லக் கேளு
மருவுங்-க-ஏ-ஈ-ல-ஹ்ரீமு மாகும்
அரைத்துமே ஹ-ஸ-க- லவ்வு மாகும்
அதன்பின்பு ஹ்ரீம்-ஸ-க-ல-ஹ்ரீமு மாகும்
முரைத்துமே முக்கண்டம் பஞ்சதசாட் சரியை
முனிந்துமே யுச்சரித்து மூட்டு நீயே. (64)

மூட்டியே தாயினது பதத்தைக் கண்டால்
முஷ்கரமா மாயையெல்லா மொழிந்து போகும்
நாட்டியே எட்டோடே நாலைக் கூட்டும்
நாதாந்த சித்தியெல்லாம் கணத்தி லாகும்
மாட்டியே தமருக்குள் புகுத லாகும்
மயிர்ப்பாலம் நெருப்பாறு கடக்க லாகும்
நீட்டியே நிராதார மறிய லாகும்
நிச்சயமாய்க் குறிகளெல்லாம் நினைக்கி லாமே. (65)

நினைக்கவே யைம்புலனு மொடுங்கிப் போகும்
நோய்மூப்புச் சாக்காடு நரைதிரையும் போகும்
கனைக்கவே காயசித்தி வாதசித்தி காணுங்
கண்ணிமைக்குள் போமுயிரைக் கடுக மீட்கும்
அனைக்கவே சாக்கிரத்தி லிருந்து கொண்டே
ஆயியோ டப்பனிவர் கூத்துப் பார்த்துத்
தனைக்கவே சரியையொடு கிரியை யோகம்
சார்ந்தோர்கள் ஞானமெல்லாந் தாறு னரே. (66)



## குருபதம்

தானுன மனோன்மணியைத் தாண்டி யப்பால்
தனித்ததோ ரெட்டுவிரல் மேலே கேளு
கோனுன குருபதந்தான் கூடிப் பாரு
குறிப்பான விதழ்தானே ராயி ரத்தெட்
டானுன நடுமையமைங் கோண மாகும்
அகாரமாம் உகாரமொடு மகார மாகும்
நானுன நாதமொடு விந்து வைந்தும்
நலத்தவைங் கோணத்தில் நிற்கும் பாரே. (67)

பார்க்கவே யோங்காரம் நடுமை யத்தில்
பரிசுத்த வொளியாகி யுதிக்கும் பாரு
பார்க்கநிரா காரம்நிர் மலம்நின்ற வடிவாம்
பரந்தோடும் வாசியைத்தா னதற்குள் வைத்து
நேர்க்கவே யோடாமல் நிறுத்தியதிற் பாரு
நிலையாத பிறவியறும் பூரணமுட் கொள்ளும்
ஆர்க்கவே யடியான வேதாந் தத்தி
னுதியென்ற பொருளொருவ ரறியொண் ணாதே. (68)

## காயத்திரி

அறியொணுப் பிரமரந்தி ரமென்று பேராம்
அதினுடைய நிறந்தானும் படிக வண்ணம்
நெறியொணு நித்தியாநித் தியநிருப மாகும்
நித்தியசுத்த பரிபூர்ண நேர்மை யாகும்
பறியொணுப் பரிபூர்ண சச்சிதா நந்தம்
பகரரிய நிரஞ்ஜநாய வித்ரு ஹேயாம்
நெறியொணு நிராபா$^{4}$ ஸாய தீ$^{4}$ம ஹீயாம்
நெறியதனல் சூநுக்ஷ்ம-ப்ர-சோ-த$^{3}$ யாதே. (69)

தேவென்ற விருபத்து நாலாய் நின்ற
தெளிவான காயத்திரி தனைச்செ பித்து
வாவென்ற வாசியைநீ யிருத்தி வைத்து
மனந்தன்னைப் பொறிவழியே போகொட் டாமல்
தேவென்றங் கிருத்தியே கும்பித்துக் கொண்டு
சிற்சொரூப காயத்தி ரிதனைச் செபிக்கப்
பூவென்ற பிறவியற்றுப் பூரணத்தில் லயிப்பாய்
போக்குமில்லை வரத்துமில்லை பொருளு மாச்சே. (70)

## துவாதசாந்தம்

பொருளாக மேலேறில் துவாத சாந்தம்
போக்கோடே பதினென்றும் பிரித்துப் பாராய்
அருளாயி யுன்மணியோ டெட்டுச் சத்தி
யருள்மயமாம் பரையொன்று பரந்தா னென்று
தெருளான பதினென்றுஞ் செப்பி னேன்யான்
செப்பரிது காரணந்தா னடியேன் காணே
னருளான நந்தி யேழா யிரத்தில்
நாட்டினர் நன்னறிவை நான்கா ணேனே. (71)

காணாத மார்க்கமெல்லாங் காணும் நேராய்க்
கடிதான முனைமூக்கில் கடிந்தாற் சேரும்
ஊணாதே யூணினல் பிடரிக் குள்ளே
யுற்றுப்பா ருறுதியோ டுரிமை காணும்
கோணாத குண்டலியோ கத்தை நோக்கிக்
கூர்ந்துபார் பதினென்று மொன்றுங் காணும்
நாணாதே நடுமையம் நோக்கி னக்கால்
நற்சிவமா முருத்திரன்ருன் கோடி பானு. (72)

பானுன நூல்சொன்ன படியே வாய்க்கும்
பரந்தோடும் வாசியொடும் பழகி னக்கால்
வானுன வார்த்தையாய்ப் பார்த்திட் டக்கால்
வளமாகக் காய்க்குமோ நீர்க்காய் தானும்
நானுன நாய்தனக்கேன் தேங்காய் தானும்
நலமான யோகசித்தி பார்க்குங் காலம்
கோனுன பரத்தினது முடிவை நோக்கு
குடியிருந்த வாசியின்றன் முறையைக் கேளே. (73)

கேளுநீ மூலத்திற் குமட்டும் வகாரத்தைக்
கீழ்போற்றிச் சிகாரத்தைப் போகாமல் ரேசி
நீளுநீ ரேசித்துப் பூரித் துப்பார்
நிர்மலமாங் குண்டலியில் நந்தி காணும்
வாளுநீ நந்திவந்து வசனிப் பாரப்பா
மகத்தான சித்தியெட்டும் ஞானந் தானும்
தாளுநீ வாசிவைத்து மந்திர மகாரத்தை
நலமாகக் கண்டிட்டே நாட்டி டாயே. (74)



நாட்டியே மூலத்தைத் தாண்டிப் பின்பு
நலமான கஞ்சனது பதியிற் கூடி
ஓட்டியே வகாரத்தை யுறுத்தி நோக்கி
யொளியான சிகாரத்தா லுள்ளே ரேசி
பாட்டியே பண்டான பிறவி நீங்கும்
பண்பான நான்முகனைக் கண்ட தாலே
மாட்டியே கஞ்சனது பதியைத் தாண்டி
மாலிருக்கும் பதியூடே மருவி நில்லே. (75)

மருவியே வகாரத்தை யுட்பூ ரித்து
மாதவமாஞ் சிகாரத்தை யுள்ளே ரேசி
பருவியே பஞ்சநரை யெல்லாம் போக்கிப்
பாலனுமாய்ப் பதினறு வயது மாவாய்
உருவியே மால்கடந்து ருத்திரன் பதியி
லுணர்வான வாசியைநீ யுறுத்தித் தாக்குத்
தருவியே சிகாரத்தை யுள்ளே ரேசி
சடந்தானுஞ் சிவப்போடிச் சித்தி யாமே. (76)

சித்தியா முருத்திரன்தன் பதியைத் தாண்டித்
தெளிவான மகேசனது பதியிற் புக்கங்
கத்தியாம் வகாரத்தை யசையா மற்பூரித்
ததற்குள்ளே சிகாரத்தை யுள்ளே ரேசி
பத்தியாம் வயதுபிள்ளை யாவாய் நீதான்
பகருள்ளங் கைநெல்லிக் கனிபோ லாகும்
துத்தியாம் சிவயோகம் வைத்துப் பாரு
துடியான குளிகையெல்லாஞ் சுறுக்கி லாமே. (77)

சுறுக்கான மகேசுவரன் தன்பதியைத் தாண்டிச்
சூழ்ந்தச தாசிவத்தே காலை யூன்றி
மறுக்காத சிகாரத்தை வைத்து நோக்கு
மகத்தான சித்தோடு கமன மாகும்
செறுக்காத மனோன்மணிமா தாவின் பாதம்
திறமான வாசிவைத்த படியே பார்க்க
வெறுக்காத மெய்ஞ்ஞான நிராகா ரந்தான்
மெய்யான வாசனைதா னும்நீ யாமே. (78)

நீயான குருபதத்தில் நின்றா யானால்
நீடுசிவ யோகமெனும் வாசி யூட்டும்
தாயான பூரணமுஞ் சகலதரி சனமாஞ்
சதமான வகாரசிகா ரத்தின் மார்க்கம்
வாயான வஸ்துவைத்தான் வைத்து மாங்கே
மதியோடே பார்மனதில் மகத்தாஞ் சித்தி
தீயான நீக்கவிட மற்று நின்று
சிறந்திடுமே பூரணந்தான் சித்து மாமே. (79)

## போகர் அண்டங்களிற் பாய்தல்

சித்தாகப் பாய்ந்தேனா னண்டந் தன்னில்
தெளிவாமண் டத்தின்திறஞ் சொன்னார் நந்தி
அத்தாக வண்டியஞ்சுந் தனிய ருக்கா
வதுதோன்றி யிருந்ததுதா னடுக்கு மாகிப்
பத்தாக நுழையென்றார் பாட்டர் தாமும்
பாலித்த சொரூபத்தை வாயில் வைத்துக்
கத்தாகக் கமலினியைக் கரத்திற் கட்டிக்
கனற்சோதி யண்டம்போய் நுழைந்திட் டேனே. (80)

நுழைந்திட்டே னிருவிகற்ப நிறைவாம் யோகி
நுவல்ஞானி சதகோடி சித்தர் கோடி
திழைந்திட்டுத் தெவிட்டாது பார்த்து நின்றேன்
சித்ததுதா னுனக்கென்னா லாச்சு தென்றார்
குழைந்திட்டுக் கோடியறு பதுமாச் சென்றேன்
குறியான சித்தின்னம் பாரென் றார்கள்
மழைந்திட்டு நுழைந்தேன்பின் னோரண் டத்தின்
மகத்தான சித்தரைக்கை கூப்பி னேனே. (81)

கைகூப்பிக் கடியதோர் பதுமை போலக்
கையினாற் றடவினேன் கைதட் டாமே
ஐகூப்பி நிராகாரத் தடைந்த மேலோ
ரறிவோரைக் கண்டஞ்சி வலமாய் வந்தேன்
பைகூப்பிப் பரிவாமோ ரடுக்குத் தன்னில்
பாய்ந்தேநான் முடியேறிப் பரிந்து போந்தேன்
செய்கூப்பி யண்டமெல்லாஞ் சோதித் தேநான்
சீக்கிரமா மறுவண்டம் பாய்ந்திட் டேனே. (82)



### நூன் முறை

பாய்ந்திட்டே னண்டத்தி னுழைந்து பார்த்தேன்
பலகோடி சித்தர்கள் சம்பா ஷித்தார்
ஆய்ந்திட்டு மனைந்திடுநூ லார்தான் சொன்னா
ரையரே யெனக்கேட் டேனடி வணங்கித்
தாய்ந்திட்ட சிவன்றான்றாய்க் கன்று சொன்னார்
தனியேழு லட்சமெனக் கண்டு பார்த்தேன்
தோய்ந்திட்ட விந்தநூல் பெருக்க மெத்த
சுருக்காதே போனதென்ன வெனக்கேட் டேனே. (83)

கேட்டதற்கங் குத்தரந்தான் சித்தர் சொன்னார்
கிரந்தத்தைச் சுருக்குதற்குச் சிவனாலு மாகா
மாட்டதற்கு வேறான சாத்தி ரத்தில்
மகத்துவமாஞ் சுருக்குண்டோ வென்று கேட்டேன்
சூட்டதற்குச் சித்தர்கள் தான்சொன் னமார்க்கம்
சுருதிநந்தி தொகுப்பெல்லாந் தேர்ந்து பார்த்தே
ஏட்டதற்கு ளேழுலட்ச மியல்பு தன்னை
ஏற்றகல்லு வெட்டுப்போ லிசைத்திட் டாரே. (84)

இசைத்திட்டா ரேழுலட்சத் தியல்பை யெல்லா
மெளிதான வாயிரமா யிசைத்து வைத்தார்
பசைத்திட்ட நூலெங்கே யிருக்கு தென்றேன்
பாங்கான தட்சிணபா கத்திற் றானும்
அசைத்திட்ட நூற்றறுப தாமண் டத்தி
லமைத்துவைத்தார் சித்தர்கள் படிப்பா ரேடு
கசைத்திட்ட வேட்டில்கரு வென்ன சொல்லும்
கருமத்தைக் கடாட்சித்துச் சொலுமென் றேனே. (85)

என்றவுடன் படிக்கின்ற நூலிற்றானு
மேற்றமாம் பயனெல்லாஞ் சொலுமோ வென்னத்
தன்றதோர் நூலிற்சா ரணைகு ருத்தான்
தாக்குமே யோர் பதினா றங்கந் தானும்
தென்றுமே யெட்டெட்டும் பலசித் தோடு
தியங்காம லாடமற் றோர்க்குக் கிட்டா
நன்றுசிவ யோகந்தேங் காமல் தேங்கும்
நலமான பூரணமும் லயம தாமே. (86)

லயிக்கும்பூ ரணத்திற்றூங் காமற் றூங்கும்
நலமான சொரூபத்தைக் காட்டும் பாராய்
அயிக்குமே நூலாரார் கையி லுண்டோ
வவருடைய பேர்தம்மைச் சொல்லு மென்றேன்
கயிக்குமே வாசிக்குக் குருவு மான
காரணமாம் நந்தியவர் காட்டி நூலைச்
செயிக்குமே சித்தருக்குக் கொடுத்தார் நூலைத்
திரு மூல ரறைந்தநூல் திடமென்பாரே. (87)

திடமான நூலிற்செப் பினது சொல்லாய்
தியங்காத சாரணைதான் கட்டு மார்க்கம்
குடமான குடோரியொடு சிராவ ணந்தான்
கொடிதான பறிக்குருவும் சிந்தூ ரங்கள்
தடமான லவணமொடு சத்துச் செம்பு
தனிப்பதங்கங் குளிகையொடு செயநீ ராகும்
கடமான திராவகமும் மயனக் கூட்டங்
கடிசான மூலிகைமா வவிழ்தந் தானே. (88)

அவிழ்தமொடு வத்துவகை பதினா றங்க
மடங்கலுஞ்சொன் னாரோரா யிரத்தி னுள்ளே
எவிழ்தமொடோ ரேழுலட்சங் கிரந்தப் போக்கை
யெடுத்தெண்ணா யிரமாயென் பாட்டர் சொன்னார்,
கவிழ்தமொடெண் ணாயிரத்தைத் திரட்டித் தானுங்
கதித்தவையா யிரமாய்ப் பின்பு சொன்னார்
முவிழ்தமூவா யிரமு மாயிரம்
முந்நூற்று முப்பஃது மூன்றென் றாரே. (89)

என்றாரே சாற்றினநூ லேழி லேதா
னேழுலட்சங் கிரந்தத்தின் போக்கெல் லாந்தான்
கன்றாரே கரும்பான பாகுபோல் திரட்டிக்
கருவெல்லாங் க்ண்டுணர்ந்த படியே சொன்னார்
தன்றாரே தந்தைகா லாங்கி நாதர்
தாமுமே சகலநூல் பார்த்துத் தேர்ந்தே
அன்றாரே யகண்டவைந்து காண்டஞ் சொன்னா
ராயிரத்தெட் டண்டமெல்லா மளாவி னேனே. (90)



அளாவினே னூற்றறுப தாமண் டத்தி
லையர்நந்தி சாத்திரமு மளைந்து பார்த்தேன்.
துளாவினேன் பாட்டர் சொன்ன வேழு நூலைத்
துதிசெய் தேன் சுருதியாம் வாக்கி யத்தைக்
களாவினேன் காலாங்கி யையர் நூலைக்
கருத்திருத்திச் சனகாதி நால்வர் நூலும்
விளாவினேன் இருடி சித்தர் நூலை யெல்லாம்
வெட்டவெளி யாய்த்தூற்றி வீசி னேனே. (91)

வீசினே னெழுகாண்ட மிடுக்காய்ச் சொன்னேன்
வெட்டவெளி யாவதற்கு நிகண்டுஞ் சொன்னேன்
தூசினேன் சூத்திரமெ ழுநூற்றுச் சொச்சம்
சொல்லுறுதி நிகண்டுபத் தேழு நூறு
பூசினேன் யோகத்துக் குறுதி சொன்னேன்
பூட்டுகிற லட்சியத்தின் போக்குஞ் சொன்னேன்
ஓசினேன் மந்திரத்தி னுறுதி சொன்னே
னுறுதியாய் வாசியென்ற யோகந் தானே. (92)

தானான காயத்தை யுறுதி பண்ணா
தனித்தோடும் வாசிவைத்து வைத்தங் கங்கே
பானேயெந் நேரமுந்தான் பழக்க மாகிப்
பார்த்துநீ தெளிந்தக்கால் தேகந் தூக்கும்
தேனாகத் தெரியாத காலத் திற்றான்
சித்தெட்டு மெய்தாது சித்தி யாது
மானாக வாசிவைத்தங் குறைக்கா தார்க்கு
மருவாது பூரணந்தான் வெளியா காதே. (93)

வெளியான வாசியைத்தான் வரவ ழைத்து
வீட்டுக்கு ளங்கங்கே வைத்திட் டுத்தான்
தளியாக வைத்திட்டுச் சாதித் தக்கால்
சந்தித்து வாசியுமீ சனுமொன் றாகும்
வளியாக வாசியைப்போல் சித்தொன் றில்லை
மாசித்துச் சிவனவனும் வாசி யொன்றில்
ஒளியாக வாசியஃ துயிரை மீட்கு
முறுதியாஞ் சிவயோகத் துண்மை தானே. (94)

உண்மையா யிதைப்போல வெளிதில் சித்தி
யுத்தமனே மற்றென்றி லில்லை யேதான்
பண்மையாம் பல்லுயிராங் கால மெல்லாம்
பாத்தாலுங் கிட்டாது பாரி லில்லை
துண்மை யாய்ச் சொல்லுயர்ந்த வாசி தானுஞ்
சுருதிமுடிந் திடஞ்சுளுவாஞ் சூடச மாகும்
வண்மையாம் வாதிசித்த ரிஷிகள் யோகி
வாசியைப்போல் சித்தியில்லை மறித்து நோக்கே. (95)

நோக்கவே சோம்பினல் நுட்பங் காணுய்
நுணுக்கத்தில் வாதம்வந் தங்கெய் திடாது
பார்க்கவே சோம்பியே நின்ரு யானல்
பரமுந்தான் கிடையாது பாழாஞ் சென்மம்
பூக்கவே வாசியைத்தான் விட்டா யானல்
புகல்பிறவிச் சாகரத்தில ழுந்திப் போவாய்
நீக்கவே வாசியைத்தான் நிறுத்து வோர்க்கு
நிட்கள்மாஞ் சோதி யொளி யாகுங் காணே. (96)

காணவே பரத்தினடி கண்ணே யாகுங்
காண்பதரி தரிதுகண் ணெட்டா தென்றீர்
பாணவே பரத்தினடி பார்க்கு மார்க்கம்
பண்பட்ட கண்கள்முனை மூக்கில் வைத்துக்
காணவே காலையசை யாமல் நோக்கிக்
கதிக்கின்ற நாலிலொன்று சேரில்வெறும் பாழாம்
பாணவே மனோன்மணித்தாய் பட்டப்பக லாவாள்
பகரரிய ரவிகோடி யொப்பு மாமே. (97)

ஒப்பல்ல வொப்பல்ல கதித்தபூ ரணந்தா
னுவமையாங் கரையில்லை பார்த்திட் டக்கால்
கப்பல்ல களங்கமற்ற பூர ணந்தான்
கரையற்று நின்றவொளி மகாபோ தந்தான்
நிப்பல்ல நின்றபெண் பிள்ளை காட்ட
நிரையற்ற நிர்க்குணந்தான் மவுன மாகும்
மூப்பல்ல மவுனமாஞ் சமாதி யுற்று
முனை நாசி யூடினல் முத்தி யாமே. (98)



மூத்தியாங் கானகத்தி லிருந்தா லென்ன
மூரிவள நடுவூரில் வாழ்ந்தா லென்ன
தத்தியாம் தானமென்ன தன்ம மென்ன
சாவென்ன பிழைப் பென்ன சாந்தி யானல்
வத்தியாம் வானமென்ன அண்ட மென்ன
வாருதியும் பொய்யாச்சு மனஞ்செவ் வானல்
புத்தியாம் பொய்யாமோ கண்ட வெல்லாம்
பிரிதியுத்த சாங்கத்தால் பொய்யென் பாரே. (99)

என்பதே கண்ணூரக் கண்ட தெல்லா
மெய்தாமற் காணுதே போன தென்ன
அன்பதே னய்யர்பதம் வாசிவைத்தே
யடைந்தார்க்குக் காணுதஃ தசைத லின்றேல்
நன்பதே காணுமது நடனந் தானும்
நலமாக வூன்றதச நாதந் தோன்றுந்
துன்பதே சுருதிமுடிந் திடமுந் தோன்றுஞ்
சுத்தசை தன்னியமாம் போத மாமே. (100)

## அருஞ்சொற் பொருள்

### பாட்டு எண் : 51 முதல் 100 வரை

பா. எண்: 51—நடுவணை = நடுவில்; காந்தி = ஒளி; கூகை = ஆந்தை; குறி = இலக்கு; ஆர்ந்திட்டு = பொருந்தி நின்று; எட்டெட்டுசித்தி = சிலர் 16 என்றும் சிலர் 64 என்றும் பொருள் கொள்வர். முதலதை பேறுகளாயும் பின்னதைக் கலைகளாகவும் விவரிப்பர்; மற்றும் விளக்கம் கிடைத்தாலும் கொள்க; கரு = உட்பொருள்;

பா. எண்: 52– கெடி = மணம் (கடி யென்பது மருவியது); சிதை யாமல் = சிதருமல்; வாளாமே = சும்மா இராமல்.

பா. எண்: 54—சொர்ப்பனம் = கனவு; மனோவாகனம் = மனம் சஞ்சரிக்கத்து ணைசெய்யும் தன்மையுள்ளது.

பா. எண்: 56—ருசி = உரிசை = சுவை.

பா. எண்: 57—வாசி = சுவாசம் = மூச்சு, மதி = சந்திரன்; சேர = நண்ண ; திரோதையதன் = மறைத்தலெனும் கிரியையின்; கூத்து = நடிப்புகள்.

பா. எண்: 58—தாள் = பாதம்.

பா. எண்: 60 -ஆத்தாளும் அப்பனும் = மகேசுவரியும் மகேசுவரனும்; பதி = இருப்பிடம் (விசுத்தி)

பா. எண்: 61—சாக்கிரம் = விழிப்பு (ஜாக்ரத்).

பா. எண்: 62—காமம் = வேட்கை; குரோதம் = சினம்; லோபம் = ஈயாக்குணம்; மோகம் = பேரவா ; மாச்சரியம் = பொருமை; தளவாய் = தலைவர்;

பா எண்: 63—சமுசயங்கள் = ஐயப்பாடுகள்; சங்கற்பம் = மன வுறுதி ; விகற்பம் = மனமாறுபாடு; சட்டை = போர்வை.

பா. எண்: 64—பஞ்சதசாட்சரி = பதினைந்து எழுத்துகளாலான தேவீ மகாமந்திரம்.

பா. எண்: 65—கணத்தில் = (க்ஷணத்தில்) நொடி (நேரத்தி)யில்;

பா. எண் 66—கடுக = விரைவில்;

பா. எண்: 70—போக்குமில்லை வரத்துமில்லை = இறப்புமில்லை பிறப்புமில்லை,

பா. எண்: 71நந்தியேழாயிரம் = இது நந்தி தேவர் இயற்றிய நூல்; தெருள் = தெளிவு; நன்னர் = நன்கு

பா. எண்: 72—உறுதி = மனத்திட்பம்; உரிமை = சுதந்திரம்.

பா. எண்: 73—நீர்க்காய் = தேங்காய்.

பா. எண் 74—வசனிப்பார் = உரையாடுவார்.

பா. எண்: 75—கஞ்சனது பதி = சுவாதிட்டானம் (பிரமனது இருக்கை) கஞ்சன் = பிரமன்; பண்டான = பழமை யான; மாலிருக்கும் பதி = மணிபூரகம்.

பா. எண்: 76—பஞ்சநரை = ஐந்திடத்து வெள்ளை உரோமம் = தலை, தாடி, மீசை, மூக்கு, இமைப்புருவம்; குறி. உருத்திரன் பதி = அநாகதம்.

பா. எண்: 77—மகேசனது பதி = விசுத்தி; துடியான = சுறுசுறுப்பான;

பா. எண்: 78—கமனம் = கமனக்குளிகை; நிராகாரம் = உணவுட் கொள்ளா நிலை, உருவமில்லாத நிலை (அருவம்).

பா. எண்: 79—சதம் = (ஸ்திரம்), நிலை.



பா. எண்: 80—கமலினி = ஒருவகை இரசமணி.

பா. எண்: 81—கைகூப்பினேன் = அஞ்சலி செய்தேன்.

பா. எண்: 82—நிராகாரம் = ஊண்கொள்ளாமல் இருப்பவர்; அறிவோர் = ஞானிகள்.

பா. எண்: 83—சம்பாசித்தார் = உரையாடினுர்; அணைந்திடு நூல் = கலக்கிடுகின்றபனுவல்.

பா. எண்: 84—உத்திரம் = பதில்; கிரந்தம் = பனுவல் நூல்.

பா. எண்: 85—இசைத்து = இயற்றி; தட்சிணபாகத்தில் = தென் பகுதியில்; கசைத்திட்ட = கட்டிய; கரு = உட் பொருள்;

பா. எண்: 86—ஏற்றமாம்பயன் = மேலானபயனை (நூற் பொருளை சித்துகளை). சாரணை = இரசமணிக்குத் தீட்சை செய்விக்கும்முறை; குரு = எந்த உலோகத்தையும் உபரசங்களையும் பற்ப செந்தூரங்களாக்கவும் கட்டவும் பயன்படும் மருந்து; அங்கம் = பகுப்பு; தியங்காமல் = மயங்காமல்; லயம் = ஒன்றித்தல்.

பா. எண்: 87—திடம் = உறுதிப்பாடு (உடையது)

பா. எண்: 88—பறிக்குரு = தங்கத்தை அடிப்படையாக்கிய குரு (சுன்னம்) வேதைக்கு ஆம்; மயனம் = மெழுகு; அவிழ்தம் = ஔஷதம் = மருந்து.

பா, எண்: 89—அடங்கலும் = முற்றிலும் ; முப்பஃது = (30) முப்பது;

பா. எண்: 90—கருப்பான பாகு = கரும்பிலிருந்துண்டான பாகு; திரட்டி = ஒருங்கே சேர்த்து; காண்டம் = நூலின் பகுப்பு; அளாவினேன் = எட்டினேன் (போய் மீண்டேன்).

பா. எண்: 91—அனைந்து = சொற்பொருள் கருத்திலாழ்ந்துத் திளைத்துத் ; துளாவினேன் = ஆராய்ந்தேன் ; சனகாதி நால்வர் = சனகர், சனந்தனர், சனுதனர், சனத்குமாரர்.

பா. எண்: 92—மிடுக்காய் = மேன்மைபெற; வெட்டவெளியாவதற்கு = (மறைப்பின்றி) தெளிதற் பொருட்டு; உறுதி = வலிமை; ஏகம் = ஒன்று.

பா. எண்: 93—தேகம் தூக்கும் = உடலைமேலெழச் செய்யும்.

பா. எண்: 94—வெளியான வாசியை = நம்முடலைவிட்டு ரேசித்து விட்ட மூச்சுகளை; வரவழைத்து = சேமித்து; வீட்டுக்கு . ... கங்கே = உடலிலுள்ள ஆருதாரங்களில் வரிசைப்படி சேமித்துத் தாக்கி; சந்தித்து .......... ஒன்ருகும் = வாசி ஈசனிடம் நண்ணி ஒன்ருய்க்கூடி

பா. எண்: 95—சுருதிமுடிந்திடம்=வெளி (முப்பாழ்); மறித்து=மறுபடியும் (சிந்தித்துப்).

பா. எண்: 96-நுணுக்கத்தில் = எளிதில், பரம் = மேலுலகம்; சென்மம் = பிறவி; சாகரம்=கடல்; நிட்களம்= அருவம்.

பா. எண்: 97—கண்ணே = விரைவில்; பட்டப்பகலாவாள் = நன்ருய்க் கண்களுக்கு புலனுவாள்; ரவி=ஞாயிறு.

பா. எண்: 98—மகாபோதம்=மகாஞானம்; சமாதி=யோகமார்க்கத்தின் இறுதிநிலே.

பா. எண்: 99—சாந்தி=யோகமார்க்கத்தின் முற்றுப் பெற்ற நிலே; மனஞ்செவ்வாலுல்=உள்ளம்செம்மையாகநின்ருல்; பிரிதியுத்த சாங்கத்தால்பொய்யென்பாரே=சாங்கியம் என்னும் உத்தியால் இப்புவியைப் பொய்யென் பார்.

பா. எண்: 100—எய்தாமல்=பெற்றிடாமல்; நன்பதே=நலமாக; ஊன்ற=மனத்தை நிலேபெறச் செய்தால்; தச நாதம்=பத்துவித ஒலிகள்; சுத்த சைதன்னியம்= உண்மையான தூய ஆன்மா.

———

போதமே நோக்கவுந்தா னெளிதோ சொல்லாய்
புகுந்துநீ வாசிவைத்து நிலேத்துப் பாராய்
நீதமே மவுனமாய் நிலேத்தே யுன்னு
நிமையான கண்கடமக் கடுக்க டுக்கச்
சாதமே முறையோடே தப்பா தேறில்
தப்பாமற் பார்க்கவுன்றன் செயலோ நந்தி
ஓதமே யுன்செயலா லூடிலொ ளியாகு
முறுதிமுப்பாழ் வெளிதாண்டி முடிவு மட்டே. (101)

முடிவுனக்கு மேலாதி யொன்று மில்லே
முதுமையாம் பராபரமு மில்லே கண்டாய்
எடிவுமென்ரு விதற்கொக்கப் பின்னென் றில்லே
யேகமென்பார் காணுர்க ளெல்லே யெல்லே
துடிவுசொன்ன வழிகேளு சூட்சவராட் டியனுற்
தூயதா மகண்டத்தின் மனவடியை வைத்தான்
படிவுபண்ணி யெட்டுள்ளாய்ப் பகிர்ந்த முடி பார்த்தான்
பயனறிந்து சாதிக்க வல்லோர் தாமே. (102)



வல்லோர்கள் பார்ப்பார்கள் வராட்டியன்ரு ளுக
வாய்க்குமோ வெல்லோர்க்கு மெளிதோ ஞானம்
பல்லோர்கள் மாமாய வராட்டி யைத்தான்
பார்ப்பர்மயிர்ப் பாலநெருப் பாறு தாண்டத்
தல்லோர்கள் வாசனையைத் தகர்த்துப்பொ டியாக்கித்
தரிக்கின்ற வாசியைத்தான் சாந்தம் பண்ணி
மல்லோர்கள் மார்க்கமா யாறுதலந் தாண்ட
மந்தியா மர்க்கடக மிறந்து போமே. (103)

மர்க்கடக வைம்புலன்ருன் மாண்டு போகில்
மாசத்தி சிற்பரைபல் கோடி பானு
கற்கடகங் கண்டுநீகடந் தவெளி பாரு
கடுவெளிக்கு முடியில்லே யடியு மில்லே
உற்கடக வொளிக்குமுடி வில்லே காணு
மூன்றவே படியில்லே மனந்தா னுன்னு
புற்கடக மனந்தானே மகத்துவமித் தனேயும்
பெரிதான வழிதாண்டிக் கூடிற்று தானே. (104)

கூடிற்று மனந்தான்மா யத்தில் தோய்ந்து
குழப்பியே யலேந்து கொண்டு குறிகூ டாது
வாடிற்று மனந்தான்போ தத்திற் சொக்கி
மாருத கருணேக்குள் வாழ்ந்தார் சித்தர்
காடிற்று மனமாருக் கருணே யாலே
கண்டிக்க வாய்க்குமெளி தாமோ சொல்லு
மாடிற்று மாருத விட்டகுறை யாலே
வாய்ச்சுதே மெய்ஞ்ஞான சித்தி தானே. (105)

சித்தியா மாருத கருணேக் குனின்று
செகஞ்சால வித்தையென்று தெளிந்திட் டார்கள்
சித்தியா மவுனயோ கத்தில் நின்று
தெளிந்திட்டார் தெளிந்திட்டார் சைதன் னியத்தில்
சித்தியா மற்றென்றும் பெரியோர்க் கில்லே
சிகாரமாம் வாசிசொன்ன படியே கேட்கும்
சித்தியா மனம்வாய்த்த பெரியோர் கட்குச்
செப்பரிதாம் பிரமநிட்டை விசார மாமே. (106)

பிரமவிசா ரத்தைப்பே சிடும்வே தாந்தம்
    பேசுமறை நூலதுதான் பிரமவிசா ரத்தைப்
பிரமவிசா ரத்தைப்பதி னெட்டும் பேசும்
    பேசுமறு பத்துநாற் கலைகள் தாமும்
பிரமவிசா ரம்பேணுந் தொண்ணூற் ருறும்
    பிரமவிசாரம் பேணு மற்றை ஞானம்
பிரமவிசா ரத்தின்பே ரறியா மாந்தர்
    பேரான மாயைதன்னி லழுந்து வாரே. (107)

அழுந்துவார் தானென்ற வாங்கா ரத்தி
    னவ்வேரைப் பிடுங்காதா ரறியமாட்டார்
மழுந்துவார் வாசியென்ற மவுனி யோர்கள்
    மாசற்ற பிரமவிசா ரத்தைக் காண்பார்
வழுந்துவார் பிறப்பில்லை மரண மில்லை
    வாசியுமே சித்தித்த மாசற் ரோர்கட்
கெழுந்துவார் காயசித்தி யோக சித்தி
    யெழிலான வாதசித்தி யேற்றந் தானே. (108)

ஏற்றமாம் சித்தரச வாதி தன்னை
    யிடும்பாகக் காணுமற் றூசித் தக்கால்
கூற்றமாம் ரௌரவமா நரகில் வீழ்வார்
    கொடும்பசியால் வறுமையால் திகைத்து நிற்பார்
நாற்றமாம் நரகமொடு சுவர்க்கந் தானும்
    நன்மையாயி வையிரண்டுஞ் சொல்லக் கேளு
மாற்றமா மலத்துதித்த கிருமி தானும்
    மகத்தாகச் செனித்ததுபோல் நரகந் தானே, (109)

தானென்ற கோபம்வரு முறைமை யாலே
    தாக்கான சனனம்பற் பலவு மாகும்
தேனென்ற சனனமாய்ச் சனித்தல் பாவந்
    திகைப்பான கோபமது கொடும்பா வந்தான்
மானென்ற சுவர்க்கத்தின் வழிதா னேது
    மகத்தான மானிட னுய்ச்செ னித்துப்
பானென்ற முன்செய்த பலாப லத்தில்
    பராபரத்தொ டொன்றில்மகா சுவர்க்கந் தானே. (110)



தானான பூரணத்தின் மகத்து வம்பார்
    தளிரான தீபம்போல் தான்முன் தேகம்
கானான கண்டிப்புங் கண்டி டாது
    கத்தியது நடுவோடுங் கைதட் டாது
கோனான மனம்வாசி யுடனே யொன்றில்
    கூறெணுப் பூரணமுங் குறிப்பாய்த் தோன்றும்
நானான சாயைகண்டங் கழுந்திப் போகும்
    நலமான நிர்மலங்கற் பூரத் தீயே. (111)

கற்பூரத் தீபம்போ லொளியு மாகும்
    கடிதான பூரணம்வா வென்றே கூவும்
பற்பூரம் பாலொத்த வாசனை தான் போகும்
    பலப்பலவாந் துன்பமுமா பத்தும் போகும்
அற்பூரக் காயமஃ தழியா தாகும்
    அதிமாய மில்லையந்த வகண்டத் திற்ருன்
உற்பூரத் தோயவே சித்த ருக்குள்
    உறவாடல் மெத்தவுமுண் டுண்மை யாமே. (112)

## அபாத்திரால்

(ஞானயோக வாத வைத்தியம் கற்பிக்கத் தகுதியற்றவர்கள்)

உண்மையாப் பலியாது யோகந் தானு
    முறுதியாம் பசுவான நீச னுக்குப்
பண்மையாப் பாவமாங் கோபிக் குத்தான்
    பலியாது கொலைசெய்த் பாவிக் கொக்க
வண்மையாம் மத்திபமாம் புத்தி யானேன்
    மருளான மகாபோகி மகத்தா மூடன்
எண்மையாய்த் தூஷிகனு யெத்தும் பொய்ய
    னிடும்பனு மழும்பனெடு சோம்பன் ருனே. (113)

தானான பெண்ணைப்பார்த் தேங்கிப்பின் செல்வோன்
    தக்கான தன்மவரை தப்பும் பாவி
தூனான சோகவிகா ரத்தன் சோம்பன்
    துணையான மூத்தோரைத் தந்தை தாயை
ஆனான வசங்கமில்லா தேதான் வைவோன்
    அதிகமாம் வீணுர வாரன் தூறன்
வேனான வெறுமைவெகு துட்டன் மூர்க்கன்
    வெகுருபுல்லன் குருதோஷிக் குப்பொய் யாமே. (114)

ஆமேயா காமியத்த னடங்காக் காம
னழும்பனு மெரிமுகத்தா னதிக பாண்டி
தூமைதுடுக் கன்சுசியில் லாச்சண் டாளன்
சிவவேடந் தெரிசிக்கில் தூசிப் போன்ருன்
வாமேவு கோள்பொய்யன் லோபி யீனன்
மகத்தான வீணுங்கன் வாதி தர்க்கன்
மாமேவு மாமிசத்தை வருத்தித் தின்போன்
மதுபானி யிவர்களுக்கு யோகம் பொய்யே. (115)

யோகநூலி வர்களுக்கே யீந்தால் பாவ
முடனேதான் நரகெய்தி யுழலு வான்பார்
யோகநூலி வர்களர்ச் சிக்க லேகா
வதிகமாய்ப் பிரமகத்தி யணுகும் பாரு
காகநூல் கற்பத்தைச் சூட்ட வாகா
கண்காணுத் தூரத்தே கடிசாய் நில்லு
நாகநூல் ஞானத்தை நவிற்ற லாகா
நாட்டினுல் நரகெய்தி நலங்கு வாரே. (116)

## பாத்திராள்

(ஞான யோக வாத வைத்தியம் கற்பிக்கத் தகுதியுடையவர்கள்)

நலங்காமல் யாவருக்குக் கொடுப்ப தென்ருல்
நாதாந்த வேதாந்த பிரமவிசா ரத்தார்
மலங்கவே யவதூதி தர்மி கூர்மி
மகத்தான சிவயோகி மதிமார்க் கத்தார்
துலங்கவே சுத்தசை தந்யத் தோர்கள்
சொன்மொழிகள் மறவாத தூய்மை யாளர்
கலங்கவே கன்மமனுட் டித்தோர் சாந்தர்
கற்புடைய மங்கையரைக் கருதார் தாமே. (117)

தாமென்றுந் தந்தைதாய்ப் பூசிப் போர்கள்
தமையடைந்த பேர்களேயே பாது காப்போர்
ஏமென்ற வெவ்வுயிருந் தன்னுயிர்போ லெண்ணி
யிரங்குவோர் வரம்புதப்பி யிகழந்தி டாதார்
வாமென்ற வாசியுடன் வாதித் தாடு
மகத்தோர்கள் வாமத்தின் வழியி னிற்போர்
ஆமென்ற வப்புவுட னுப்புப் போல
வடைந்தோர்க்கங் கடங்கலும்போ திக்க லாமே (118)



போதித்தே யோகத்தின் பொருளைக் காட்டிப்
புகலரிய ஞானத்தின் பொருளைச் சொல்லு
ஆதித்தே யமர்ந்தக்கா லதிற்பி ழைப்பா
னல்லாக்கால் பேயாவா னதிட்ட வீனன்
சோதித்தே நாள்வரைக்குங் கற்பஞ் சூட்டு
துடியான வாதத்தின் சூட்சஞ் சொல்லு
காதித்தே கைகாட்டங் கருளோடு பொருளுங்
கைமுறையாய்க் குளிகை யொன்று சூட்டி நீட்டே. (119)

நீட்டுகின்ற வசபையது நிறைந்தமுடி காட்டு
நீங்காத பூரணத்தை யழுத்தும் பாரு
நாட்டுகின்ற வெட்டுநா லதனிற் சேர்ந்து
நடித்துமே கண்டத்தே நின்று கூடி
ஆட்டுகின்ற வாடாச்சு நிறைந்தகதி ருக்கே
யாண்மையாங் கதிரேது முனைமூக்கில் நின்று
ஊட்டுகின்ற யோகிக்குத் தன்னிடத்தே யோடு
முதிக்கின்ற ஞானிக்கும் பதம தாமே. (120)

## வாசி (சரஞானம்)

### பிராயணுயாமம்

பதமான லோகத்தா ரிறந்தமுறை கேளு
பதிவான வம்புலியில் முழங்குஞ் சீவன்
நிதமான நித்திரையில் நெடுவீதி யோடல்
நிறைந்தசை யோகங்கொட் டாவியேக் கத்தால்
இதமான மும்பதுமா யறுபதுமா யோடு
மியலான புரியட்ட மொவ்வொன் ருக
நதமான நாளுக்கு நாள்சீர ணித்து
நாடியே நமன்பதியி லெய்து வாரே. (121)

நாடுமிறந் தோடியே நமனுக் கெய்ப்பார்
நலமான வாசிநிறைந் துள்ளே வாங்கில்
ஆடுதிரு நடனமும் பலமுங் காணு
மாட்டினது குறிப்புத்தான் மேலோ கீழோ
நாடுமூலா தாரசபை தொந்தோ மென்று
நாட்டியே தலமாறு முருகிச்சுழி யூடே
யூடுகபா லம்புகுந்து குருபதத்தின் மேவிப்
புகுந்தமண்ட லத்திதழ்தா ளுயிரத் தெட்டே. (122)

### மண்டலம்

எட்டாக குருமண்டலம் முட்டிக் கவிழ்ந்தே
யிதமாகக் கைகண்ட யோகங் காணும்
கட்டாகக் கபாலத்தைக் கடந்துமெய் யென்றே
கதிர்போலப் புகை யோடித் துவாதசாந் தத்தை
உட்டாக வுண்டிருந்தே யசபையை மறித்தே
யுயரமா முகட்டேற்றக் கபாலங் கல்லா
மிட்டாகக் கடுங்கனலே மிகவு முண்டா
மெல்லாந்தாந் தெரிசனமா யேறுங் காணே. (123)

ஏறுமே லென்றீர்கண் மூக்கி லேதாச்
சேறியே வாசிகொண்டு மனத்தோ டூனு
ஊறுமங் னென்றுன்னி னுலுருகும் பாழி
லொளியோடு பூரணந்தான் கோடி பானு
தேறுதீபச் சுடரில்திக் கெல்லாம் காணுந்
தெவிட்டாத முனைநாசி சிறக்கும் நாலு
வீறுபுதைந் திடுயோகத் தாலே முட்டி
மிகக்கடந்த பொருள்காணும் ஞான மாமே. (124)

ஞானந்தா னுலான பதவொளியு மாச்சு
நலமான வானந்தான் யோக மாச்சு
பானந்தான் பருமதிநல் லூற லாகும்
பரவுமுப்பா ழைக்கடந்து பாரு தீயைத்,
தானந்தான் பார்த்திடவே பரமவொளி யாச்சு
சாதித்தங் கேறிடவே வெறும்பொய் யாச்சு
தோனந்தான் தோத்தரித்துச் சுருதிமனோன் மணியைச்
சுகமுற்ற பூரணத்தைக் கண்டிட் டேனே. (125)

கண்டிட்ட சுழிமுனையில் மவுன மொட்டிக்
கண்மூடி விழியிரண்டும் நினைவில் நோக்கப்
பண்டிட்ட நிராதாரம் பளிச்சென் றுதோணும்
பராபரமா மணித்தாயும் பரியொன் றீவாள்
அண்டிட்டே யேறிலை கண்டவெளி காட்டு
மாண்மையாம் போதத்தி லடுத்து விக்கும்
துண்டிட்டுப் பரத்தினடி தன்னிற் கட்டும்
சுருதிமனோன் மணித்தாயும் வாவென் பாளே. (126)



### புரியட்டகம்
(நுண்ணுடல்)

வாவென்ற சடமெல்லாம் பிரமன் கூறு
மறைந்துநின்ற விரத்தஞ்சீழ் மாலின் கூறு
போவென்ற விவைக்குள்ளே புரியட் டந்தான்
பேரான சூட்சமென்ற தேகங் கேளு
சேவென்ற சிகரமாஞ் சிவன்ரு னென்று
சேர்ந்ததுமேல் வகாரமாம் மகேச்சுரன்ரு னென்று
தாவென்ற யகாரமாஞ் சதாசிவன்ரு னென்று
சார்ந்துநின்ற விந்துவதின் மேலு மாமே. (127)

மேலான விந்துவின்மேல் நாத மொன்று
மிக்கவே யதன்மேலே சத்தி யொன்றும்
ஓலான விதன்மேலே சிவன்ரு னென்ரு
முற்றசிவம் யாரென்னில் வராட்டி யன்ருன்
பாலான வதின்மேலே பரைதா னென்று
பாருமிவை யெட்டல்லோ புரியட் டந்தான்
மாலான விவையெட்டால் பிறப்பிறப் பாச்சு
வாகான புரியட்ட மார்க்கந் தானே. (128)

மார்க்கந்தான் புரியட்டக் கூத்தே கூத்து
மகத்தான கோடிசென்ம மெடுத்தே யாடும்
ஏர்க்கந்தான் புரியட்டத்தே மூவகைத் தோற்ற
மெங்குமது விரிந்தாடப் பிரபஞ்ச மாச்சு
பார்க்கத்தான் புரியட்டப் பகவான் கூத்துப்
பண்பாக விதையறிந்து கூர்ந்து பாரார்
தீர்க்கந்தான் பார்த்தறிந்த பெரியோர் தாமுந்
திறத்தோடே தள்ளியதன் மேனிற் பாரே (129)

### முப்பாழ்

நிற்பார்கள் பரைமேலே முப்பாழ் கேளு
நீங்கியொன்று வெளிப்பாழா மதற்கு மேலே
ஒற்பார்க ளொளிப்பாழாய் நிற்கும் பாரா
யுயர்ந்துமே லதைத்தாண்டி யுரைக்கக் கேளு
விற்பான வெளியொளிப்பாழ் விரைந்து பாரு
மிகுமூன்று வரைதாண்ட வுன்ம னைத்தாய்
தற்பான மொழியுடையாள் தமரின் வாசல்
தனிப்பரந்தான் போதமதாய் நிற்பாள் பாரே. (130)

போதமது தானென்று மவட்கே பேராம்
பேரானவ கண்டமென்று மவட்கே பேராம்
சேதமென்ற தவளடுக்க வவளே போதம்
சேர்ந்தணுகில் தமர்க்குள்ளே சேர லாகும்
ஆதமது கண்டவர்கள் கண்ட வீதி
யாதியில்லை யந்தமில்லை யறியப் போகார்
நேதமது போதமது வென்ன லாகும்
நேரரிது மனக்குரங்கு நேரொட் டாதே. (131)

நேராதென் றேசொல்லிச் சிவயோ கிதானும்
நிலைத்துன்னிப் பரையளவு மோடி னலும்
காரான பிறவிவந் தெய்து மெய்துங்
கருவில்வந்து பிறந்தாலுஞ் சிவயோகி யாவான்
பாரான பரையளவும் புரியட்ட மாச்சு
பண்பான பரைகடந்து வெளிப்பா முற்றுல்
ஆரான வெளிப்பாழே யகண்ட மென்றே
யர்ச்சித்துப் பார்த்தக்கால் பிறக்கொட் டாதே. (132)

ஏதென்று பிறக்காம லதற்குள் ளேநின்
றின்னமொரு வரையேறி யிதுதா னென்பான்
வாதென்றங் கதற்குள்ளே மயங்கி யேங்கி
மற்றுமொரு வரையேறி யிதுதா னென்பான்
தீதென்று மூன்றுவரை திறந்தே யேறிச்
சேர்ந்துநின்ற வுன்மனையை யிதுதா னென்பான்
பாதென்று ரவிகோடி வன்னி கோடி
பரிவான மதிகோடி பரிந்து பாரே. (133)

பரிந்துபார் முதற்பாழில் பூதம் பூதம்
பரிவாகச் சித்தித்தால் வாதி யாவன்
எரிந்துபா ரிரண்டாம்பா ழுடுத்திட் டக்காலெட்
டெட்டா மறுபத்து நாலாஞ் சித்தன்
முரிந்துபார் மூன்றும்பாழ் புகுந்திட் டக்கால்
மூச்சான வாசியது பிறந்த தானம்
நரிந்துபார் நாலறிந்து போனவிடங் கண்டால்
நமனடுங்கிப் போனவிடம் நாட்டி டாயே. (134)



நாட்டியே நிராதாரந் தன்னிற் சொக்கி
நலமாகக் குழைந்துள்ளே புகுந்தா யானல்
தாட்டியே நானென்ற நாமம் போச்சு
சாத்திரத்தா லாராய்ந்த பொருளும் போச்சு
சூட்டிப்பார் சுழுத்தியைப்போ லுறக்க மாச்சு
தூங்குவார் மாடுபோ லொன்றுங் காணுர்
தாட்டிப்பார் சடம்போகா சுழுத்தியினிற் புகுந்தால்
தனித்தசிவன் போல்வாழ்வாய் நீயுங் காணே. (135)

காணவே யாடியதோர் கூத்தைப் பார்த்துக்
கருத்துறைந்த பின்புதான் வாதம் பாரு
பாணவே யாதார மொக்க வேறு
பரதத்தி லாடியதோர் கூத்துங் காணும்
நாணவே வாசியுடை நட்பைக் கண்டால்
நடனமாங் கூத்ததுவுங் கண்முன் காணும்
தாணவே நடனத்தின் கூத்தைக் கண்டால்
தடித்ததோர் சாவதுவும் பொய்யாப் போமே. (136)

போமென்று சொன்னவா ருதா ரத்தில்
போக்கான தளத்தில்நிற் குமட்ச ரந்தான்
ஆமென்ற வைம்பதட் சரமே யாயிற்
றப்பனே யொன்றெங்கே காணேங் காணேம்
ஆமென்ற வாசானை யடுத்துக் கேளா
யஃதறிந்து சொன்னக்கால் குருவே யாகும்
நாமொன்று மறியோமென் றுரைப்பா னுகில்
நலமான விரண்டுகெட்ட நாத னமே. (137

நாமென்றே போகிறதும் வருகிறது மிரண்டாம்
நலமான வோரெழுத் தெங்கே யென்றுல்
கோமென்ற குருபதத்தி லைக்கி யமாகக்
கூட்டியே மருவிநின்று ஹம்மென் ருகி
வாமென்ற வாசியினுல் சிகார மாகி
வாசியோ டொன்றியே சிங்கென் ருச்சு
தேமென்ற வோரெழுத்தால் வாசி யாச்சு
சிவனுச்சு சடமாச்சங் கண்ட மாச்சே. (138

ஆச்சென்ற வோரெழுத்தால் கோப மாயிற்
    றகாரவுற் பனமுமொடுங் கினமு மாயிற்
ரேச்சென்ற வெழுத்தாலே யொளியு மாயிற்
    றுள்ளடங்கச் சோதியைப்போல் நந்தி நந்தி
தேச்சென்ற வெழுத்தடங்கில் சோதி காணும்
    தேகமுமோ விளக்கொளியாஞ் சிந்தை யில்லை
தாச்சென்ற சந்திரசூ ரியரு மொன்றும்
    தயங்காதே சுழுமுனையிற் பேணிக் கூடே (139)

கூடுவது முப்பாழு மூன்று வீதி
    குறிப்பாக மூன்றையுநீ கூடிச் சொக்கு
நாடவே நாலுக்குள் ளடங்கும் பாரு
    நலமாக வேணிபழு வாகக் காணும்
ஏடவே தளத்தோடே யெழுத்தைப் பாரா
    யேறினல் முப்பாழுங் கடந்து போகும்
பாடவே பராபரத்தில் மனோன்மணியாந் தாயும்
    பரிவான வமிர்தந்தான் பாலிப் பாளே. (140)

பாலிப்பா ளதுகடந்தால் நிராதா ரந்தான்
    பார்த்துமே தெளிந்தபின்பு பரந்தே யேகில்
போலிப்பாள் தெளிவான போதம் போதம்
    பொய்க்காத வென்குருவு மதற்குட் சென்றார்
ஏலிப்பா ளிதுகடந்தங் கேறிப் போனே
    னிளைப்பாறி யிதுகடந்தே யந்தத் தேறில்
சூலிப்பாள் சிலம்பொலியிற் புகுந்திட் டேன்யான்
    சுகமெல்லாங் காலாங்கி யையர்க் காச்சே. (141)

ஐயரென்ற காலாங்கி நாத னார்தா
    னறியாத சிறியேற்கு மறிவு தந்தார்
உய்யரென்ற வுடல்பொருளா வியுந்தான் மூன்று
    முதகத்தாற் கொண்டவர்க்குப் பலன்தா னென்றேன்
செய்யரென்ற சிலம்பொலிக்கு ளவரும் வந்தார்
    சிரசுவைத்தே யவர்பதத்தில் சரணஞ் செய்தேன்
எய்யரென்ற வெனையாண்டு ஞானங் காட்டி
    யேழைமையாஞ் சஞ்சலத்தை யோட்டி னாரே. (142)



சஞ்சலத்தை யோட்டியே வாதங் காட்டிச்
    சார்ந்திட்ட வெனையாண்டு குளிகை காட்டி
மஞ்சலத்தில் வாசியென்ற குதிரை காட்டி
    மனமடக்கிப் பூரணத்தி னந்தங் காட்டித்
தெஞ்சலத்தில் சித்தரெல்லாம் பணியக் காட்டித்
    தேசிகரா மென்குருவு நடனத் தெய்திக்
கஞ்சலித்துக் கண்களித்தேன் கருணை கூர்ந்தேன்
    கருணைமைந்தா வென்றுரைத்துக் கடாட்சித் தாரே. (143)

ஆரேயைம் புலனறுத்தால் மனமு மொன்றாச்
    சதிகமனம் வாயுவெனப் பூரித் தோங்கு
போரென்ற வாயுமேல் மனந்தா னேறிப்
    பொறிகடந்து நெறிகடந்து போக்குந் தாண்டிக்
கூரென்ற வாற்றோடு குளபதமுந் தாண்டிக்
    கொடிதான முப்பாழின் போக்குந் தாண்டி
மாரென்ற மணித்தாயைச் சரணம் பண்ணி
    வைத்துப்பார் நாலுக்குள் மருவிப் பாரே. (144)

மருவியே முந்தி முந்தி மூலம் நீதான்
    வாசிகொண்டு பாச்சியதில் மாட்டி யேறு
உருவியே குதிரையின்மேற் கொண்டா யானு
    லுறுப்பான நாலைவிட்டா லெங்கு மில்லை
அருவியே முன்பின்னுங் கீழு மேலு
    மழலென்னத் தழலென்ன மதிதா னென்ன
கருவியே கண்கொள்ளாக் காட்சி யாகுங்
    கண்கொள்ளாப் போகத்தைக் கண்டி டாயே. (145)

கண்டிட்ட மனத்தாலே தவமு மாச்சு
    கவர்ந்தவுயி ராவதுவும் மனமே யாச்சு
மண்டிட்ட வாயுமேல் மனமு மாச்சு
    மகத்தான சஞ்சலத்தால் மனம்பே யாச்சே
அண்டிட்ட தீப்போல மனந்தான் சென்றே
    யகண்டத்திற் சென்றதென்று லதுதான் போதம்
மன்றிட்ட மனம் விட்டால் ஞானம் போச்சு
    வாசியைத்தா னழுகவிட்டால் யோகம் போச்சே. (146)

யோகத்தை விடாதேநீ மவுன மார்க்க
முற்பனமாய்ப் புத்தியுள்ளா னென்று சொல்லிக்
காகத்தைக் காலாங்கி நாதர் தாமுங்
கடாட்சித்து முன்னேதான் பிராணு யாமம்
மோகத்தை முனிந்தபின்பு மொழிந்த சொற்கேள்
முந்தினதோர் மூலத்தில் அகார மீசன்
தாகத்தை உகாரமது சத்தி யாச்சுத்
தனித்திரண்டுங் கூடுமது மவுன மாமே. (147)

மவுனமா மூலத்தே முந்தி முந்தி
மருவினல் பளிச்சென்று லிங்கங் காணும்
நிவுனமாம் லிங்கமது நந்தி நந்தி
நேராக வெட்டிதழும் விரிந்து காணும்
உவனமா மதைவிட்டுச் சுழிமு னேயோ
டோகோகோ நாதத்தில் மவுன மொட்டு
சுவனமா மசைந்துநிற்கு மவுனத் தாலே
சேமசடை யசைந்தாட நடனங் காணே. (148)

காணப்பா மேலேறி யாக்கினை யினுள்ளே
கருத்தூணி மவுனத்தே தாக்கி னக்கால்
நீணப்பா சதாசிவன் தானிருத்தஞ் செய்வார்
நிலையாகச் சிவகாமி யிருந்து பார்ப்பாள்
ஆணப்பா வவ்விடத்திற் கலந்து நித்த
மணுகின லம்பலத்தி லடைய லாகும்
மூணப்பா விட்டதனை யறிவின் மூலம்
முதிர்ந்தேற வாசியின்றன் முறைமை கேளே. (149)

முறைமையா யறிவுக்குள் மவுன மூன்றி
முதிர்ந்து மனந்தேறுமட்டுந் திறமாய் நில்லு
திறமையா யறிவென்ரு லெளிதோ மைந்தா
தெரிந்துநீ யறிகிறது மதற்குள் பாரு
அறமையா யறிவினுடை மூலங் கண்டா
லசடில்லை கர்ப்பூரத் தேக மாச்சு
செறமையா யாலயத்துச் சிவன்தான் வந்து
திரட்டியன்னங் கொடுக்கையிலே யுண்ண லாமே. (150)



## அருஞ்சொற்பொருள்

**பா. எண்: 101 முதல் 150 வரை**

பா. எண்: 101—நிமை = இமை (உலகவழக்கு); சாதமே முறையோடே = முறைப்படிப் பழக்கங்கொள்ள; ஓதம் = கடல்

பா. எண்: 102—வராட்டியன் = விராட் புருஷன் = விசுவரூபன்.

பா. எண்: 103—மந்தி = பெண்குரங்கு; மர்க்கடகம் = குரங்கு. (இது ஐம்புலன்களைக் குறிக்கும் சிலர் மனதையும் குறிப்பர்.

பா. எண்: 104—மாசத்தி சிற்பரை = உன்மணித்தாய்; பானு = ஞாயிறு; கடந்தவெளி = துவாதசாந்தப் பெருவெளி (பராகாசம்); முடி = தலை; அடி = பாதம்.

பா. எண்: 105—குழம்பி = தெளிவற்று (கலங்கி); குறிகூடாது = இலக்குத்தவறி.

பா. எண்: 106—மனம்வாய்த்த = உள்ளங்கொண்ட; பிரம நிட்டை = சமாதி.

பா. எண்: 107—வேதாந்தம் = உபநிடதம்; மறைநூல் = நான்கு வேதங்கள்; பதினெட்டு = புராணங்கள் பதினெட்டும்; தொண்ணூற்ருறு = தத்துவங்கள் தொண்ணூற்ருறு.

பா. எண்: 108—ஆங்காரம் = நான் எனதென்னும் உணர்வு (சினம்); மாசற்ற = குற்றமற்ற; எழில் = அழகு.

பா. எண்: 109—இடும்பாக = குறும்புத்தனமாக; தூசித்தால் = குறைகூறினல்; கூற்றம் = இயமன்; நாற்றம் = மணம் (நல்லது (அ) தீயது); கிருமி = புழு; மகத்தாக = பெரியதாக.

பா. எண்: 110—முறைமை = தகைமை, தரம்.

பா. எண்: 111—மகத்துவம் = மகிமை, பெருமை. தளிர் = கொழுந்து; கைதட்டாது = தடையின்றி; சாயை—நிழல்.

பா. எண்: 112—கூவும் = அழைக்கும்; காயம் = உடல்.

பா. எண்: 113 பலியாது = பயன்தராது; நீசன் = கீழ்த்தரமானவன்; கோபி = சினமுள்ளவன்; மருள் = மயக்கம்; மகாபோகி = மிகுந்த பெண்மோகம் துய்ப்பவன்; தூசகன் = பலரைப் பழித்திடுபவன், பலராலும் பழிக்கப்பட்டவன்; எத்து = ஏமாற்றுந் தொழிலுடையவன்; பொய்யன் = உண்மையைக்

கூருதவன் ; இடும்பன் = குறும்புத்தனம் செய்பவன் ; அழும்பன் = கேடு செய்பவன்.

பா. எண் : 114 தக்கான = மேலான ; தன்மவரை = தருமத்தின் வரையறையை ; தப்பும்பாவி = தவறுகின்ற பாவி ; துணையான = நட்புள்ள ; அசங்கமில்லாது = வரையறையின்றி வாய்க்குவந்தபடி ; வைவோன் = திட்டுபவன் ; வீணரவாரன் = பயனில்லாத பூசல் தருபவன் ; தூறன் = தூற்றுபவன் ; வெறுமை = வீணன் ; வெகுதுட்டன் = மிக்க கேடு பயப்பவன் ; மூர்க்கன் = சினத்துடன் பிடிவாதமுள்ளவன் ; வெகுபுல்லன் = மிக்க அற்பன் ; குருதோசி = குருவைப் பழிப்பவன், குருவால் பழிக்கப்படுபவன்.

பா எண் : 115 எரிமுகத்தன் = சிடுமூஞ்சி ; அதிகபாண்டி = மிக்கவாயாடி ; தூமை = குறிவழி ஒழுக்குடையவன் துடுக்கன் = செருக்குடன் விரைந்து தீய பணியாற்றுபவன் ; சுசி = சுத்தம், தூய்மை ; சண்டாளன் = தகாதமுறையில் பிறந்தவன், தகாத முறையில் நடந்துகொள்பவன் (ஜன்ம சண்டாளன் என்றும் கர்ம சண்டாளென்றும் கூறுவார்) ; கோள் = புறங்கூறல் ; லோபி = வாய்ப்பிருந்தும் பயன்துய்க்காதவன் ; ஈனன் = திடமில்லாதவன் ; வீணுங்கன் = பயனில்லா வாழ்க்கைகொண்டவன் ; வாதி = (ஜயங்கொண்டு) விவாதிப்பவன் ; தர்க்கன் = வீண் வாதாடுங்குணத்தன் ; மதுபானி = கள் முதலியன பருகுபவன்.

பா. எண் : 116—உழலுவான் = துன்பப்படுவான் ; யாகநூல் = வேள்விசெய்வதை விளக்கும் பனுவல் ; பிரமகத்தி = அந்தணரைக் கொன்றுல் தொடரும் தோடம் ; காகநூல் = காயநூல் (உடலுக்கு நலன் தரும் வைத்தியநூல்) எதுகைநோக்கி யகரம் ககரமாய் ஆளப்பட்டது போலும் "கண்காணுத். .... நில்லு" துர்ச்சனர் தம் கண்ணில் தெரியாத தூரம் நீங்குவதே நல்லநெறி—ஔவையார் ; நாகநூல் = தேவநூல், கடவுள் தன்மை பொருந்திய (ஞான) நூல் ; நலங்குவார் = துன்பப்படுவார்.

பா. எண் : 117—அவதூதி = அதிவர்ணுச்சிரமி ; தர்மி = அறவழி நிற்பவன் ; கூர்மி = புத்தி கூர்மையுள்ளவன் ; கன்மம் அநுட்டித்தோர் = வேத விதிப்படி கன்மா செய்பவர்கள் ; சாந்தர் = அமைதியுடையவர்.



**பா. எண் : 118—அப்புவுடனுப்புபோல = நீரில் உப்பு இரண்டறக் கலந்தது போன்ற ஒன்றியநிலை.**

**பா. எண் : 119—ஆதித்தே = பணிவிடைசெய்து ; அமர்ந்தக்கால் = விரும்பி உறுதியுடன் நிலைத்தால் ; அதிட்டவீனன் = நலம்பெறும் வாய்ப்பில்லாதவன் ; சூட்சம் = நுணுக்கம்.**

**பா. எண் : 120—அசபை = ஹம்ஸகாயத்திரீ மந்திரம் ; வாக்கால் உச்சரித்து ஜபம் செய்யாதது ; உதிக்கின்ற ஞானி = தொடக்கநிலையிலுள்ள ஞானி.**

**பா. எண் : 121—அம்புலி = சந்திரன் ; நித்திரை = தூக்கம், சூக்கும உடல் ; சீரணித்து = தோய்ந்து ; நமன்பதி = எமனுலகு ; எய்துவார் = அடைவார்.**

**பா. எண் : 122—எய்யார் = ஏமாற்றந்தருவார் ; அம்பலம் = நடன சபை.**

**பா. எண் : 123—கபாலம் = மண்டை ; முகடு = உச்சி.**

**பா. எண் : 124—ஊனு = ஊன்று ; வீறு = மிடுக்கு மிக்க ; மிக கடந்த பொருள் = கடவுள்.**

**பா. எண் : 125—பானம் = அருந்துவது ; பருமதி நல்லூறல் = முழுநிலவிலிருந்து ஊறும் அமுதம் ; பரமவெளி = ஒளிப்பாழ் ; வெறும் பொய் = பாழ்.**

**பா. எண் : 126—பரி = குதிரை ; வாசி ; அடுத்துவிக்கு = அருகில் நெருங்கவைக்கும் ;**

**பா. எண் : 128—பால் = பகுப்பு ; பரை = பராசத்தி ;**

**பா. எண் : 129—எழுவகைத் தோற்றம் = தேவர், மானிடர், விலங்கு, ஊர்வன, நீர் வாழ்வன, பறவை தாவரம்என்பனதீர்க்கந்...... பெரியோர் = தீர்க்கதரிசனம் உடைய சான்றோர் (எதிர்காலத்தைக் கணிக்கத் தெரிந்தவர்)**

**பா. எண் : 130—வரை = வரம்பு ;**

**பா. எண் : 131—நேரரிது = வாய்த்தலரிது.**

**பா. எண் : 131—கருவில் = கருப்பதில் ; பிறக்கொட்டாது = பிறப்பு அறும்.**

**பா. எண் : 133—வன்னி = தீ ; பரிந்து = அன்புடன்.**

பா. எண் : 134—நமன் நடுங்கி .........நாட்டிடாயே = இயமன் வெருண்டு போனவிடம் கூறுக .(இயமபயமில்லை என்பது குறிப்பு).

பா. எண் : 135—குழைந்து = மிக்க அடக்க ஒடுக்கமாக; நாமம் = பெயர்; சுழுத்தி = ஆழ்ந்த உறக்க நிலை.

பா. எண் : 136—பரத்தில் = கலைகள் 64ல் ஒன்று; வாசியுடைநட்பு = பிராணயாம சித்தி; தடிந்ததோர் = எதிர்த்து வரும்.

பா. எண் : 137—இரண்டுகெட்ட = நன்மை தீமை இரண்டும் இல்லாத, நாதன் = குருநாதன்.

பா. எண் : 138—ஐக்கியம் = ஒற்றுமை.

பா. எண் : 139—உற்பனம் = தோன்றல்; ஒடுங்கினம் = மறைதல்; நந்திநந்தி = மேன்மேலும்பெருகுதல். சிந்தையில்லை = கவலையில்லை.

பா. எண் : 140—பாலிப்பாள் = வழங்குவாள்.

பா. எண் : 141—கடந்தால் = தாண்டினுல்.

பா. எண் : 142—உதகத்தால்கொண்டவர் = நீரால் தாரைவார்த்து கொடுக்க பெற்றுக் கொண்டவர்.

பா. எண் : 143—சஞ்சலம் = மனக்கவலை; அந்தம் = அழகு; கஞ்ச லித்துக்கண் (கம் + சலித்து) கண்நீர் வழிய (ஆனந் தக்கண்ணீர்)

பா. எண் : 144—குளபதம் (நெற்றிவரை) சகஸ்ராரம்; நாலுக்குள் = வாசியோகம், மனமடக்கம், ஆருதாரம், முப்பாழ்.

பா. எண் : 145—அழல் = தழல்ஆயினும் இரு முறைவந்த படியால் முன்னது சூரியன் பின்னது தீயென்றுக் கொள்க.

பா. எண் : 146 மனம் விட்டால் = உள்ளம் நாடாதாகில்; நழுக விட்டால் = தவறவிட்டால்.

பா. எண் : 147—மோகம் = நிறைந்தஅவா; முனிந்து = வெறுத் துத் தள்ளி; மவுனம் = மகாரத்தைக் குறிக்கும்.

பா. எண் : 148—சோமசடை = திங்களணிசடாமுடி.

பா. எண் : 149—நிருத்தம் = நடனம்; நிலையாக = செயலழிந்து சொக்கி நிற்பவளாக; கலந்து = ஒன்றி (மனம் வாக்கு காயத்தால் ஒருமைப்பட்டு)

பா. எண் : 150 -அசடு = குற்றம்.



உண்ணலா மென்றுநித்த மூலத் துள்ளே
யுறுதியா யொவ்வொன்று யுரைத்துக் காணும்
எண்ணலா மினத்தோடே வரிசை யோடு
மேமாற லில்லாம லெத்தி யாடு
கண்ணலாயட் சரத்திற் கருத்தை வைத்துக்
கருதுகின்ற மந்திரத்தைச் செபித்தே யுன்னு
பெண்ணலாம் புலன்றன்னை யவரவர்க ளிருக்கும்
பேரான வீட்டில்வைத்துப் பூட்டிப் போடே. (151)

பூட்டிட்டு நாலாக வெளியி னுள்ளே
புகழ்கின்ற சோதியைப்பார் பொருளே தோன்றும்
கூட்டிட்ட வொவ்வொன்றுக் கடந்து கூடு
கொள்கியதோர் மூன்றுன வரையி னுள்ளே
மாட்டிட்ட மேற்கண்ணின் மணித்தா யப்பா
மருவிநின்ற கொலுக்காணக் கண்ணுண் டோசொல்
மீட்டிட்டு மேலான பதமிதுதான் சென்றால்
வேதாந்த முடிவான வெளியு மாச்சே. (152)

ஆச்சென்ற வெளியென்று விருண்ட வெளியல்ல
வாதியா முன்மனைத்தாய் விளக்காய் நின்றுள்
ஓச்சென்ற வொளியென்று லொளியு மல்ல
வோகோகோ விருவருந்தா னென்றி நின்றுர்
காச்சென்ற நிராகாரங் காண லாகுங்
கண்டுடனே மனதூன்றிக் கலந்து போகும்
வாச்சென்ற விளக்கொளியில் விட்டில் வீழ்ந்து
மாண்டதுபோல் மனஞ்சென்று மருவுந் தானே. (153)

மருவினுல் முத்திமுத்தி மைந்தா கேளு
மற்றவெல்லா முத்தியல்ல மருவு மார்க்கம்
புருவினுல் மனஞ்செயித்தால் போக்கு மில்லை
பூணுட்டால் பேய்க்கூத்தாம் பொல்லா மாயை
உருவினுல் யோகத்துக் கிதுவே மார்க்க
முண்மையாய்ப் பார்த்தபடி யுறுதி சொன்னேன்
இருவினை லிந்தமுறை யேத்து வாசி
யேருட்டால் யோகமெல்லா மிமுக்காந் தானே. (154)

தானான நாதவொலி நின்றே யோங்கச்
சமர்த்தான பூரணத்தே சுழன்று சொக்கு
வானான மனமிருந்த நிராகா ரத்தை
வாய்திறந்து சொல்லுதற்கு நாம மேது
பானான நிற்குணமோ நிரஞ்சனமோ காணேன்
பாங்கான கரையில்லாப் பதியோ காணே
நூனான மூலத்தே நின்றே யேறி
யோடினே னுற்பனத்தைக் கண்டி லேனே. (155)

உற்பனமாம் பூரணத்தின் கரையோ காணே
னுடர்ந்து நின்ற சனகாதி நால்வர் காணார்
விற்பனமா மூலகுரு தானுங் காணார்
மேன்மையாஞ் சுகர்முதலாஞ் சித்தர் காணார்
நிற்பனமா நிட்களத்தின் கரையைச் சொல்ல
நிலையான வேதாந்தம் விளம்பக் காணேன்
அற்பனமா மனமோடி யண்டிற் றானா
லவ்விடத்தே லயிந்துநின்ற மூந்த லாமே. (156)

லயிச்சுநின்றங் கழுந்துவது மெவ்வா றென்னி
லளவுமிஞ்சி வத்துவுண்ட வாண்மை போலச்
சுயிச்சுநின்று சொக்குவது மெவ்வா றென்னிற்
சோதியாம மிர்தமுண்ட தூய்மை போலக்
குயிச்சுநின்றங் கழுந்துவது மெவ்வா றென்னிற்
கோரக்கர் கற்பமிஞ்சுங் கூர்மை போல
எயிச்சுநின்ற விம்மூன்று மொப்பு மல்ல
வேற்றமா மானந்த போதை தானே. (157)

தானெங்கே பார்ப்பதென்றால் மூலம் பாரு
தருகுறும்பர் மிலேச்சருக்குங் காணாஞ் சோதி
ஆனெங்கே யாதாரத் தளமுங் காணா
மட்டான முப்பாழுங் கடந்து போகும்
கூனெங்கே தமர்வாசற் குட்பு குந்தால்
கோடிமதி கோடிரவி கூறெண்ணாது
பூனெங்கே பூரணத்தின் கரையோ காணோம்
புகுந்துடனே காந்தயம்போல் பொருந்துங் காணே. (158)



பொருந்துவது மெவ்வாறே வென்று கேட்கிற்
பெருந்தீப முண்டதிரி நெய்யைப் போலும்
வருந்துவது வருணசலம் ரவியுண் டாப்போன்
மகாவைந்து வண்ணமுண்ட படிகம் போலும்
திருந்துவது சலத்தடங்குங் குமிழி போலுஞ்
சத்தமவன் கூப்பிட்டுக் கேட்டாப்போலும்.
ஒருந்துவது மோங்குவது மிதுவே மார்க்க
முத்தமனே மனத்துடனே யுன்னு 'வுன்னே. (159)

உன்னுதண்மை ஞானத்துககா தாரந் தானாச்
சுண்மையாஞ் சாந்தமல்லோ யோகச் சார்வு
மன்னுவண்மை விவேகமென்ற வாழ்வு .மாச்சு
வாய்திறக்கா மவுன மன்றோ மனத்துக் கின்பம்
தன்னுமுண்மை ஞானத்துக் கோடும் வீதி
தலிவில்லா திடமல்லோ மகத்தாம் வீரம்
புன்னுமுண்மைப் பூரணமாம் பொறியைத் தள்ளா
போக்கோடே மவுனத்திற் பூட்டி நில்லே. (160)

நில்லாமல் மடவார்பால் மாயத் தூடி
னிருதலையாங் கொள்ளிமையத் தெறும்பு போல்வாய்
கல்லாமற் காமுகனாத் திரித்தி டாதே
கடிசான பாழாசை தொடர்ந்த தென்றால்
வல்லாமல் விழிகண்டு வலையிற் சிக்கி
மறந்துமே சமாதிவிட்டுச் சுழன்றா யானால்
அல்லாம லொன்றுமில்லை நீயுங் கெட்டா
யதிட்டமுனக் கில்லையென்ற றிந்து கொள்ளே. (161)

கொள்ளென்ற யோகம் யார் பார்த்தா ரென்றாற்
குணமான சூடாலை யென்ற பெண்தான்
வள்வென்ற மூலர்பிள்ளை சுவால மூர்த்தி
வண்மையா யவள்தனக் குபதே சித்தார்
புள்ளென்ற வாசியெல்லாம் போகொட் டாமற்
போக்கோடே குண்டலியிற் கருத்தைப் பூட்டி
வெள்ளென்ற வயதெல்லாம் விருத்தி யாக்கி
விளங்கியே யரசனுக் கங்கருள் செய்தாளே. (162)

செய்தவளைப் பெண்ணென்றே யறியான் மன்னன்
    செகத்துவச னவளாலே சேர்ந்தான் ஞானம்
பைதவளப் பதினாறு யுகக்கற் பந்தான்
    பரத்தோடே யொன்றாகப் பரிந்து போனார்
தொய்தவத்து வாபரமா முகத்திற் றானும்
    சோர்ந்துமே யிருவருந்தான் கலந்து போனார்
உய்தவள யோகியவ ளுதவும் பெண்தான்
    யுத்தமியாம் பெண்ணான லணைய நன்றே. (163)

அணையவே பெண்ணவர்க்கு வந்த தேதோ
    அதிகமாய் நால்யுகத்திற் செய்த வந்தான்
பிணையவே பெண்ணான ரூப மாச்சு
    போதித்த குருவாச்சு பெண்டி ராச்சு
பணையவே பழக்கமுற்றார் பெண்ணி னோடே
    பரவியே மூலமா முறுதி யோகம்
கணையவே பெண்ணைவிட்டா லாகா தென்னிற்
    கனவாலே காயப்பெண் கலவாள் பாரே. (164)

கலந்துமே விண்ணான துறுதி யென்றார்
    காமமாம் பெண்ணைவிட்டு நீங்கு நீங்கு
அலந்துமே காலாங்கி யையர் தாமும்
    அடித்துமே பெண்ணாசை தள்ளி விட்டார்
புலந்துமே பிள்ளைகளை வெவ்வே றாகப்
    போயெங்குந் திரியுமென்று விடையு மீந்தார்
கலந்துமே கருவூரார் தெற்கே சென்று
    கடியரிடி கையிற்சாபங் கொண்டிட் டாரே. (165)

கொண்டுபின்பு தான்போது மப்பா வென்று
    கொடிதான காந்திமதிக் குள்ளே சென்றார்
எண்டுமெனை யாண்டகா லாங்கி நாத
    ரேகவெளி யம்பலத்தே யேகி நின்றார்
பண்டுபரா பரனார்தன் கடாட்சத் தால்யான்
    பாய்ந்துமே விண்ணேறி யிறங்கி வந்தேன்
மண்டுமணித் தாயோடு பழக்க மாகி
    மனமூன்றித் திரும்பிவந்தேன் மக்காள் பாரீர். (166)



வந்தேறி நெஞ்சினுள்ளே நினைவை யொட்டி
    வளர்ந்தே பனிப் புகைபோல விளைஞ்சி யோடும்
பந்தேறி நினைவையுன்னப் பற்றிப் பாரு
    பரிந்துமே மேற்கொண்டா லுன்னி யாடு
மந்தேறி மகேச்சுரத்தே நின்று பாரு
    மருவவே யிதற்குள்ளே நான்கைக் கூட்டு
புந்தேறிச் செய்தவரா ரென்றாற் கேளு
    புசண்டர்செய்தார் சதநித்தம் பூட்டி யாடே. (167)

ஆடவே யவர்செய்த வகையே தென்னி
    லையமாங் கும்பகந்தா னறுபான் நான்காம்
பூடவே பூரகந்தான் பதினா றாகும்
    புகையான ரேசகமுப் பத்தி ரெண்டாம்
ஆடவே யவரிருந்து பேறு பெற்றா
    ரழகான கற்பகமா மரத்தின் மேலே
காடவே காகமென்ற உருவைக் கொண்டு
    கண்டிருந்தார் கோடியுகங் கரைகா ணேனே. (168)

கரைகாணாக் கோடிபிரம்மா தம்மைக் கண்டார்
    கரையற்ற விண்டுமயங் கோடி கண்டார்
துரைகாணாச் சங்காரங் கோடி கண்டார்
    தாக்கோடே மகேச்சுரத்தைத் தாண்டி நின்று
துறைகாணாச் சதாசிவந்தா னொடுங்கிச் சத்தி
    தொலையாத நாதமுடன் விந்து வற்று
திரைகாணாச் சிவஞ்சென்று சிற்பரையிற் சேர்ந்து
    தெளிவான பூரணத்திற் சொக்கி னாரே. (169)

சொக்கியே புசண்டருமே யவளைத் தொட்டுச்
    சுத்தியென வகண்டத்திற் கணந்தா னின்றார்
புக்கியிந்திர சாலவித்தை போட்டா ளாயி
    புரிந்துமே கணப்போதிற் பின்னும் வந்து
நிக்கிதெச மெனவிரித்தாள் கூடா ரத்தை
    நிமிடத்தி லண்டமெல்லாம் நிறைந்து போச்சு
சுக்கியிதை வேணுமென்றால் துடைக்க வல்லாள்
    சுருதிக்கு வித்தான முத்தித் தாயே. (170)

முத்தியிலே நின்றுவந்த புசண்ட மூர்த்தி
முன்போலக் கற்பகமே யாவா யென்றார்
பத்திபிலே யவர்மேலே கூடா தென்றார்
பார்க்கையிலே கூட்டோடே விருட்ச மாச்சு
நித்தியிலே நின்றுரைத்த சித்தைப் போல
நிலவரமாய்க் கூட்டுக்கு ளமர்ந்து நின்றார்
கத்தியிலே நிற்கிறதோர் பூவைப் போலே
கண்டத்தே நின்றுரைத்துக் கருதி னாரே. (171)

## புசண்டர் தோற்றம்

உரைத்துமே புசண்டரது பிறப்பைக் கேளா
யுகந்தமது வுண்டன்னங் களிக்கும் போது
பரைத்துமே பரிதிமுதற் சோமனையுந் தரித்த
பராபரமும் பார்ப்பதியும் பார்த்தா ரத்தை
நிறைத்துமே சிவகலைதான் காகம் போல
நேர்ந்தணைய வன்னமங்கே நிறைகெர்ப்ப மாயிற்
இரைத்துமே யிருபதிற் றொன்று பிள்ளை
யீசனது கலையாலே புசண்ட ராச்சே. (172)

ஆச்சென்ற விருபதுபேர் கன்மத் தாலே
யனேகநா ளிருந்துமே கழிந்து போனார்
போச்சென்ற யிவர்பிடித்தார் பிராண யோகம்
பேரான சீவகலை புகுந்த தாலே
பேச்சென்ற ஆண்பிறந்தாற் பிள்ளை யாமோ
பேறுபெற வவர்போலே யாருக் காகும்
மூச்சென்ற முந்திமுந்தி மூல யோகம்
ஒளிர்வுகண்ட மட்டுமே நெஞ்சிற் பாரே. (173)

பாரென்ற நெஞ்சினிற்கு நடுமூ லந்தான்
பரிநேராய்ப் பார்த்துமே பழக்க மாகிப்
பூரென்றே வந்ததென்றால் புசண்ட மூர்த்தி
பொரிநெருப்புப் பஞ்சில்பட் டாற் போலாகும்
பேரென்ற பரத்தேறும் போக ரையா
பின்குஞ்சி விறகொடிந்து காலும் போனால்
ஏரென்றவினத் தோடேகூடா தாப் போல
இளமையிலே மூலத்தைக் கூடி டாயே. (174)



கூடாட்ட லரிதரிது பிராண னென்றார்
கூறியதோர் சொன்னமொழி கேட்டுப் பொங்கி
ஆட்டா லடியற்ற மரம்போல் யானு
மவர்பதத்தில் விழுந்தெழுந்தே னுண்மை யாக
நாடாட்டா லையரன்று போக மூர்த்தி
நம்மைப்போல் வாழ்ந்திருவென் றெடுத்தா ரையா
மூடாட்டல் சொன்னமொழி மூல மாகி
முதிர்ந்துநின்ற பிராணனைத்தா னறிந்தி டாயே. (175)

அறிந்திட்ட வையரெங்கே யிருப்ப தென்றா
லாதிமகா மேருவுக்குத் தெற்கே யாகும்
முறிந்திட்ட வாதமுண்டு ஞான முண்டு
மூர்க்கமாம்யோ கமுண்டுசித் தெல்லா முண்டு
புரிந்திட்ட பிராணனைத்தா னறியப் பண்ணிப்
பூரணந்தான் லயிக்கின்ற போதங் காட்டி
உரிந்திட்ட தமர்வாசல் நுழைவு காட்டி
யுபதேசத் துண்மைதனை யுரைத்திட் டாரே, (176)

உரைத்திட்டே யழிக்கிறதும் படைக்கிறதுஞ் செய்தா
ருரையான சிவயோக வாண்மை யாலே
மறைத்திட்டே யனுப்பியே விடைகொ டுத்து
மாசற்ற மூர்த்தியேபோய் வாரு மென்றேன்
தரைத்திட்டே யையருமே சாகைக்குப் போனார்
சாங்கமாப் பிள்ளைகட்குந் தன்மை சொல்லிப்
புரைத்திட்டே பிராணனைத்தா னறியுங் களென்று
போதித்தேன் பிள்ளைகட்குப் புத்தி தானே. (177)

தானான விரண்டெழுத்தை யொட்டி யேறில்
சதிரான சிவயோகங் கையிற் சிக்குப்
ஆனான விசுத்தியிலே நின்று கொண்டே
யப்பனே நினைவாலே மூலம் பாரு
கூனான சுழிமுனையுஞ் சுழலாய்க் காணுங்
குறிப்பாக வாசிவைத்துக் காலை யாட்டு
பானான பளிச்சென்று நந்தி காந்தி
பண்பான மதுவையுண்டு பரிந்து பாரே. (178)

பரிந்துநின்று கண்டத்தே புருமை யம்பார்
 பண்பான சுடர்போலே பகுந்து காணும்
குரிந்துநின்று குருபதத்தில் துவாதசத் தைப்பார்
 கூர்மையாய்ப் பதினொன்றுங் கடந்து தோன்றும்
கரிந்துநின்று கண்டத்தி லனாகதத்தைப் பாரு
 கலங்காமல் பிராணனுமோ நிலைத்துக் காணும்
அறிந்துநின்ற வனாகதத்தே மால்பிரமர் தம்மை
 யடுத்துப்பார் வெட்டவெளி யல்லா மாமே, (179)

அல்லாமால் தேகத்தை யறிய வென்று
 லடுத்தேறி யுன்மனையில் நின்று பாரு
கல்லாமாங் கீழ்நோக்கக் கண்டைப் பத்துங்
 கையினாற் பிடித்துவிட வொன்று மில்லை
வல்லாமாம் லட்சியங்கள் வழியாச் சானால்
 வாராது நித்திரையும் பசியுங் கேளு
புல்லாமாம் பிறர்சத்தங் கேளாப் பக்கல்
 புறத்திருந்து லட்சியத்தைப் பூட்டி மூடே, (180)

பூட்டையிலே பிறர்சத்தங் கேட்ட தானால்
 புலன்களது முட்கரமாய்ப் பிரித்துப் போடு
மாட்டையிலே மனதுசற்றே வழுவிற் றானால்
 மடையநாய் கடித்தவெள் ளெலும்பாய்ப் போவாய்
சூட்டையிலே மனதலைக்குஞ் சூட்டொட்டாது
 சோதனையால் குறிகளெல்லாஞ் சுழற்றிப்போடும்
காட்டையிலே கைநெல்லிக் கனிபோ லாகுங்
 கடினமாய் வாசிவைத்துக் கருத்தை பூணே. (181)

ஊணிப்போங் கப்பலுக்கு நங்கூரம் போட்டா
 லூறுகின்ற வாசியைநீ யுரத்துக் கட்டி
ஆணிப்போ மசையாமல் மனத்தை மாட்டி
 யடியோடே யடுக்காறு தலத்தி லோட்டி
நாணிப்போம் புலன்றன்னைக் காட்டிற் கட்டி
 நரிபரிக்குக் கடிவாளம் பூட்டிக் கூட்டி
மூணிப்போ முளையடித்துக் குருபதத்திற் பிடிக்க
 முனிந்தநிரா காரத்தில் மூட்டி யோட்டே, (182)



ஒட்டியே மூலத்தால் முத்தி பெற்று
 ருத்தமனே பாட்டாரென்ற மூல நாதர்
நாட்டியே நந்தியல்லோ வுபதே சித்தார்
 நலமான மூலத்தில் நந்தி நந்தி
ஏட்டியே மூலத்தால் முத்தி பெற்று
 ரேற்றமாம் பாட்டரென்ற வெட்டுப் பேரும்
மூட்டியே விபுகடந்த மூல மூலம்
 மூலமென்று மூச்சுவிட்டுப் பேசொ ணாதே. (183)

பேசொணா மூலத்தே யெல்லாந் தோன்றும்
 பொருளாக விரிந்து நின்று பிரபஞ் சமாகிப்
பேசொணாப் போகமெல்லா மனுபோ கித்துப்
 பெரிதான மூலத்தே வந்து சேரும்
பேசொணாக் கேசரத்தே யுற்பனமும் லயமும்
 போக்கொன்று வரத்தொன்றி ரண்டுஞ் சொல்வேன்
பேசொணாஅ காரமஃதுற் பனத்தைப் பண்ணும்
 பிரித்துகொள்ளு உகாரத்தில் லயமு மாமே. (184)

லயமான நிட்களமா மகார மொன்றில்
 நந்தியென்பா ரதின்பெயரை யதுவே போதம்
ஓயமான ஓங்கார மதிலே நின்றே
 யோராறு தலமுருவி யுயர்ந்து துதாழ்ந்து
நியமான பன்னிரண்டாய் நின்றே யாடி
 நிலைத்துநின்ற வெட்டினது கலையை வாங்கி
மயமான காமப்பா லிறைத்தி றைத்து
 மாண்டுபோங் கள்ளருடன் மருவி டாதே. (185)

மருவதுதா னெத்தையென்றால் மூலத் தீயை
 மாட்டினால் வாசனையுங் கைவிட் டேகும்
கருவதுதான் வாய்ப்பேச்சால் கருதி டாதே
 காமப்பேய் பிடித்ததுபோற் கடுக லூனு
உருவதுநான் மனமொத்தங் குள்ளே பார்த்தா
 லுற்றகள்வ ரைவருமே யோடிப் போவார்
முருவதுநான் முன்பின்னே யென்று யானால்
 மூலத்தீய காலனுங்கா லனிலைத் தானே. (186)

தானன காலனுண்டென் றுலகர் சொல்வார்
தனிக்காலன் வேறில்லை மூலன் காலன்
ஆனன வாலமுண்டார் நடனஞ் செய்தா
ரதைக்கண்டு பதஞ்சலியு மன்பு கூர்ந்தார்
கோனன பிரபஞ்சத் திற்றில்லைக் குள்ளே
கூப்பிட்டே யாட்டு வித்துக் கூத்துங் கண்டார்
ஆனன கன்னியன்றங் காலங் காட்டி
லாட்டுவித்தாள் திருநடனஞ் சிவனைத் தானே. (187)

சிவசக்தி யுந்தியிலே தானய் நின்று
சேர்ந்துநின்ற விடம்பாதத் துரிய வீடாம்
அவசத்த வபானனது நின்று கொண்டே
யதிகமல சலங்கழித்தே யருந்தல் கேட்கும்
தவசத்த சமானனதிற் கூடிக் கொண்டு
சாப்பிட்ட பதார்த்தமெல்லாஞ் சமனச் செய்யும்
துவசத்த நெஞ்சான சுழுத்தி யுள்ளே
துலங்கியதோ ரெண்மர்சத்தி யீசன் றனே. (188)

ஈசனென்ற விடத்துள்ளே பரனைக் கேளா
யீராறு மதனுள்ளே காவ லாச்சு
தாசனென்ற பதிரைநுவர் கருவிக் கூட்டந்
தனித்துநின்ற பிராணனங்கே நிற்கு மப்பா
கோசனென்று கொலுவிருந்தார் சக்தி யீசன்
கொள்கின்ற சொற்பனத்தின் வீட்டைக் கேளு
பாசனென்ற பரத்தினுடை யடியு மாச்சு
பாங்கான வுதானனங்கே பாரித் தானே. (189)

பாரித்துப் பதினன்கு கருவிக் கூட்டம்
பண்பாகக் கொலுவிருந்தார் பரமன் சத்தி
விரித்தவ் விடத்தேநின் றவனர் விராடன்
மீதுறைந்தால் முன்பின்ன பிரண்டுங் காணும்
ஏரித்தே யெட்டினது கலையை வாங்கி
யிடிகுறை யிட்டவிட மெற்றிப் பாரு
பூரித்துக் கடந்துமெள்ளப் புருமை யத்தே
பேரான சாக்கிரமாந் தலமி தாச்சே. (190)



ஆச்சென்ற பதினன்கு கருவி கூட
வதினின்றர் சதாசிவனு மணித்தா யாரும்
வேச்சென்ற வியானனங்கே விரைந்து நின்றன்
மேலான கொலுவாச்சுப் பிரபஞ் சமாச்சு
தோச்சென்ற கருவியங்கே தொண்ணூற் றாறும்
சுயம்பாக வதினுடைய தொழிலைச் செய்யும்
மாச்சென்ற மறந்ததெல்லாந் தோற்ற மாகு
மனங்குவிந்து பூரணத்தின் கொலுவி தாமே. (191)

தாமென்ற கொலுக்கண்டு கருவிக் கூட்டந்
தனித்தங்கே யிந்திரியக் கூத்துங் கண்டு
மாமென்ற மாமாயைப் பெண்ணி ணுசை
மகத்தான படுகுழியில் மாய்ந்து காண்பார்
ஆமென்ற வடிவெடுத்தாங் காரங் கூட்டி
யழும்பான மயக்கத்தால் தான்மே லாகிப்
பாமென்ற பாவத்தைத் தலைமேற் கொண்டு
பாங்கான வாசனையிற் புகுது வாரே. (192)

புகுதுவார் மூலத்தில் நாதங் கண்டு
புகுந்துமே தீயொளியிற் கூடக் கூட்டிக்
கருதுவார் கலையிருந்த பானு வீட்டில்
கலங்காமற் கலந்தந்த வொளியுங் கண்டு
தகுதுவார் சந்திரனு மிந்து வீட்டில்
தாமதமாய் ரவிதணலை மேவப் பண்ணி
அகுதுவாரானுன சோனை போலே
யழுந்தவே யுடல்குளிர்ந்து புளக மாமே. (193)

ஆமென்ற சாம்பவிமுத் திரையைக் காட்டி
யைங்கோணக் குருபதத்திற் புகழைக் கண்டு
நாமென்ற நாதவிந்தா மீசன் சத்தி
நற்கமல வாயிரத்தெட் டிதழின் மையம்
தாமென்ற ரவிகோடி மதிதான் கோடி
சார்ந்துநின்ற மூலத்தீ சதமாங் கோடி
ஏமென்ற வவ்வொளிக்கு ணின்று மேலே
யிருக்கிறதே தேசுவென்ற பிரமந் தானே. (194)

பீரமமாம் பிரமமென்பார் போத மென்பார்
மிக்கசச்சி தானந்த வெளிச்சார் பென்பார்
நிரமமாம் வேறென்றிலாத நிர்க்கு ணந்தான்
நின்மலமாங் கடந்துநின்ற வேதாந் தமென்பார்
விரமமாம் பிரபஞ்ச மெலாம் விளைந்த தென்பார்
வெளியாக நின்மலமாய் நிறைந்த தென்பார்
வரமமாங் கடந்தவெளி வழிதா னென்பார்
வாய்ப்பேச்சே யல்லாமல் வரைகா ணாரே. (195)

வரைகாணப் பூரணத்தி னொளியைச் சொல்ல
மதியேது கதிரேது தீதா னேது
நிரைகா ண நிரஞ்சனமா மொளியைக் காண
நிசமான கேசரியாய் நீட்டிப் பாரு
புரைகாணப் புல்லருக்கே யொன்று மில்லை
புத்தியுள்ள சித்தருக்குப் பொருள்தான் மேலே
உரைகாண மூலத்தைப் பார்த்தா லென்ன
வுறுதியில்லா துன்னியே யூறிப் போச்சே. (196)

உன்னவே அகாரமுத லையம்பத் தொன்று
முறுதியாம் பதினாறிற் பிரிந்த தப்பா
பன்னவே அகாரமஃ தீச னுச்சுப்
பதிக்கடுத்த வார்தீகஞ் சத்தி யாயிற்று
என்னவே யிப்படியே பதினாறீச் சுரமு
மேற்றமாஞ் சிவசத்தி யாகி நின்று
முன்னவே யிதனாலே முப்பத்தைந் தாச்சு
மூவுலகோ ரெழுத்தாக முகிந்த வாறே. (197)

முகிந்தவைம்பத் தோரெழுத்தால் வேத மாச்சு
முக்கியமாம் புராணஞ்சாத் திரங்க ளெல்லாம்
விகிந்தபின்பி தற்குள்ளே விரிந்த தப்பா
மிக்கசச்சி தானந்தம் விரிவி னாலே
நகிந்தபின்பு நதிகளெல்லாஞ் சமுத்தி ரத்தில்
நகர்ந்தாப்போல் பூரணத்தில் லயித்துப் போகும்
ஒகிந்தபின்ன ரொன்றுமில்லை நீயு மில்லை
யோங்கியதோர் நானுமில்லை யொளிதான் காணே. (198)



ஒளியான வாசியைத்தா னுன்னிக் கொண்டே
யுருண்டாலும் புரண்டாலும் மூன்னு மூலம்
அளியான வாணியடித் தாற்போற் கூடு
மப்போதோர் விக்கினமு மணுகி டாது
குளியான முழங்கால்மேல் குதிகால் போட்டுக்
கொடுஞ் சுருக்காங் கோமுகாச னத்திற் கூடு
வெளியாக வலுத்தக்கால் வலக்கால் மேலே
விபரமாம் வீரவாச னத்திற் கூடே. (199)

ஆசனத்திற் கூடையிலே வாசனைகள் தீண்டி
லடித்தொடைமே லிரண்டான பதத்தை வைத்து
பாசனத்தி னிற்பதுமவா சனமாய்க் கட்டிப்
பதிலாக நுனிமூக்கைப் பற்றிப் பாரு
வாசனத்தில் சுழிமுனையில் வாசி கூடு
மருவுகின்ற வாசனைதா னோடிப் போகும்
ஏசனத்தி லிதுமார்க்கந் தாயைக் கண்டே
யிருக்கலாம் பூரணத்தி லெய்த லாமே. (200)

## அருஞ்சொற்பொருள்

### பா. எண் 151 முதல் 200 வரை

பா. எண் : 151—உறுதியாய் =வன்மை பெற்று; புலன்றன்னை பூட்டிப்போடே = புலனை அடக்கு.

பா. எண் : 152—பொருள் = செம்பொருள்.

பா. எண் : 153—விளக்காய் = சோதியாய்; விட்டில் = ஒரு வகை பறக்கும் பூச்சி (விளக்கொளியில் மிக்க ஆர்வங்கொண்டு அதிலேயே இறந்து போகும் இதனைப் ''பறக்கும் பதங்கம்'' என்று அழகிய மண வாளதாசர் திருவேங்கடத்தந்தாதியில் கூறுவர்) மருவும் = கூடும்

பா. எண் : 154—மனஞ்சயித்தால் = உள்ளத்தையடக்கினல் ; இழுக்காம் = கெடும்.

பா. எண் :155—வாய்திறந்து .. ........ ஏது = விளக்கிச் சொல்ல வார்த்தை இல்லை என்பது குறிப்பு.

பா. எண் : 156—கரை = அளவு; சுகர் = சுகப்பிரமரிஷி; அண்டிற் ருனுல் = நெருங்கினுல்; விளம்ப = கூற; லயித்து = சொக்கி.

பா. எண் : 157 — கோரக்கர் கற்பம் மிஞ்சும் = கோரக்கர்; மூலியைக் கற்பமாய்க் கொண்டால் உண்டாகும் போதைக்கும் மிகைப்படும்; (கோரக்கர் மூலி = கஞ்சா).

பா. எண் : 158—மிலேச்சன் = வெளிநாட்டுக் கீழ்த்தரமக்கள்; காந் தயம் போல் = காந்தத்தையணுகிய இரும்பு போல.

பா. எண் : 159— பெருந்தீபமுண்ட திரிநெய்யைப் போலும் = பெருந்தீபத் திரிநெய்யை உண்ட போலும் என்று மாற்றிப் பொருள் கொள்க. வருணன் = சலம்; ஐந்துவர்ணம் = நீலம், பச்சை, மஞ்சள், செம் மஞ்சள், சிவப்பு; ஒருந்துவது = சுருங்குவது.

பா. எண் : 160—சாந்தம் = அமைதி; நலிவு = குன்றுதல்.

பா. எண் : 161—மடவார் = பெண்கள்; மையம் = நடு; கொள்ளி = தீ.

பா. எண் : 162—சுவால மூர்த்தி — தீக்கொழுந்தே உருவெடுத் தாற் போன்றவர்,

பா. எண் : 163—உகம் = யுகம்.

பா. எண் : 164—பிணைய = கூட;

பா. எண் : 165—கடியரிடி = தெய்வத்தன்மை பொருந்திய முனிவர்.

பா. எண் : 166—காந்தி = ஒளி; மதி = சந்திரன்.

பா. எண் : 167—விழைஞ்சி = விரும்பி.

பா. எண் : 168—பேறு = நீண்டஆயுள் (பலயுகங்கள்).

பா. எண் : 169—சங்காரம் = அழித்தலும் மறைத்தலும்; தொலையாத = அழியாத.

பா. எண் : 170—சுக்கி = (சுஷ்கி) வற்றச்செய்து துடைக்க வல்லாள் = அழிக்க வல்லவள்.

பா. எண் : 171—விருட்சம் = (கற்பக) மரம்.

பா. எண் : 172—உகந்தமது = மகிழ்ச்சிதரும் (மது = கள்) உயர்ந்த அமுதம்; பரிதி = சூரியன்; சோமன் = மதி; நேர்ந்து = உருக்கொண்டு எதிர்ப்பட்டு; அணைய = தழுவ; இருபதிற்ருென்று = இருபத்தொன்று





பா. எண் : 173—பிடித்தார் = கடைப்பிடித்தார்; முந்திமந்தி = தொடக்கத்தில்; ஒளிர்வு = தெளிவு; பிரகாசம் = ஞானோதயம்

பா. எண் : 174—ஏற்ற = பொருந்திய; கூடாதாப்போல் = சேராததுபோல.

பா. எண் : 175—அடி = வேர்.

பா. எண் : 176—நுழைவு = வாயிற்படி.

பா. எண் : 177—ராகை = (ஜாகை) = இருப்பிடம்.

பா. எண் : 178 வாசிவைத்துக் காலையாட்டு = வாசியோகத்தில் நின்று பிராணயமஞ் செய்; (கால் = சாற்று) நந்தி காந்தி = (காந்திநந்தி என்று மாற்றுக) ஒளி வளர்ந்து; மது = அமுதபானம்.

பா. எண் : 179—புருமையம் = (புருவமையம்) இரு புருவங்களுக்கு மிடையிலுள்ள பாகம் ஆக்கினை; பசந்து = பிரிந்து; துவாதசம் = துவாதசாந்தப்பெருவெளி; குருபதம் = சகஸ்ராரம் ஆக்கினைக்கு மேலிடம்.

பா. எண் : 180—கண்டீப்பத்தும் = (கண் + தீ + பத்தும்) கண்கள் ஒளியைக்காணும்; நித்திரை = தூக்கம்

பா. எண் : 181—வழுவிற்ருனல் = தவறினுல்; மடையநாய் = புத்தியற்ற நாய்; மனதடக்கும் = மனம் அடங்காது குறிகள் = இலட்சியம்; சுழறறிடபோடு = சுழன்று கைக்கெட்டாதுபோம்; கருத்தை ஊன்ண = மனத் தை திடப்படுத்தி நிறுத்து (ஊன்ண = ஊன்றே

பா. எண் : 182—உரத்து = வலிமையாக; கட்டி = அடக்கி குடும்பம் செய்து; நிராகாரம = அருவம் (வெளி).

பா. எண் : 183—ஏற்றமாம் = மேன்மையாக.

பா. எண் : 184—போக்கு = அழிவு. மறைதல், சாதல்; வரவு = பிறப்பு; உற்பனம் = தோற்றம்; லயம் = கலத்தல்; (வேறுபாடின்றி) அகரம் + உகரம் = பிரணவம்; உற்பனம் + ஒடுக்கம் = லயம்.

பா. எண் : 185—மகாரம் = போதம் = மோனம், ஓராறுதலம் = மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினை. காமப்பால்—மிக்க வேட்கைகொண்டு; கள்ளர் = திருடர்.

பா எண் : 186—உற்றகள்வர் ஐவர் = பஞ்சேந்திரியங்கள்.

பா எண் : 187—மூலன் = சிவபெருமான்; ஆலம் = பாற்கடலில் தோன்றியவிடம்.

பா எண் : 188—அருந்தல கேட்கும் = உணவு கேட்டும்.

பா எண் : 189—தாசன் = குற்றேவல் செய்வோய்; கோசன் = ஐந் தொழிலன் மூலத்தானம்.

பா எண் : 190—முன் பின்னும் இரண்டுங்காணும் = இறந்த கால எதிர்கால நிகழ்ச்சிகள் கண்முன் காட்சி தரும்; சாக்கிரம் = விழிப்பு.

பா எண் : 191—சுயம்பாக = தம்மிச்சையாக.

பா எண் : 192—படுகுழி = அழிவுப்பாதை.

பா எண் : 193—தணலை = வெம்மையை; சோனை = மழையின் வகை; டளகம் = மயிர்க்கூச் செறிதல்.

பா எண் : 194—மையம் = நடுப்பாகம்; சதம் = நூறு; தேசு = ஒளி.

பா எண் : 195—விளைந்தது = உண்டாயது; நிர்க்குணம் = அருவம்; நின்மலம் = இயல்பாகப் பாசத்தினின்று விடுப் பட்டதன்மை.

பா எண் : 196—கதிர் = ஞாயிறு; புல்லர் = அற்பர்.

பா எண் : 197—பதினறு கலை = சோடசகலை (உயிரெழுத்துகள்); முப்பத்தைஞ்சாச்சு = முப்பத்தைந்து மெய் யெழுத்துகளாம்; முகிந்த = முடிந்த.

பா எண் : 198—நகர்ந்தாற் போல் = ஓடினாற் போல்; ஒகிந்தபின்பு = ஒன்றிய பின்.

பா எண் : 199—ஆணியடித்தாற் போல் = அசையாது தாரணை யில் நிற்றலுக்கு தாரனம்; விக்கினம் = இடர் தடங் கல்; கோமுகாசனம் = பல ஆசனவகையில் இது வும் ஒன்று; வீரவாசனம் = (இது தமிழ்முறைப் புணர்ச்சி வடமொழி இலக்கணப்படி தீர்க்கசந்தி யாக்காமல் ஆளப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது அது வடசொல் இலக்கணப்படி வீராசனம் என்று இருக்க வேண்டியதாம்.

பா. எண் : 200—பதுமவாசனம் = (தமிழ் முறைப்புணர்ச்சி) பதுமாசனம்



எய்தினால் சிவயோகி ஞானி யாவா
னிருகியே வாசியெல்லா முடலிற் சேரும்
ஐதினால் மூலத்தி லொளியே வீசும்
ஆறுதலக் கிரந்தியெல்லா மற்றுப் போகும்
கொய்தினால் கும்பகத்தே மிதக்கலாகுங்
கொடிதான தணலாலே யசைக்கப் போகா
மைதினினால் வாயுவென் னமசக மாச்சு
மத்தந்த சித்தருகங் கண்ட வாறே. (201)

வாருன மூலத்தே அவ்வென் றாணு
மருவிய பின் முனைகொண்டா லங்வென் றாணு
பாருன பளிச்சென்றால் சிங்வென் றாணு
பற்றியே மூன்றுவகை காணும் காணு
மீருன மின்னுடைய வொளிபோற் காணு
மிரளாதே மனமுள்ளே சாரலாணு
ஆருன வாலமுண்ட சிவன்முக் கண்போ
லடங்காத தீயொளியை யமுந்திப் பாரே. (202)

தீயொளிதான் பளிச்சென்றால் பிரண்டையிலே யூது
தித்தித்தால் யோகமங்கே சித்தி யாச்சு
கூயொளிதான் கும்பகமு முனைக்கே ருது
கொடிதான வாயங்கே மவுன மாகும்
சாயொளிதான் சமைப்பதற்குத் தீயும் வேண்டாஞ்
சமர்த்தான சிகாரத்தை யூதப் பற்றும்
சூயொளிதான் சுழுத்திநெடும் பாதை யோடச்
சுளுக்காக விம்முறையே யாடிப் பாரே. (203)

ஆடியங்கே பார்ப்பதற்கு முறையைக் கேளா
யடைவெல்லாஞ் சொல்லுகிறே னறிந்து கொள்வாய்
சுடியங்கே யிடைகலையில் பூரித் தேநின்
றெழிலாக மூலத்தே நினைவாய்க் கும்பி
நீடியங்கே பிங்கலையி னுள்ளே ரேசி
நேர்ப்பாக நேர்ப்பாகவா வேறி வாநீ
தேடியங்கே யுறைந்தக்கால் சுத்தி நாடி
திறமான வாதபித்த சிலேத்துமம் போமே. (204)

திறமான மூன்றுவகை நோயும் வெந்து
சித்தியாய்க் காயந்தா னிறுகு நன்றாய்
நரமான நல்வினைத்தீ வினையு நீறும்
நலியான வைம்புலனும் விரைந்து போகும்
உரமான ஓங்கார நாத மேலே
யொருசோடி யிடு போல வோங்கு மோங்கும்
அறமான திப்படியே யறிந்து கண்டே
னறிந்துமே நீயுமப் படிதான் பாரே. (205)

பாருநீ அவ்வொன்று வுவ்வுங் கூடும்
பரவியதோர் மகாரமதிற் சோந்து நின்றால்
ஈருநீ உகாரமாய் மேலே யேறு
மிதுகாணும் பிரசாத மென்ற மார்க்கம்
நாருநீ பளிச்சென்றால் நந்தி சாந்தி
நயமாக விதனுடே வாசி மேசரு
ஆருநீ யட்சரமு மகாரத் தோடே
யமர்ந்தவாசி களிரண்டு நாதம் விந்தே (206)

நாதமென்றும் விந்துவென்றும் வாசிக்கே பேராம்
ரவிமதியும் சிவசக்தி யதற்கே பேராம்
நீதமென்றும் பூமி யென்றும் மதற்கே பேராம்
நிலையான வேகமென்று மந்தமென்று பேராம்
வாதமென்றும் வசியமென்று மதற்கே பேரா
மனமென்றும் போதமென்று மதற்கே பேராம்
காதறுமென்றுந் தூரமென்று மதற்கே பேராங்
கண்ணொளியாய் நின்றவிவை யிரண்டுந் தானே (207)

ரெண்டையுங்கா னுற்றுற்றுப் பார்க்கப் பார்க்க
நிரையற்று முறையற்று புணர்வற் றுந்தான்
அண்டையுந்கா னற்றற்றும் பேன வெல்லா
மடங்கிற்றங் குட்புகுந்தே யந்த நாளில்
திண்டையுந்தான் சித்தொத்துத் தெளிவு மொத்துச்
செயலற்று நிட்களமாய்க் காணும்
பண்டை யுந்தான் பற்றற்ற சித்தர்க் காத்தாள்
பலித்திடுமே யென்றுசொல்லிப் பகர்ந்திட் டானே. (208



பகர்ந்திட்ட வாசியஃ தென்ற பேச்சுப்
பண்பாக வாய்க்குமெத்த வெளிதோ சொல்லு
சிகர்ந்திட்ட தேசிதான் ஞான தேசி
சேர்ந்திதைத்தான் மனமொத்தே ருயகு வோர்க்குப்
புகர்ந்திட்ட புருவத்தி னின்றே யாடும்
பொருளான மனோன்மணியாம் பெண்ணைப் பாராய்
இகர்ந்திட்ட காசிகங்கை யமுனை மூன்றும்
ஏகமாய்க் கண்டிடுந்தான் புருவ மென்னே. (209)

## மயிர்ப்பாலம் நெருப்பாறு

என்னவே சிகாரமது நெருப்பா றப்பா
விசைந்துநின்ற உகாரமது மயிர்ப்பா லந்தான்
உன்னவே யிரண்டுவிட்டா லொன்று மொன்றி
ஓங்கியதோர் சிகாரத்தை யொளிக்க நன்று
மன்னவே உகாரமுந்தில் வரவு முந்தும்
வருந்தியே யிஃதிரண்டுந் தள்ள ளன்று
தன்னவே யிரண்டொழிந்தால் சாந்தி யாவான்
தனியிரண்டு மாறுக்குந் தவள னன்றே. (210)

நன்றான சிகாரத்தாற் கோப மெய்தும்
நானென்ற வாணவத்தா லுகாரந் தாக்கும்
பென்றான விவைவயிரண்டும் பெரியோ ரையா
பிறப்பதற்த மிறப்பதற்கும் பெரிய வித்தாம்
ஒன்றான உகரரமஃ தடலே யாயிற்
றோங்கியதோர் சிகாரமஃ துறைந்தே புக்கி
என்றான பிறப்பிறப் பிரண்டு மாயிற்
றெழுத்திரண்டு மேற்றமா மிருத்திப் பாரே. (211)

## சமாதி உத்தி

இருத்தியே பாரெனவே யென்னை யாண்ட
வேற்றமாங் காலாங்கி நாதர் தாமும்
பருத்தியே பக்குவம்பார்த் தெனக்குச் சொன்னார்
பாரென்றார் வாசியைத்தான் பூரணத்தில் லயிக்க
மருத்தியே கண்ணிமைக்குள் வாயில்வந்து கலக்கும்
மருவிரண்டும் பிறந்திறந்த வித்தி தென்றார்
மறுத்துமே மவுனத்தை விடாதே யென்றார்
மகத்தான விவையிரண்டால் பிறப்பு மாச்சே. (212)

பிறவாமல் ஞானத்திற் கூடு கூடு
விரத்தியாந் தூரமல்ல புகழ்ந்த நாளம்
மறவாம லெந்நாளும் வாழ்வாய் நீதான்
மாசற்ற நாளம்பார் சரமோ டாது
சுரவாமல் கண்டத்தே கருத்தை வைத்துக்
கடிந்துமே யோடுவதைக் கடுகிப் பாரு
நறவாமல் கைக்கனிபோ லுலும் தேற்றும்
நாதாந்த மணித்தாயு மழைப்டாள் பாரே. (213)

பாரென்ற நாலையே பார்க்க வென்றால்
பண்பான வகையெல்லாஞ் சொல்லக் கேளு
காரென்ற காலையே மாலை வேண்டாம்
கூடியதோர் கூட்டங்கள் கலக்கம் வேண்டாம்
நாரென்ற நிசியான நடுச்சா மத்தில்
நலங்காம லசைவற்றேயி ருந்துபாரு
கோரென்ற கோலத்தைக் கூட்டிப் பார்த்துக்
குமிழியாந் தலத்தில்நின்று குறித்து நோக்கே. (214)

நோக்கியே நிலைத்துநின்ற கண்டத் துள்ளே
நுட்பமா மட்சரம் பதினாறு தன்னில்
ஒக்கியே யொன்றிநின்று லுயிரே யாகு
முள்ளாறில் வகாரநிற்குஞ் சாவு பொய்யாம்
நாக்கியே சகக்கெட்டா நான்குங் காணு
நால்வீதி தனினின்று வாசி யோட்டி
மூக்கியே தாய்காண்பாண் மூன்றும் வீதி
முப்பாழெல் லாம்வெளியா முன்பின் னுமே. (215)

பின்னாகப் புக்கியிரு வென்பாள் தாயும்
போந்தமொழி யிருவென்ற சொல்லைக் கேட்டு
முன்னாகக் குதிரையையான் பார்த்தேன் காணேன்
மூலமா மாதாரத் தளங்கள் காணேன்
கொன்னாகக் குருவென்ற மொழியுங் காணேன்
குறித்திட்ட பொறியோடு நெறியுங் காணேன்
மன்னாக மருவென்ற தாயுங் காணேன்
மட்டற்ற போதத்தி லுன்னி யுன்னே. (216)



## தத்துவலய சமாதி

உன்னியே சமாதியைந்தி னுறுதி கேளு
உவப்பான தத்துவல யசமா தியொன்று
முன்னியே தத்துவங்கண் முப்பத் தாறு
முனிந்தகலாத் தூலபவு திகத்னதத் தானும்
துன்னியே சூக்குமத்தில் தான டக்கிச்
சூக்குமத்தை நம்பெரிய வாசனைபோ லாக்கிக்
கன்னியே காரணமாஞ் சரீரத்தி லடக்கிக்
கருத்தியிதைப் பிரகிருதியிலே கலக்கப் பண்ணே. (217)

கலக்கவே புருடனையு மதிட்டா னமாகக்
கலந்துநின்ற சைதந்நிய மாகக் கண்டே
உலக்கவே கரைத்தளித்தங் கொன்றே யாகி
யுள்ளறையிற் காற்றசையா விளக்குப் போல
அலக்கவே யலைச்சலற்றுத் தானே தானா
யகண்டமென்ற பூரணமாய் நின்று பின்னை
துலக்கவே தோற்றமற் றிருப்பத் தானே
சுத்தமாந்தத் துவலய சமாதி யாச்சே. (218)

## சவ்விகற்ப சமாதி

சமாதியாஞ் சவ்விகற்ப சமாதி கேளு
தனித்தடுத்தா லிரண்டுவகை யதிலே யுண்டு
சமாதியாஞ் சத்தானு வித்தை யொன்று
தரிப்பான திரயவித்தை சமாதி யொன்று
பெமாதியாஞ் சத்தானு விந்தை மார்க்கம்
பெரியதோரு தத்வலய சமாதிக் குத்தான்
பமாதியாஞ் சத்தங்கள் பட்சி யோசை
புடுகின்ற துன்மனத்தே பருவங் கேளே. (219)

பருவமாஞ் சத்தானு .வித்தை யென்னும்
படியான சவ்விகற்ப மென்றும் பேராம்
துருவமாந் திரிசானு வித்தை மார்க்கஞ்
சூட்சியா யந்தநிலைக் குள்ளே நின்று
தருவமாந் தனையனுசந் தானம் பண்ணிச்
சஞ்சரிக்கிற் றிரிசானு வித்தை யாகும்
மருவமாஞ் சவ்விகற்பச் சமாதி யாகு
மருவியதோர் சஞ்சாரத் திருக்கிற் பாரே. (220)

## நிருவிகற்ப சமாதி

பாரென்ற திருவிகற்ப சமாதி கேளு
பாங்கான தத்வலய சமாதி முற்றித்
தாரென்ற சத்தானு வித்தை முற்றித்
தனைமறந்து தூக்கமுறு மயக்கம் போல
வாரென்ற பிரசத்தங் காதிற் சேளா
மருவியந்தப் பூரணத்தே லயித்துச் சித்தம்
நேரென்ற சைதந்தி யமகப் போனுல்
நிருவிகற்ப சமாதியென்ற நேர்மை யாச்சே. (221)

நேர்மையாய்ச் சமாதிவிட்டுச் சஞ்சரிக்கி
னினைவாகச் சமாதியிலே யிருக்கும் போது
தீர்மையாய்க் காலமென்ற திரயத் துள்ளுஞ்
சிதைந்தபிர பஞ்சமெலாம் பொய்யென் றெண்ணு
வேர்மையாய் விவகாரத் தாலே தோன்றி
விரிந்தபிர பஞ்சத்தின் பாசந் தள்ளித்
தேர்மையாய் நிருவிகற்ப மாக நின்ருல்
தெளிவான நிருவிகற் சமாதி யாச்சே. (222)

ஆச்சென்ற தத்வலய சமாதி முற்றி
யறிவான நிருவிகற்ப மாகும் போது
நீச்சென்ற நிருவிகற்ப சமாதிக் குள்ளே
நேரான விக்கினங்க ளொருநான் குண்டு
நூச்சென்ற தெவையென்ருல் சொல்லக் கேளு
சுழுத்திலயம் விட்சேபஞ் சங்சேப மாகும்
காச்சென்ற ராசமாஞ் சுவாசமென்று
கருத்தூன்றிச் சொல்லுவது நாலுந் தானே. (223)

நாலென்ற விசற்குள்ளே லயத்தைக் கேளு
நனிந்துநின்ற நித்திரைதான் விட்சேபந்தான்
காலென்ற ராகமுறுங் கலக்சத் தாலே
கலந்துவரும் வாசனையுங் கரணத் தாலே
மாலென்ற மனோராச்சி யத்தி னாலே
வருகுதல் சங்சேப நித்திரை யுமல்ல
ஆலென்ற மனோராச்சி யந்தா னுமல்ல
வறிவானசொரூபமது மறந்து போமே. (224)



அதுமறந்து மூடமாய கன்று நிற்கு
மத்தியதில் ராசமாஞ் சுவாச மான்மா
நதுமறந்து நாக்குமன மொழிந்த விந்த
நணுகிநின்ற சொரூபத்தே சந்தோ சித்துச்
சதுமறந்து தனித்துயர்ந்த சமாதி யுள்ளே
தனித்துநின்ற வனந்த வனுபோ கத்தை
நதுமறந்து போம்நாலு விக்கின மாற்று
நலமுற்ற சொரூபத்தி லயிக்க நன்றே. (225)

லயிக்கவே நன்ருன வகண்ட விர்த்தி
யாடாத காற்றில்லா விளக்குப் போல
அயிக்கவே மகோச்சலற்று நீரு முப்பு
மடங்கி நின்ற வாறதுபோ லழுந்தி நிற்கும்
தயிக்கவே பிறமனத் துறுத்தான் கெட்டுத்
தனித்துமே வேற்றுருவாய்ப் பிரம்மந் தானய்
இயக்கவே யிப்படிதான் கடிகை யொன்றே
யேற்றியே கடிகையுற்ருற் பலத்தைக் கேளே. (226)

கேளுமே அசுவாதி யாகங் கோடி
கிருபைபண்ணிச் செய்ததோர் பலத்துக் கொக்கும்
மூளுமே யிப்படிதான் சமாதி மூட்டில்
மூனையாகிச் சுழுத்தியென் றெண்ண வேண்டாம்
தேளுமே சுழுத்திக்குச் சித்தந் தானுந்
தியங்கிநின்று நினைவற்று நசித்துப் போகும்
ஆளுமே சமாதிக்கி யாப்பிரம் மென்றே
யாண்மையா யறிவிருத்தி யிருக்கும் பாரே. (227)

## சஞ்சார சமாதி

பாரென்று சொல்லுகையா விரண்டுக்கும் பேதம்
பேதம் பண்பாக நிரு விகற்ப சமாதி மார்க்கம்
தாரென்ற சஞ்சார சமாதி சேளு
சார்ந்துநின்ற நிருவிகற்பம் விட்டே யப்பால்
பேரென்றெ ழுந்துபிர பஞ்சத்தைப் பார்த்துப்
பிறவாக விவகரிக்குங் கால மெல்லாம்
ஆரென்ற பிரபஞ்ச மெலாஞ்ச முத்திரத்
தலைபோல தினிற்குநுரை போல்மா யந்தானே. (228)

தானான மாயமுற்றுச் சிலந்தியுடை வலைபோல்
    தயங்கிநின்ற கூர்மத்தி னங்கம் போல
ஆனான தோயமுற்ற வாகா சப்போ
    லமுந்கின்ற சொப்பனத்தி னடுவைப் போலே
நானான நம்மிடத்தே யுண்டாச் சையா
    நம்மிடத்தே யிருந்து காண்டு மாயம் புக்குக்
கானான வறிவிழந்து போவ தாலே
    கலந்துநம்மை விடவொன் றுங் காண்கி லேனே. (229)

காண்கிலேன் சகலமுமி யாமென் றுநில்லு
    கலந்துநா மொன்றல்லால் வேறொன் றில்லை
பூண்கிலே னெம்மிடத்தே பிறந்த வெல்லாம்
    பொய்யாக வழிந்த வெல்லா மெய்மி வெய்து
மேண்கிலே னெம்மைவிட வொன் றுமில்லை
    யியல்பாக வுறைந்துநில் லெந்நே ரந்தான்
மாண்கிலேன் மனத்தோடு சஞ்சா னித்து
    மருவியே யுள்ளிட்டங் குறைத னன்றே. (230)

உறைந்திட்டி ராசாவாற் பயந்தான் வந்து
    முரப்பெரிய பிராணனுக்குப் பயந்தான் வந்தும்
மறைந்திட்டு மானபங்க மகத்தாய் வந்து
    மயக்கமாய்க் கண்முன்னே தேவதைகள் வந்தும்
குறைந்திட்டுக் குருவினுடைக் கோபம் வந்துங்
    கொள்கையாம் விசற்பமென்ற மரியா தைக்குப்
பறைந்திட்டுப் பரிசாலந் தள்ளிப் போட்டுப்
    பதவிகற்ப மானதிங்கேயில்லை யென்னே. (231)

என்னவே யென்னிடத்தே யொன் றுங் காணே
    னியல்பாக நானொருவனென்று லென்னும்
பென்னவே நான்கண்ட வெல்லாம் பொய்பொய்
    பேரான சத்திய வளிந்தி ரசால
மன்னவே மனமுறைத்துச் சஞ்ச ரித்தால்
    மகத்தான சஞ்சார சமாதி யாயில்
அன்னவே யாரூட சமாதி தன்னை
    யாய்ந்துமம சொன்னபடி யறிந்து கொள்ளே (232)



## ஆரூட சமாதி

கொள்ளென்ற தேவதைகள் வந்தா லுந்தான்
    குவிந்துசட்டை பண்ணாதே யகண்ட மாய்நீ
நள்ளென்ற வத்துவித நெறியிற் கூடி
    யறிந்துமே சஞ்சார சமாதிக் குள்ளே
தெள்ளென்ற திடப்பட்ட பின்பு கேளு
    தெளிந்துமே சகலத்தில் சமுசயமும் போக்கித்
துள்ளென்ற சட்டசட்டி சைவிட்டாற் போற்
    றேற்றமாந் தேவதையை யசத்தாய்க் காணே. (233,

காணவே தேவதையை மனத்தி லெண்ணிக்
    சலங்காமல் மலைபோல அசைவு மற்று
நீணவே காற்றுப்போல் தேவதைக ளென்று
    நிச்சயித்தங் கொன்றுக நில்லு நில்லு
ஆணவே யத்துவித நிலைநா மென்றே
    யறிவோடே திடப்பட்டுத் திறத்தில் நில்லு
ஊணவே சாதகத்தி னிலையைக் கூடி
    லுத்தமமா மாரூட சமாதி யாச்சே. (234)

சமாதியெலாம் பார்க்குமுன் சாதகத்தைக் கேளு
    தம்பித்து வாசியைநீ பூட்டி மூட்டி
உமாதியாய் மூலங்கண்டு நிறைந்துபின்பு
    யோகமெல்லா மொவ்வொன்று பூட்டிப் பாரு
வமாதியாய் மாயமெல்லாந் தள்ளிப் போடு
    வகையாகச் சமாதியைந்தும் வாய்க்கும் வாய்க்கும்
தமாதியாய் நாலுமங்கே முன்னை தோன்றும்
    நாடினால் சமாதிக்கு முறையி தாமே (235)

## மவுன சமாதி

முறையான மவுனமென்ற சமாதி கேளு
    மொழிந்துநான் சொல்வதல குருசொல்ல வேணும்
மறையான மாயையறு மனஞ்செவ் வாகு
    மாசற்ற ராசமென்ற யோகந் தானு
மறையான மனஞ்சென்றே யறிவிற் கூடு
    மதீதமா மகண்டவெளி காந்தி காணும்
பறையான வடுக்சொல்லாம் படுதீப் பற்றும்
    பண்பான மவுனத்தை யறைகின் றேனே. (236)

அறைகிறேன் அகாரமூ லத்தில் நிற்கு
மப்பனே உகாரங்கண் டத்தில் நிற்கும்
வறைகிறேன் மகாரம ஹேன்மணியிற் நிற்கும்
வாகாக விழுத்தொன்ருய்க் கூட்டினக்கால்
நிறைகிறேன் மவுனமது அறிவிற் கூடும்
நின்றுறைக்கில் கண்டந்தா னுள்ளே கொள்ளும்
இறைகிறே னடச்சையிலு மிருச்சையிலு மைந்தா
விருந்துரைக்கப் பிரபஞ்சமெலா மெளிதாய்ப் போச்சே. (237)

போச்சுதே பாழாச்சு பின்முன் னில்லை
பெருமணியாந் தசநாதங் காதிற் கேட்டும்
ஆச்சுதே மதிகோடி வன்னி கோடி
யடங்காத ரவிகோடி காந்தி யாகும்
பாச்சுதே தினந்தோறும் பார்க்க கிட்டிப்
பண்பாக விழுங்கிப்போ மவுனப் பாம்பு
தேச்சுதே சடத்துக்குச் சிதைவ தானுஞ்
செடந்தானுஞ் சித்தியாய்த் திடமாய்ப் பண்ணே. (238)

திடமாசப் பண்ணிறைற் சடம்போ காது
சிதையாது மவுனத்தே சிறமாய் நில்லு
மடமாக மவுனத்தால் ரவியைப் பாரு
மனமொன்றி லகண்டத்தி ஞெளியே காணும்
பிடமாகச் சடங்காணும் பிடிக்கப் பொய்யாம்
பெரிதாங் கற்பூர தீபப்போ னிற்கும்
சடமாக நண்ணிறைற் சாய்கை யில்லை
சச்சிதா நந்தமென்ற தேகமாமே. (239)

தேகமா யாறுதலை யாறு காலாய்
சித்திமுத்தி யகன்றுநின்று பானு வுக்குள்
மாகமே யிப்படியே மதியைப் பார்த்தால்
மகத்தான வமிர்தமென்ற தேக மாகும்
பூகமே பொன்போல வண்ண மாகும்
பொருள்கடந்த கண்டத்திற் புகுத லாகும்
சோகமே சோமப்பா லுண்டு சட்டை
தோலுரியு மவுனத்தின ருட்சந் தானே. (240)



## அப்பியாசம் (பயிற்சி)

தானென்ற சமாதியைத்தான் முந்திப் பார்த்துச்
சாதித்தே யப்பியாசஞ் செய்யக் கேளு
ஊனென்ற வுகாரமாமு தாசனத்தைத் தள்ளு
உத்தமனே சிகாரமென்ற கோபம் போக்கு
வானென்ற வாயில்வந்தால் மனத்துட் கொள்ளு
மகத்தான தெய்வமென்ற வாசனைதான் முந்தும்
தேனென்ற விவையிரண்டுஞ் செயிக்க மாட்டார்
திறமாகத் தள்ளிவிட்டுச் சாமதி சேரு, (241)

சேராக முந்தித்து வத்தைப் பாரு
சேர்ந்தபின் பியமென்ற சரியை பாரு
பூராகக் கிரியையென்ற நியமம் பாரு
புகழான யோகமென்ற பிராணா யாமம்
பேராக வூன்றியபின் பிரத்தியா காரம்
பொதான தாரணையும் யோக மாச்சு
தாராகச் சமாதியைந்து ஞான மாச்சு
சாதகமா யிவை நான்குஞ் சார்ந்து பாரே. (242)

சார்ந்துமே நான்குமுறை பார்க்கு முன்னே
தனிபஞ்ச கிர்த்தியமெ லாஞ்சாதித் தேறி
மார்ந்துமே மவுனமாஞ் சமாதி பார்த்துக்
மாசல்சிவ மானதரி சனையைக் கண்டு
சார்ந்துமே தத்வலய சமாதி பார்த்துத்
தனித்தபின்பு சஞ்சார சமாதி சென்று
சேர்ந்துமே நிருவிகற்ப சமாதி யானல்
சிறந்தபின் பாரூட சமாதி யாமே. (243)

ஆமென்ற வேதாந் தசித்தாந் தத்தோ
டாண்மைசம தாந்தயப் பியாச மார்க்கம்
ஊனென்ற நாதாந்தம் யோக மார்க்க
முற்றுநின்ற போதாந்தம் ஞான மார்க்கம்
காமென்ற காலாந்தம் லயித்த மார்க்கங்
கைமுறையா யிவையாறுங் காணுங் காணும்
ஊனென்ற வுடம்பெடுத்து விட்டகுறை வந்தா
லுயர்ந்துநின்ற வகண்டமுன்னை யுண்ணுந் தானே. (244)

தானென்ற சர்ப்பமுனுந் தவளை போலுந்
தனித்துநின்ற கெருடன்கைக் கோழி போலும்
வேனென்ற வேங்கைகையி லாடு போலு
விளங்கியதோர் கீரியின்வாய்ச் சர்ப்பம் போலு
மானென்ற விடிவிழுந்த மலையைப் போலு
மகத்தான துட்டர்கையிற் செந்து போலும்
பானென்ற போதமுன்னைப் பாய்ந்தி றைஞ்சிப்
பருவமே நீயானுற் பண்ணுந் தானே. (245)

பண்ணவே தத்துவத்தைப் பரிந்து பாரு
பாங்கான யோகத்தில் மாய்ந்து பாரு
குண்ணவே மவுனத்தில் கூடிப் பாரு
கேசரிதான் யேதென்ருல் கூர்ந்து கேளு
நண்ணவே யிரவிமதி யென்னி மூன்று
நாடிநின்ற வறிவல்லோ கேசரிதன் மைந்தா
அண்ணவே யனந்தவே தாந்தம் பார்த்தே
னதிலொன்றுங் கேசரியை யார்ந்தி லேனே. (246)

## தசதீட்சை

ஆர்ந்துவசெவ் வாறுவே காந்த மார்க்க
மறிவாமூன் றெழுத்தினுபதேச முன்னே
நார்ந்துவது நாலெழுத்தி ரண்டாந் தீட்சை
நலம் பெறவே யைந்தெழுத்தும் மூன்ருந் தீட்சை
போர்ந்துவதா றெழுத்தஃது நாலாந் தீட்சை
பேரான யெட்டெழுத் தைந்தாந் தீட்சை
பார்ந்துவது பத்தெழுத் தாருந் தீட்சை
பதினைந்தட் சரமதுதா னேழு மாச்சே. (247)

ஏழோடே பதினறு டெட்டாந் தீட்சை
யேற்றமாஞ் சத்தியுடை பிரசா தவித்தை
ஊழோடே யொன்பதுதான் பின்பு கேளு
உத்தமனே பரமான பிரசாத வித்தை
மாழோடே பத்தாச்சு தீட்சை மார்க்கம்
மருவியதோர் பதினென்று மவுன தீட்சை
மூழோடே யாடாதங் கெட்டிற் சேர்க்கும்
மூதண்ட மனத்தைமெள்ள வறிவிற் சேரே. (248)



சேருநீ குருசொன்ன வெழுத்தை யாட்டித்
திடமாக வறிவிலே யகண்டத் தைப்பார்
ஆருநீ யாண்டமஃ துன்னைத் தூக்கு
மறிவிலே மனஞ்செல்ல நாத மோங்கும்
மாருநீ மவுனவித்தை சொல்லா ராசான்
மகத்தான வகண்டத்திற் சொக்கிப் புக்க
வாருநீ மந்திரம்பொய் வாயே மூடு
மாசற்ற பதினொராந் தீட்சை தானே. (249)

## குருபாத தரிசனம்

தானென்ற குருபதந்தா மரைப்பூப் போலச்
சகத்திரத் தினெட் டிதமாய் உடங்கி நிற்கும்
நானென்ற நடுவேதான் வட்ட மாக
நலமான வைங்கோணப் நிற்கும் பாரு
தேனென்ற நடுவில்சிவ சக்தி யொன்ருய்
செயலற்ற ருவமற்ருேமாயாக நிற்கும்
கானென்ற ரவிகோடி காந்தி யாகுங்
கண்கூசு மின்னலொளி கண்டி டாயே. (250)

## அருஞ்சொற்பொருள்

பா. எண்: 201 முதல் 250 வரை

பா எண் : 201—கிரர்தி = முடிச்சு; மசகம் = கொசுகு; சித்தருகட் = சித்தர்கள் பல கோடி யுகங்கள் இருப்பாராதலால் சித்தர் யுகம் என்பது மிகக் நீண்ட கால அளவைக் குறிக்கும்.

பா எண் : 202—பளிச்சென்ருல் = சோதிகண்டால்; உள்ளே சார = உள்ளே அடங்க.

பா எண் : 203—முனை = சுழிமுனை.

பா எண் : 204—மூலம் = மூலாதாரம்; நாடிசுத்தி = மூன்று நாடிகட்கும் தூய்மையாம்.

பா எண் : 205—இறுகும் = திண்மையுறும்; நலியான = துன்பமாகிற; போகும் = செறலற்றுப்போகும்; அளைந்து = ஆழ்ந்து ஆய்ந்து.

பா எண் : 206—காந்தி = ஒளி.

பா எண் : 207 வசியம் = இலயம்; போதம் = ஞானம்.

பா எண் : 208—நாலில் = நாற்கோண வீடாகிய மூலாதாரத்தில்; பலித்திடும் = சித்தியாகும்.

பா எண் : 209—பெண் = சத்தி; ஏகமாய் = ஒன்ருக.

பா எண் : 210—முந்தில் = முன்னதாகச் சித்தெய்தினுல்; வரவு = பிறப்பு; வசந்தி = பிராயாசைப்பட்டு; சாந்தி = அமைதிநிலை.

பா எண் : 211—உகாரம் = மயிர்ப்பாலம்; சிகாரம் = உடல்; நெருப்பாறு = உடலில் புக்கிருக்கும் ஆணவம் (இவை இரண்டும் பிறப்பிறப்புக்கு வித்தாம்); புக்கி = புகுந்து; உறைந்து = வசித்து.

பா எண் : 212—கண்டத்தே = கழுத்திலே.

பா எண் : 213—பிரத்தியாம் = (குறுக்கல்) பிரத்தியாகார மென்ற யோகநிலை.

பா எண் : 214—நிசி = இரவு; நடுச்சாமம் = நள்ளிரவு; நலங்காமல் அசைவற்று இரு = தன்வயம் நீத்து சொக்கியிரு; குமிழி = ஒருவகை மரத்தின் காய் (குமிழமரத்தின் காய்).

பா எண் : 215—கண்டம் = கழுத்து (விசுத்தி); சாவு பொய்யாம் = இறத்தலில்லை.

பா. எண் : 216—குதிரை = மூச்சு (வாசி).

பா. எண் : 217—தூலம் = கண்ணுக்குப்புலனுகுர்; சூக்குமம் = கண்ணுக்குப் புலனுகாதது; பிரகிருதி = பிரபஞ்ச வெளித்தோற்றம்.

பா. எண் ; 218—புருடன் = ஆன்மா (சாங்கியார் கூற்று).

பா. எண் : 221—லயித்து = சொக்கி.

பா. எண் : 222—காலமென்ற திரயம் = நிகழ் எதிர், இறந்த என்று கூறும் முக்காலம்; பாசம் = தளை.

பா. எண் : 223—விக்கினம் = இடர்.

பா. எண் : 226—கடிகை = நாழிகை (24 நிமிடம்).

பா: எண் : 227 அசுவாதியாகம் = அசுவமேதம் என்னும் வேள்வி.

பா. எண் : 229—கூர்மத்தினங்கம் = ஆமையின் அவயங்கள்.



பா. எண் : 231—பிராணன் = உயிர்.

பா. எண் : 232—அத்துவித = இரண்டற்ற; சமுசயம் = ஐயப்பாடு.

பா. எண் : 236—அகண்டவெளிகாந்தி = வெளியொளிப்பாழ்.

பா. எண் : 240—மாகம் = விண் (வெளி அல்லது யாழ் எனப்படும்) சோமப்பால் = சிதாகாச வெளியில் தோன்றும் மதியினிடமிருந்தொழுகும் அமுதம்.

பா. எண் : 242—சரியை = நடைமுறை ஒழுங்கு; கிரியை = செயல்முறை (வேதவிதிப்படி) ஒழுங்கு; பிராணயாமம் = மூச்சை முறைப்படி உள்ளிழுத்து, அடக்கி, வெளிவிடப்பழகும் முறை.

பா. எண் : 243—சஞ்சாரமாதி = சஞ்சாரசமாதி.

பா. எண் : 244—காலாந்தம் = காலம்முற்றும்.

பா. எண் : 245 சர்ப்பம் = பாம்பு; செந்து = பிராணி (சீவன்).

பா. எண் : 250—தயங்கி = விளக்கமாக.

---

கண்டிட்டால் தத்துவங்கள் சூழ்ந்து நிற்குங்
கருத்தாகத் தத்துவத்தின் தரிசனை யைக்காண்
மண்டிட்டால் ஞானத்துக் காதி பீடம்
அண்டமெல்லாம் போகுதடா வுருவித் தாண்டி
வண்டிட்டா ல்ஞானமென்பார் வாய்ப்பேச் சாலே
வந்ததென்று விந்தைசொல்லி வாது காட்டிக்
கொண்டிட்டால் குணங்குறிகள் காட்ட மாட்டார்
கோடிதான் திருப்பாட்டுக் கூறு வாரே. (251)

## சிவ தரிசனம்

கூறுவார் குருபதத்தின் தத்துவத்தைத் தாண்டி
குறிப்பான சிவதரி சனத்தைக் கேளு
தேறுவார் சிவகலை கோடிரவி போலச்
சிறப்பாக நின்றதடா திறமாய்ப் பாரு
ஆறுவார் சீவனென்ன சிவமே யாயிற்று
அறைகிறே னதில்நின்று லுறையவொட்டா
தூறுவா ருன்னியதில் நின்று யானல்
உயரவே தூக்கிமெள்ள விழுக்குந் தானே. (252)

இழுக்கான மூலமுத லாறுந் தள்ளி
    ஏறிநின்று மேலாறு மடுத்து நோக்கி
உழுக்கான வுன்மனையைத் தாண்டி யேறி
    உதிப்பான ஞானசத்திக் குள்ளே சென்று
அழுக்கான கேசரியா மவுனத் தூடி
    அந்தத்தின் பராபரமாம் ஞான மூர்த்தி
பிழுக்கான காலமொடு பிறப்பிறப்பும் போகும்
    பிடித்துவிட்ட சூத்திரம்போ லோங்கார மாமே. (253)

ஓங்கார மொத்துநின்று மண்ணை யுண்ணும்
    உருவியந்த மண்சென்று தண்ணீ ருண்ணும்
தேங்காரந் தண்ணீர்தான் தீயை யுண்ணுந்
    தீங்கான தீச்சென்று காலை யுண்ணும்
காங்காரங் கால்சென்று விண்ணை யுண்ணுங்
    கருத்தழிந்து விழுந்ததென்று சடமென் றெண்ணு
வேங்காரம் வேதாந்த சித்தாந்தம் போச்சு
    மேலேறி மதுவுண்டு விரைந்து பாரே. (254)

உண்டோங்கா ரமைந்தெழுத்தோ ராறும்
    ஒத்துநின்ற பஞ்சகர்த்த ரிருக்குந் தானம்
அண்டிமாங் காரமோட ணவமு மற்றங்
    கதிட்டான நானென்ற தற்றுப் போனல்
பண்டுதா னகாரமுட னுகாரங் காணும்
    பாங்கான மகார மொடுவிந்து நாதம்
விண்டவதின் மேல்நிற்கும் பராப ரந்தான்
    வெளியான மவுனத்தைம் பற்றி யேறே. (255)

ஒடுக்கம்

ஏறவே அகாரமுகா ரத்தைக் கொள்ளு
    மேற்றமா முகாரமகா ரத்தைக் கொள்ளும்
பாறவே மகாரம்விந் துவையுட் கொள்ளும்
    பரமான விந்துநா தத்தைக் கொள்ளும்
சாறவே நாதஞ் சத்தியைத்தான் கொள்ளுஞ்
    தனித்துநின்ற சத்தியல்லோ சிவத்தைக் கொள்ளும்
சீறவே சிவந்தன்னை பரந்தான் கொள்ளுஞ்
    சிவம்பரந்தைக் கண்டவிடஞ் சேர்ந்தங் குன்னே. (256)



சேர்ந்துநின்ற மூயிமூல லாறும் பார்ந்துச்
    சுழிமுனைதா னுருவிநன்ற தோற்றம் பார்த்துச்
சார்ந்துநின்ற மதிமேலே சாம்பவியைக் கண்டு
    தாக்கிநின்று மனமுறைத்துத் தேர்ந்த பின்பு
பார்நின்ற திவ்வளவும் யோக மார்க்கம்
    பகலிரவு மற்றவிட ஞான மார்க்கம்
கார்ந்துகன்னி நின்றவிடங் கண்டால் ஞானங்
    காட்டுவாள் கேசரியைக் கண்டு பாரே. (257)

சாம்பவி கேசரி

கண்டுபார் வாசியுன்னி மேலே யேற்றக்
    கைவிட்ட மயக்கத்தைக கீழே தள்வாள்
விண்டுபார் கணத்துக்கிள் வெளியுங் காணும்
    விடுபடுவா ளண்டரண்ட மாலை பூணைபான்
அண்டுபா ராதிவத்து மநாதி வத்தும்
    அதீதமா மிரண்டுமொன் றறிந்து கூடங்
குண்டுபார் நிர்க்குணத்தி லமிர்த மள்ளி
    உயர்ந்துநின்ற ஞான சத்தி யுண்மை தானே. (258)

உண்மையாம் வாசியென்று மவுன மென்று
    முத்தமமா மிரண்டுவித்தை யுரைக்கக் கேளு
தண்மையாஞ் சாம்பவி கேசரி யிரண்டுந்
    தனித்தேசி யோகத்துக் காதி வித்தை
வண்மையா மவுனமென்றால் ஞான வித்தை
    மாசென்ற மனமான லிரண்டும் பொய்யாம்
அண்மையா மறிவறிந்தா லிரண்டு மாகு
    மதீதநின்ற வெளியல்லோ வகண்டம் பாரே. (259)

பாரென்ற தீக்குள்ப ராபர மிருந்தார்
    பண் பாகக் கண்டவரார் சிவசித் தயோகி
ஏரென்ற வுன்மனைக்கே சரிக்கு ணிற்பாள்
    ஏறிப்பார் மவுனம்வைத்து ஊது ஊது
நீரென்ற நிர்க்குணந் தானதிலே கேளு
    நிலையான மவுனமொன் றதிலே யுண்டு
காரென்ற நிராகார மொன்று மில்லை
    காட்டுவதா ரறிவுகொண்டு கருதிக் காணே. (260)

### ஆறுமூலங்கூறல்

காணவே குண்டலிக்குள் மூல மொன்று
கண்டத்தில் பராபரமா மூல மொன்று
பூணவே புருவமைய மூல மொன்று
புகழான விந்துவிலே மூல மொன்று
தாணவே சத்தியிலே மூல மொன்று
தனித்துநின்ற பராபரத்தில் மூல மொன்று
ஆணவே யிவையாறுங் கண்டோன் ஞானி
அறிந்துணர்ந்தால் மும்மூல யோகி யாமே. (261)

யோகியா நகாரமுதல் யகார மட்டு
முறுதியாம் யோசத்தின் மூல மாயிற்
ருகியாம் அகாரமுதல் உகாரந் தொட்டே
அதீதமா மகாரவரை ஞான மூலம்
தேகியாந் தசநாத மவுனத்திற் காணுஞ்
சேர்ந்தேறச் சேர்ந்தேற வகண்ட வீதி
பூகியாங் காமப்பா லுண்டாற் கேளு
யோகசித்தி கடுங்கானற் பாலே யுண்ணே. (262)

### நாதவகை கூறல்

கடுங்கானற் பாலுண்ண ஞான சித்தி
கடிதான யோகத்தி லேந்து நாதம்
மடுங்கான மவுனத்தி லேந்து நாதம்
மறைதானுங் கடந்திடத்தே சுத்த நாதம்
விடுங்கானல் வெட்டவெளிக் குள்ளோர் நாதம்
மேலாம்போ தத்தில் கடந் திடத்தே நாதம்
தொடுங்கானற் செவித்துநிற்கு மெந்நா ளுந்தான்
தூரமல்ல காதமல்ல கண்ணிமைக்கு ளாமே. (263)

கண்ணிமைக்குள் விண்ணுக்குள் கலந்து காணுங்
கடிதான விண்ணேது வெளியங் கேது
ஒண்ணிமைக்கு ளொளியேது றைந்தவிம் மூன்று
முன்னதமாங்கேசரிதா னுயர்த்தி யாச்சு
துண்ணிமைக்குள் காதேது மூக்கங் கேது
நுண்ணிமையாங் கண்டிப்பு மழிந்து போயிற்
றுண்ணிமைக்கு ளொன்றிரண்டு சமரசந்தா னேதங்
குற்றுப்பார் வெட்டவெளி யொண்ணில் தானே. (264)



ஒண்ணியே நின்றுரைத்துப் பழக்க மாகி
உத்தமியா மனோன் மணித்தாய் புருமை யத்துள்
உண்ணியே யொளியோடே மவுனத்தை யொட்டி
ஊதியே சாம்பவியைக் கண்டு கொள்வாய்
நெண்ணியே யிவ்வளவும் யோக மார்க்கம்
நின்றவனே சிவயோக நினைவாய்க் கேளு
குண்ணியே விந்துவென்ற குருப தத்தில்
கூட்டப்பா மவுனத்தைத் தாரை யாமே. (265)

தாரையாம் விந்துவிலே ரவிமதியோ கோடி
தளுக்காகக் கண்கூசி மயக்க மாகும்
ஓரையாம் நாதத்திற் செவிடு பட்டே
ஊமைபோல் ரவிமழிந்தி னுடைபுநவத் தோன்றும்
வாரையாஞ் சத்தியிலே வன்னி யோடு
மாசற்ற கோடிரவி மதியு மொவ்வா
சூரையாஞ் சோமப்பா லுண்ட வர்க்கே
சூதான ஞானிக்கு மாயந் தானே. (266)

மாயமாஞ் சிவத்துக்குள் மவுனஞ் சென்றால்
மாசற்ற நவகோடி வன்னிரவி சோமன்
பாயமாம் பரத்தின்கீழ் முப்பா முண்டு
பார்க்கவே அகாரவு கார மொன்று
மோயமா மகாரமொன்று முப்பா மாக
முழங்கிற்றங் கதனெளியைச் சொல்லப் போகா
தேயமா மொழியுடைய வுன்ம னுந்தைத்
தேவியவள் பதமன்றோ கேசரிதான் காணே. (267)

கேசரியின் தாயான பதத்தின் காந்தி
கீர்த்திக்கங் கண்கொள்ளா விண்ணுங் கொள்ளா
ஆசரியின் பரையென்பா ரம்பரந்தா னென்பா
ரவளுக்கு மவுனமுண்டங் கறிவுன் றிப்பார்
நேசரியின் மவுனத்தே நிட்களமாய்ப் போவாய்
நிச்சயித்த வம்பரத்தில் ஏதோ ஏதோ
தூசரியின் படிமைந்தா லட்சியத் தினேர்மை
சொல்லவரி தப்புறத்தே சோதி தானே. (268)

தானென்ற மகாரவரை நாத வோசை
    தாயான கன்னிக்குப் பீட மாகும்
மானென்ற ஊணவப்பா மவுன ஞானம்
    மகத்தான நாதத்தோ டொன்றியொரு முனையாய்
ஊனென்ற வொருவழியா யொன்று யோடு
    மூட்புகுந்தால் தோற்றுவதங் கொன்று மில்லை
தூனென்ற சுத்தவெளி ரவிகோடி வன்னி
    சூழவப்பா மதிகோடி கண்கொள் ளாதே. (269)

கொள்ளாத வதீதமென்ற மகாரங் காணுங்
    குறிப்பான மகாரமல்லோ குருக்கைக் காட்டு
வள்ளாத மகாரமல்லோ வடங்கியந்தந் தாண்டி
    வழிகாட்டு மிடமல்லோ கேசரிதான் மைந்தா
மள்ளாத மகாரமென்ன மாலெழுத் தென்பார்
    மாட்டுவது மூன்றெழுத்தே யென்று காணர்
அள்ளாத மகாரமென்ன மவுன வித்தை
    யதீதவித்தை வாய்திறவா மவுன மாமே. (270)

மாமென்ற மவுனவித்தை மூன்றெழுத் தென்பார்
    மாட்டுகிற இனங்காணர் மார்க்கங் காணர்
வாமென்ற மவுனவித்தை வாய்மூட வென்பார்
    மாடாடு குதிரையிவை வாயால் பேசா
கோமென்ற மவுனவித்தை கேட்டி ருப்பார்
    கூடுவது காணர்கள் நாதங் கேளார்
ஆமென்ற மவுனவித்தை தாண்டிக் கெட்டில்
    ஆதியாந் தசநாதங் கேட்குங் காணே. (271)

காணேதான் மதியினுடை அமிர்தஞ் சிந்துங்
    கலங்காமல் துவாதசமுங் கடந்து தோன்றுந்
தானேதா னுசையறுந் தானெனலும் போகுந்
    தாரைபோல் அண்ணாக்கில் அமிர்த ஊறும்
ஆனேதான் ரவிகோடி காந்தி காணும்
    அகண்டபரி பூரணமாம் வெளிதான் தோன்றும்
தேனேதான் மேலமிர்த லகிரி மீறிச்
    சின்மாகும் மூன்றுகமுஞ் செயமு மாமே. (272)



செயமான வுலகத்து லகிரி யுண்டு
    தீர்க்கமாய் முதிர்ந்தபின்பு விண்ணுக்குள் லகிரி
வயமான மகாரத்தால் வந்து தூக்கும்
    மகாரத்தைக் கூட்டையிலே யறிந்து கூடு
குயமான கும்மென்ற நாதத்திற் கூடிக்
    குறியோடே யறிவென்ற மவுனத்தை மாட்டு
நயமான நாதக்கின் நாட்டங் கேளு
    நலங்காம லொருவழியே நாடி டாதே. (273)

நாடினு லக்கணமே முத்தி யாகும்
    நலமாக ஏறுதற்கு வழிமை யுங் கேளு
வாடினால் மூலத்தில் வாசி வைத்து
    வழியோடே பிராணயம் பண்ணித் தேறு
கூடினால் குண்டலிக்குள் நடனங் கண்டு
    கொடிதான ஆதித்த னொளியைக் காணு
ஆடினால் கண்டத்தி லங்ஙென் றூனு
    ஆடாது வாய்திறக்கா வழிசெய் வாயே. (274)

செவ்வையாய் நின்றுறைந்து பழக்க மானால்
    சிறப்பான மனோன்மணிதான் புருமை யத்தே
மவ்வையா மொளியோடே மவுனத்தை யூது
    மகத்தான சாம்பவியைக் கண்டு கொள்வாய்
நெவ்வையா யிவ்வளவும் யோக மார்க்கம்
    நின்றவனே சிவயோகி நிலைத்துக் காணு
தவ்வையாம் விந்துவென்ற குருப தத்தில்
    தாக்கவே மவுனத்தைத் தாரை யாமே. (275)

## அட்டாங்கம்

தாரையாம் அட்டாங்கஞ் சாற்றக் கேளு
    தனித்தனியே ஒவ்வொன்றாய்ச் விரித்துச் சொல்வேன்
நேரையாய்ச் சாட்டியமா நித்திரையைப் போக்கு
    நியமமாய்ச் சதாநித்தந் தாரகத்தி னில்லு
தூரையாய் மனங்குவிந்து கேசரியைப் பாரு
    சோமப்பால் கழிந்தோடுங் கேசரியைக் கண்டால்
காரையா யிரவிமதி வன்னி கூடிக்
    கலந்துநின்ற இடமல்லோ கேசரிதான் காணே. (276)

காணவே இயமமொடு நியம மாகுங்
கருதியதோ ராசனமும் பிராணு யாமம்
பூணவே பிரத்தியாகாரந் தாரணை யினேடு
பெருமையாந் தியானமொடு சமாதி யாகும்
ஏணவே யிவையெல்லா மெட்டே யங்கே
மிசைவான சித்தாந்தம் வேதாந்த மிரண்டும்
ஆணவே யடைவெல்லா சொல்லக் கேளு
அறிந்துகொள்ளு நிரைநிரையா யறிவாற் றுனே. (277)

## இயம வகை

தானென்ற இயமமது பத்து மாகுந்
தனித்ததோர் அகிம்சைசத் தியத்தி னேடே
ஆனென்ற வார்த்தீகம் பிரமங் கேளு
ஆச்சர்யந் தயவினெடு ஆட்சே பமாகும்
கானென்ற கடிமையியொடு திருதி கூடக்
கடிதான மிதாகரஞ் சவுசத் தோடு
பானென்ற பத்துமே யியமமாச்சு
பண்பான நியமத்தைப் பகரக் கேளே. (278)

## நியம வகை

பகரவே தவசுடனே சந்தோ டந்தான்
பாங்கான வார்த்தீக முயர்ந்த தானம்
திகரவே சிவபூசை சிரவணத் தோடே
செயலான லச்சையொடுமதிச பந்தான்
விகரவே விரத மோடு இவை பத்துந்தான்
விளங்கியே நியமமென்ற நெறியு மாகும்
அகரவே யாசனங்க ளொன்ப தைத்தான்
அறைகிறேன் வகையாகவறிந்து பாரே. (279)

## ஆசனப் பிராணுயாமங்களின் வகை

பாரென்ற சுவத்திகங் கோமுகத்தி னேடே
பதுமமொடு வீரமாம் சிங்க மாகும்
மூரென்ற பத்திர மொடுமுத்த தாகும்
முனையான மயூரமொடு சுகந்தா னுகும்
ஓரென்ற வொன்பதா சனந்தா னுயிற்று
உற்றுக்கேள் பிராணுயப் பிரிவு தன்னைக்
காரென்ற ரேசகமும் பூரகமுங் கும்பம்
கலந்துநின்ற உத்பீச நிர்ப்பீச மஞ்சே. (280



## பிரத்தியாகார வகை

அஞ்சவே யாறுவகை பிரத்தியா காரம்
மனுகூல சரீரமென்ற பிரத்தியா காரம்
இஞ்சவே யிந்திரியப் பிரத்தியா காரம்
இயலானப் பிராணனென்ற பிரத்தியா காரம்
கஞ்சவே கரணமென்ற பிரத்தியா காரங்
கைகலந்த காமிய மாம் பிரத்தியா காரம்
துஞ்சவே சர்வசங்க பிரத்தியா காரம்
சொல்லிவிட்டேன் தனியாறும் சூட்டிப் பாரே. (281)

## தாரணை வகை

சூட்டியே தாரணையி லாறுவிதம் சொல்வேன்
சுயபஞ்ச பூதத்தின் தாரணைதா னென்று
பூட்டியே பிராணனென்ற தாரணைதா னென்று
புகழான பிரமமென்ற தாரணைதா னென்று
தாட்டியே தேகமென்ற தாரணைதா னென்று
தத்துவதா ரணையொன்று சார்ந்து கேளு
மாட்டியே கிரமமென்ற தாரணைதா னென்று
மகத்தான ஆறுவித முண்டு பாரே. (282)

## தியான வகை

பார்க்கவே பத்துவிதந் தியானஞ் சொல்வேன்
பரிவான சடாதாரத் தியான மொன்று
மார்க்கவே தேகமென்ற தியான மொன்று
மருவிநின்ற மண்டலத்தின் தியான மொன்று
வேர்க்கவே பிரமனவன் தியான மொன்று
வெளியான விஷ்ணுவின் தியான மொன்று
ஊர்க்கவே உருத்திரனுர் தியான மொன்றங்கு
உயர்வான தேவதாத் தியான மொன்றே. (283)

## சமாதி வகை

தியானமாம் விசுவமென்ற தியான மொன்று
தீர்க்கமாம் பிரணவமென் றதியா னமொன்று
நியானமாம் நிராகாரத் தியான மொன்று
நேராகப் பத்தினுடை நிலைமை சொன்னேன்
வியானமாஞ் சமாதியைந்தும் விளம்பக் கேளு
விளங்கிநின்ற தத்துவலய சமாதி யொன்று
தயானமாம் சவிகற்ப சமாதி யொன்று
தனித்ததோர் நிருவிகற்ப சமாதி யொன்றே. (284)

## இயம விவரம்

ஒன்றான சஞ்சார சமாதி யொன்றும்
  முதிக்கின்ற ஆரூடசமாதி யொன்றும்
அன்றான சமாதிக்கு ஐந்துவிதஞ் சொன்னேன்
  அபமனே அட்டாங்க மெட்டு மாச்சு
பன்றான இயமமது பத்துங் கேளு
  பயனெல்லாஞ் சொல்லுகிறேன் பட்சிமிரு கங்கள்
துன்றான போதுன் றன் சுகதுக்கம் போலத்
  துப்புறவாய் மனதுற்றுத் தெளிந்தி டாயே. (285)

தெளிந்திட்டா லகிம்சைதா னென்று சொல்வார்
  சித்ததாந்தி விவரந்தான் சொல்லு மாறு
விளிந்திட்ட வேதாந்தி சொல்லு மாறு
  விரிவான பொறிவழியே யறிந்து நின்ற
அளிந்திட்ட வகண்டமென்ற பூர ணத்தை
  யறிந்திட்டுப் பரிச்சின்ன னுகக் கண்டு
தளிந்திட்ட சாதிவரு ஞச்சிரமத் தாலே
  சங்கற்ப விகற்பமெல்லாந் தள்ளிப் போடே. (286)

போட்டுமே வேறுகூ ருசப் பண்ணிப்
  பூதாமல் அகிம் சையாய்ச் சார்ந்து நிற்கில்
நீட்டுமே நின்றநிலை யகிம்சை யென்பார்
  நேரான பரிகாசம் விளையாட் டாலும்
ஈட்டுமே போய்விட் டே யெங்கு மான்மா
  வேற்றமாய் நிறைந்திருநத சொரூப மூர்த்தி
தாட்டுமே யிதுவல்லோ சத்தி யந்தான்
  தனித்தனியே கண்டிக்கப் படாதென் பாரே. (287)

என்பார்கள் அகிம்சையிற் கூடி நின்றங்கு
  ஏகபரி பூரணமா யிரும்ப தாகி
வன்பார்கள் வத்துவையுந் தவிர வேறே
  மார்க்கந்தா னில்லையென்று சந்தா னித்துத்
தன்பார்கள் சத்தியமாம் வாக்குக் காயம்
  சாதமென்றும் பாலன்றுங் கிரகி யாமல்
அன்பார்க ளபகரிப்பை விட்டுமன முறைத்தால்
  அநித்தியமாம் சரீராதி சுபாவ மாக்கே, (288)



ஆக்கினல் ஆர்த்தீக மென்று சொல்வார்
  அரிதாகச் சுககால மில்லா தோடித்
தூக்கினல் சுகமான பெண்வெ றுத்தால்
  தூலான சரீரமது சுவாதி யொன்று
நாக்கினல் சடிணமாம் விருத்தி யாலே
  நலமான பிரமமது சுபாவ மாக
நீக்கினல் மனத்தோடே சஞ்ச ரிக்கும்
  நேரான விதுபிரம சரிய மென்றே. (289)

சரியமென்றே யறிந்துபார் சகல மெல்லாந்
  தாரன சரீரத்தில் வருத்தத்தை நீக்கித்
துரியமென்றே சகலசன்ம நன்மைப் போலச்
  சுகம்வருதல் வல்லோர்க்குத் தலையயா மப்பா
பிரிய மன்றே தனக்கனத்தம் வெந்கா லுந்தான்
  பேரான சத்துருவுக் கிதமே செய்யில்
நெரியமென்றே யாட்சேப மிதையென் பார்கள்
  நேராக விதுவல்ல சொல்லக் கேளே. (290)

கேளப்பா வேதாந்த சாத்திரமே செம்மை
  கேள்வியற்ற சமயமெல்லாம் பொய்யென்று தள்ளி
தேளப்பா திடப்படி ஆட்சேப மாகும்
  செயமான சத்துருவும் வியாதி பீடை
வேளப்பா சீதளமு முட்டினமுந் துக்க
  மிக்கசுக மானபி மானம் வந்தும்
ஏளப்பா சொப்பனம்போ லாமென் றெண்ணி
  ஏங்காமற் சொக்குவது கடிமை யென்பார். (291)

என்பார்கள் வேதாந்தத் துள்ளே முத்தி
  எகுறியாம் சாத்திரத்தில் முத்தி யில்லை
மென்பார்க ளதினலே சொன்னபொரு ளென்ன
  வேறில்லை நாமதுதா னென்பதலோ முத்தி
உன்பார்கள் காரியத்தில் மனதிற் கோழை
  உருகாம லிருக்கிறதே திருதி யென்பார்
இன்பார்கள் வேதாந்தத் தாலே முத்தி
  இதைவிட்டால் மற்றொருன்று மில்லை யென்னே. (292)

இல்லையே பூரணத்தா னென்றெண்ணி
ஏகநித்த மறவாம லிருந்தா னாகில்
கொல்லையே வந்திடத்தே வந்ததொன்றி தில்லை
கூடி நின்றால் மிதாகார மொன்று மாகும்
வெல்லையே நிர்க்குணனும் வேறென் றில்லை
விருதாவா யாகாரந் தனைச் சுருக்கித்
தல்லையே மிருத்திகையுஞ் சலத்தி னாலே
தனித்துநின்ற வசத்தையப் பா சவுச மாச்சே. (293)

சவுசமாம் வேதாந்த சாரத் தாலே
சகசமென்ற திரயத்தி லேயுங் காணேன்
திவுசமாம் சொப்பனத்தி லவத்தைகளைக் கண்டு
நெருங்கி நின்று போனதில்லை வந்த தில்லை
விவுசமாம் வேதாந்தக் குருமு கத்தில்
விரைந்துகொண்டு காலம்வந்து நேர்ந்த தானால்
துவுசமா யிருப்பதுவே சவுச மாகுந்
துரிதமாம் இயமமென்ற பத்து மாச்சே. (294)

நியம விவரம்

பத்தான நியமத்தைப் பகரக் கேளு
பாங்கான சத்தியமென் னமித்தை யென்ன
நத்தான நானேது நானென் றதாரு
நமக்குத்தான் மாத்துவந்த பேத மேது
சுத்தான சோத்தியங்கா ணெதுவா லாச்சு
சுருதியாம் வேதாந்தத் தாலே பார்த்து
நித்தான நிரந்தரமு மாலோ சித்து
நீங்கிவிட்டாற் பொல்லாங்கைத் தவசு மாச்சே. (295)

ஆச்சுதே பிரமாதி லோகத் துள்ளே
அகழ்ந்துநின்ற காமியத்தை நரகம்போ லெண்ணி
தூச்சுதே வெறுப்புவந்து சொப்பனம் போலாச்சு
துக்கமிது வென்மசொல்லி மனது தேறி
தாச்சுதே பொருளான சச்சிதா னந்தந்
தடையற்றுத் தெளிந்துநின்று தான தானால்
போச்சுதே யானந்த வடிவு மாகிப்
போதமா யிருக்கிற்சந் தோடந் தானே. (296)



தானான வாகமமாம் புராணந் தன்னைத்
தணிவாக விட்டுவிட்டு நின்று கொண்டு
வேனான வேதாந்த பிரம சாரம்
விளங்குகின்ற குருச்சொல்பூ ரணமென் றெண்ணி
ஆனான தறிந்துகொண்டா லார்த்தீ கமாயிற்று
அரியதாய்க் குருவுரைத்த வுபதே சத்தைக்
கானான தறிந்துபொருள் முத்த னாகிக்
கருதியதோர் பதார்த்தமெல்லாங் குருவுக் கீயே. (297)

ஈந்துபரா பரம்நோக்கத் தான மாகும்
இருக்கிறதோர் தன்தேக சுகபோக மெல்லாம்
ஆய்ந்துபா ரார்செய்துந் தனக்குவந் தாப்போலே
அநேகசெந்து புசித்தவெல்லா நம்மென்று நிறுத்தி
நாய்ந்துபா ரொருமித்தால் ஈச்சுரர்க்குப் பூசை
நலமாக வாச்சுதென் றறிந்து கொள்ளு
தேய்ந்துபா ரிப்படி தான் திருப்தி யானால்
தீர்க்கமாம் சிவபூசை யென்று காணே. (298)

காணவே சாத்திரங்க ளெல்லாம் விட்டுக்
கலந்தாடு விருத்தியெல்லா மடித்துத் தள்ளித்
தாணவே தன்னிழல்போற் குருவின் பின்னே
சச்சிதானந்த வெள்ளந் தானென் றெண்ணித்
தோணவே தெளிவிக்கும் வஸ்துக் குள்ளே
தோற்றியே சாக்கிற்று மனந்தா னென்றால்
ஆணவே தெளிவிக்கு மபநி டத்தென்று
அறிவிக்கும் பூரணமே சரவண மாமே. (299)

அறிவிக்கு மாகாத வியாபா ரத்தால்
ஆதாய மிகுதியாய கப்பட் டாலும்
பொறிவிக்கு மதன்மேலே அபேட்சை விட்டுப்
பொறிதானும் புலன்வழியே போக்குண் டாக்கிக்
கெறிவிக்குங் கேட்டிருந்த ஞான மெல்லாங்
கெடியாக நிலைகுலைந்து லகத்தே சிக்கி
வறிவிக்கும் வாசனையாய் பெண்டிர் பிள்ளை
வருகின்ற பாசமெல்லா மிலச்சை யென்னே. (300)

## அருஞ்சொற்பொருள்

பா. எண் : 251 முதல் 300 வரை

பா. எண் : 251—உருவி = நழுவி, தாண்டி = கடந்து.

பா. எண் : 252—உன்னி = மனங்கொண்டு.

பா. எண் : 253—அடுத்து = நெருங்கி; சூத்திரம் = கயிறு.

பா. எண் : 254—மண் = பிருதிவி; கால் = வாயு; மேலேறி = ஆருதாரங்கடந்து சிதாகாசம் நண்ணி.

பா. எண் : 255—பந்கர்ந்தர் = சிவன்; தானம் = (ஸ்தானம்) இருப்பிடம்; அதிட்டானம் = தலைமைத்தானம்.

பா. எண் : 256—பரம் = வெளி.

பா. எண் : 260—ஊது ஊது = வாசியோகம் செய்.

பா. எண் : 261—மும்மூலம் = மூலாதாரம், கண்டம், (விசுத்தி), புருவமையம் (ஆக்கினை).

பா. எண் : 264—உன்தம் = மேலானது; உயர்த்தி = உயர்வு.

பா. எண் : 266—ஊமையென்ற எழுத்தினூடை = மகாரத்தினுடைய.

பா. எண் : 267—சோமன் = சந்திரன் சொல்லப்போக = கூற இயலாது.

பா. எண் : 271—மாட்டுகிறவினம்காணுர் = கூடுகிறவிதம்; மார்க்கம் = வழி; தசநாதம் = பத்துவகை ஓசை.

பா. எண் : 272—தானெனலும்போகும் = அகம்பாவம் போம்; தாரை = இடையரு ஒழுக்கு.

பா. எண் : 273—வருசெல்வாமே = மார்க்கம் செம்மையாகும்.

பா. எண் : 275 குருபதம் = (சகஸ்ராரம்) ஆயிரத்தட்டிழ்த் தாமரை.

பா. எண் : 276—விரித்து = விரிவாக்க; சாட்டியமாம் = நேயாம்; தாரகத்தில் நில்லு = மாயா உலகிலிருந்து மெய்யுலகுக்குத்தாண்டத் (தாரகம் = தாண்டுவித்தல்) துணை செய்யும் மகா மந்திரம்.

பா. எண் : 277—ஏணவே = மேம்பாடமைய; அடைகவல்லாம் = விவரங்களெல்லாம்; நிரைநிரையாய் = படிப்படியாய்.



பா. எண் : 285—பட்சி = பறப்பான; மிருகங்கள் = மற்றை இனப் பிராணிகள்; சுகதுக்கம் = இன்ப துன்பம்.

பா. எண் : 287—பரிகாசம் = ஏளனம்.

பா. எண் : 288—சுபாவம் = இயல்பு; அநித்தியம் - நிலையற்றது.

பா. எண் : 290—அனத்தம் = (அநர்த்தம்) தீங்கு; இதம் = நலம்.

பா. எண் : 291—பீடை = பிடித்திருப்பது; ஏங்காமல் = மனத்தில்; விசாரம = கொள்ளாமல்.

பா. எண் : 293—விருதா = வீண்.

பா. எண் : 295—மித்தை = பொய்.

பா. எண் : 298—நிறுத்தி = மனத்தில் கொண்டு.

பா. எண் : 299—தோண ஆணவே = மேன்மையுறவே.

பா. எண் : 300—ஆதாயம் = இலாபம்; அப்பட்சை = ஆசை; குலைநது = சதறி.

---

என்னவே யெண்ணியந்த மதியா றிவந்தால்
இயல்பாக வழிசகத்தி லிருந்து கொண்டு
தின்னவே மனதொன்றி வேதாந்தம் பார்த்துச்
சீராக நிற்கிறதே லச்சை யாகும்
வென்னவே வேதாந்த பிரமந் தன்னில்
விரைந்துநிறை பூரணத்தைத் தினந்தானேக்க
நுன்னவே கோழைவிட்டுத் தெளிவு வந்து
நுட்பமுற்ருல் மதியென்று சொல்லலாமே. (301)

சொல்லவே நான்பிரம மென்றே யாசான்
சுருதிதநவுபதேசப் படியே நின்று
வெல்லவே வேதாந்தம் பொருளென் றெண்ணி
மிகுதியா மாசைதனைத் தளளி விட்டால்
மல்லவே மனமொத்தால் ஜபமி தாச்சு
மற்றவெல்லாம் செபமல்ல மாயங் காணும்
வல்லவே மவுனத்தை ஐம்பொறியின் வழியில்
மருவாம னிறுத்திஞல் மாயம் போமே. (302)

மாயமல்ல நாம்பிரம மென்றே யெண்ணி
மனதொத்து நிரந்தரமும் வேதாந்தம் பார்த்துப்
போயமல்ல வெந்தந்தக் காரியங்கள் வந்தும்
புகழான துக்கம்வந் தும்சுகந்தான் வந்தும்
காயமல்ல குருசொன்ன காரியத்தின் வழியே
கைமுறையாய் நிற்பதுவே விரத மாச்சு
நேயமல்ல நியமமென்ற பத்துஞ் சொன்னேன்
நேராக வருபதையு மனுட்டித் தேறே. (303)

ஏறியிந்த இருபதையு மனுட்டித் தக்கால்
ஏற்றமா மனந்திடமா மில்லா விட்டால்
தேறியிந்தச் சுவரில்லாச் சித்திரம் போலாகுஞ்
சிறந்தசுவ ரடிப்படைதான் வைக்கு முன்னே
சூறியிந்தச் சூழிகைதான் வைத்ததுக்கு மொக்குந்
துப்புரவாய்க் காயசித்தி பண்ணு முன்னே
ஆறியிந்தச் சதுர்யுகத்தைக் கண்ட தொக்கும்
அனுட்டித்தா லிருபதையும் அறிவுண் டாமே. (304)

அறிவுண்டாய் சகித்தோடே மூத்தி காணுன்
ஐக்கியமாய் மாண்டபின்பு முத்தி யெங்கே
நெறியுண்டாய்ச் சடத்தோடே சித்தி காணுன்
நேராக வட்டாங்க மறிந்தே யுன்னு
தறியுண்டாய்ச் சுகாசனமா யிருந்து கொண்டு
தனித்த தோர்மூலத்தில் வங்யென் றுஹூரி
குறியுண்டாய்க்கு மாத்திரையை யேற்றிக்
கூருக சிக ரத்தால் ரேசிப் பாயே. (305)

ரேசித்த படிதான்அங் ஙென்று கும்பி
நிலவரமா யிஃதிரண்டுந் தீர்ந்த பின்பு
ஆசித்து அகாரமுதல் உகாரங் கூட்டி
அப்பனே மவுனத்தால் கும்பித் தேறு
மாசித்து மவுனந்தான் குவிந்த பின்பு
மருவியதோர் மூலத்தை விட்டு நீட்டு
காசிந்துக் கண்டத்தே நின்றங் கூது
காலடங்கி யுறைத்தபின்மேல் மூலம் பாரே. (306)



பார்த்துமே யறிவோடே மவுனம் பூரி
பரிவாகப் பூரணத்தை யதற்குள் கும்பி
நீர்த்துமே நினைவோடே ரேசகத்தைப் பண்ணு
நிர்ப்பீசம் பிரமமென்ற பிராணு யாமம்
பூத்துமேப் ரபஞ்சமென்ற வாசை விட்டு
பின்னென்று மனத்தினுள்ளே சங்கி யாமல்
ஆர்த்துமே யந்தமென்ற கரண மாகி
அந்தமென்ற மாக்கத்தி லாடிக் காணே. (307)

## ஆசன விவரம்

ஆடியே யாசனத்தை விரித்துச் சொல்வேன்
அதிகமாஞ் சுவத்திகத்தை யறியக் கேளு
மூடியே முழங்காலாங் குளச்சி ரண்டில்
முனிந்தவிரு கால்வைக்கச் சுவத்தீக மாச்சு
தேடியே சிங்கவா சனத்தைக் கேளு
சிறந்தயோக வேட்டிதனைப் போட்டுக் கொண்டு
நாடியே முழங்காலிற் கரங்கள் நீட்டி
நுனிமுக்கைப் பார்த்திருப்பார் நிசமாங் காணே. (308)

நிசமான பத்திராச னத்தைக் கேளு
நேராக வுட்கார்ந்து காலி ரண்டும்
துசமான பிறகாலே கையாற் கட்டிச்
சுகமுற்றங் கிருக்கையா சனமு மாச்சு
மூசமான முத்தாச னத்தைக் கேளு
முனிந்துமே கரடுமேற் கரடு போட்டுக்
குசமான குதத்துக்குள் குதியை வைத்துக்
கூசாம லிருப்ப பதிந்தக் கொள்கை தானே. (309)

கொள்கையா மயூராச னத்தைக் கேளு
குறிப்பறவே யிருகையுந் தரையி லூன்றிக்
கள்கையா முழங்கையைத் தொப்புளிலே வைத்துக்
கலந்துநின்று தடிபோலக் கலரு வார்கள்
துள்கையாஞ் சுகமுற்ற வாசனத்தைக் கேளு
சுகமாக வேண்டியதோர் படியி ருப்பா
முள்கையா மொன்பதுக்கும் பருவஞ் சொன்னே
உறைந்தினிப்பி ராணுய முரைக்கக் கேளே. (310)

## பிராணுயாம விவரம்

உரைக்கவே ரேசகந்தான் விடுவ தாகு
    மோங்கியதோா பூரகந்தா னுள்ளே வாங்கல்
தரைக்கவே கும்பகந்தம் பித்தி ருத்தல்
    தாங்கியதோ ருந்பீச மந்திரத்தி லூடல்
விரைக்கவே நிர்ப்பீச மந்திரத்தை விட்டு
    வெளியிலே பூரித்தல் மெதுவி லேதான்
அரைக்கவே யஞ்சுவிதம் பிராணு யாமம்
    அசையாம லாசனத்தி லிருத்திப் பாரே. (311)

பார்க்கவே மாத்திரைதான் பதினு றப்பா
    பண்பாகப் பூரிப்பாய் மூலத துள்ளே.
ஆர்க்கவே மாத்திரைதா னறுபத் தினுல்
    அடைவாகக் கும்பித்துப் பாரு பாரு
மூர்க்கவே மாத்திரைதான் முப்பத் திரண்டு
    முனையாக ரேசிப்பாய் தவறி டாமல்
நார்க்கவே யறிந்துகொண்டு நந்தியைத்தான் பார்த்து
    நலத்தபின்பு பிரம்மதல நாடி யூந்து. (312)

நாடியே விண்டுவிலே நயந்தே யூது
    நலமாக வுறைத்தபின்பு ருத்தினிற் சேரு
ஊடியே மகேச்சுரத்தி னின்றே யூகங்
    குறைத்தபின்பு சதாசிவத்தி லுகந்து கூடாய்
ஓடியே யாறுதல மூதி யேற
    உகந்துமே யொன்ருச்சு பிராணு யாமம்
பீடியே பிரமகத்தித் ரீயா மத்தி
    பேராக வொருமுறைக்குள் நீங்கிப் போமே. (313)

நீங்கிப்போம் பிராணுயஞ் செய்யும் போது
    நிலைத்துமே மாத்திரைதா னேற வேற
காங்கிப்போங் கம்பமுறும் வேர்வை கொள்ளும்
    கதித்துமேக் கபாலத்தை யசைத்துத் தூக்கும்
ஊங்கிப்போ மும்மலமுங் களிம்பு போகு
    மரத்துநின்ற நாடியெல்லாஞ் சுத்தி யாகும்
ஓங்கிப்போம் பிராணுய முறைத்த தானுல்
    ஓங்குமே தசநாத முண்மை தானே. (314)



உண்மையெட்டுப் பருவமுண்டு பிராணு யாமத்
    தொளியாமற் சொல்லுகிறே னுகந்து கேளு
வெண்மைபற்றி நின்றமுந்தி வேர்வை காணு
    மிக்கநின்று தம்பிக்கு மிரண்டாம் பட்சம்
திண்மையொத்த தீபனமா மூன்ரும் பட்சம்
    செடந்தானும் லகுவாகு நாலாம் பட்சம்
பெண்மையொத்துப் பிரகாசிக்கு மைந்தாம் பட்சம்
    பேரான குண்டலிமே லாறிலாமே. (315)

ஆறவே யேழுக்கு ளாகாச கமன
    மதிகமாந் தூரதிருட்டி யறியப் பண்ணும்
ஏறவே யெட்டினுடை பெருமை கேளு
    ஏற்றமாங் கேசரத்தில் தசநா தங்கள்
நாறவே நல்வினையுந் தீவினையும் தீரும்
    நயந்தபின் நாடிசுத்தி தானு மாகும்
ஊறவே காமப்பா லுடம்போடே கலக்கும்
    உகந்துமே பிராணுயா முரைத்துப் பாரே. (316)

## பிரத்தியாகார விவரம்

உரைத்துமே சொல்லுகிறேன் பிரத்தியா சாரம்
    உண்மையாய் வாசனையின் வழியிற் சென்று
மிரைத்துமே நடத்திவைக்கு மிந்திரியந் தானு
    மிகையான மனத்தைமெள்ள முயற்சி யாக்கி
விரைத்துமே திரிகிறதைத் திரியொட் டாமல்
    வெட்டியதை மறிக்கிறதே பிரத்தியா காரம்
இரைத்துமே யிதற்துள்ளே யாறுவித முண்டஃ
    தெடுத்துமே சொல்லுகிறே னியல்பாய்க் கேளே. (317)

இயல்பான சரீரமென்ற பிரத்தியா கார
    மெய்துகிற திரண்டுவிதம் நன்ருய்க் கேளு
நயல்பான பிரபஞ்சத்தில் மனம்போ காமல்
    நலமாகச் சமாதியிலே யிருத்த லொன்ரும்
கயல்பான நாடிசுத்தி கலந்த பின்பு
    கடந்துபோ மிளமையெல்லா மழைப்ப தொன்ரும்
உயல்பான வொருபொருளை நாடிநின்ருல்
    உத்தமனே பிரத்தியா கார மாச்சே. (318)

ஆச்சென்ற விந்திரியப் பிரத்தியா கார
    மாண்மையுற்ற விந்திரியந் தன்தன் போக்காய்
போச்சென்று போகாமற் சமாதியிலே யழைத்துப்
    புத்தியொத்துப் பூட்டுகிற தென்று காணு
நீச்சென்ற பிராணனும் பிரத்தியா கார
    நேர்மையொத்து நாடிசுத்தி யான பின்னே
ஊச்சென்ற வுச்சிமுத லாடத் தோடே
    உறுதியொத்த வாக்கினையுஞ் சோத்தி ரந்தானும். (319)

தானான நேத்திர மூ நாசி வாய்தான்
    தனித்தவடி நாக்குத்தான் கண்ட நெஞ்சும்
ஊனான வுதரமோ டிடுப்பு நாபி
    உற்றதொடை முழங்காலும் பாதங் கேளு
ஆனான வங்குட்ட மவய வங்கள்
    ஆயோடு பிராணனைத்தான் தானம் விட்டு
வேனான தானத்தில் விரைந்த ழைத்து
    விடுகிறது பிராணமென்ற பிரத்திய மாமே. (320)

ஆமென்ற வந்தமாங் கரணந் தன்னை
    அலைந்துபிர பஞ்சத்தே யணுகொட் டாமல்
வானென்ற வத்துடனே மார்க்கத் தூடி
    மகத்தான காமியத்தை நரகம்போ லெண்ணி
தாமென்ற சங்கற்ப விகற்ப மெல்லாந்
    தனியான மனதுக்குள் சங்கி யாமல்
வேனென்ற வேதாந்த விசாரத் தாலே
    விளங்கியதோர் ஞானத்தி லிருத்த னன்றே. (321)

இருத்தினல் காமியமாம் பிரத்தியா கார
    எளிதான தனதான்யம் பொன்னும் மண்ணும்
தருத்தின லாபரணஞ் சகல வத்துந்
    தந்ததினல் மனதிலேய பேட்சிக் காமல்
வருத்தினல் வயிராக்கிய மனதி லெண்ணி
    மனம்வெறுத்து விடுதல்மெத்த வுயர்த்தி கேளு
பருத்தினல் சர்வசங்கப் பிரத்தியா காரம்
    பரிவாக வேதாந்தம் பார்த்துத் தேறே. (322)



தேறவே சாட்சியெங்கும் நாமாய் நின்றேஞ்
    சிதைந்து நின்ற மாயமெல்லாம் நமக்குக் கீழே
ஊறவே நிரந்தரமு முறைத்து நின்றே
    உகந்துநின்ற பிரபஞ்ச மெலாமித் தையென்று
நீறவே நின்றவனே யவனே முத்தன்
    நிலையாறும் பிரத்தியா கார மாகும்
ஆறவே யாறுவித தாரணையைச் சொல்வேன்
    ஆய்ந்துநின்ற பூதமைந்து மறிந்து கேளே. (323)

## தாரணை விவரம்

கேளென்ற சரீரத்தில் பஞ்ச பூதங்
    கெடியாக விருக்கின்ற தானத் துள்ளே
மானென்ற மண்டலத்தில் வண்ண முற்று
    மனதுள்ளே தரித்துடனே பிராண தாரை
பாளென்ற பதினலு மூலந் தொட்டுப்
    பருவமுடன் பிராணனைத்தான் தரிக்கப் பண்ணில்
தாளென்ற கிரமத்தோ டேசஞ்ச ரிக்கில்
    தாரணைதா னறுவிதஞ் சாதிப் பார்க்கே. (324)

## தியான விவரம்

சாதித்த தியானத்தைச் சாற்றக் கேளு
    சட்டமாம் பிரமன்றன் வீட்டுக் குள்ளே
காதித்த குண்டலமுங் கமண்டலமுங் கிரீடங்
    கலந்துநின்ற சரச்சுவதி லோக பாலாள்
சோதித்த பரிவாரஞ் சூழ்ந்து நிற்கச்
    சொல்லுகிறேன் தானத்திற் சூட்டி நோக்கு
மாதித்த திருமாலின் தியானங் கேளு
    மாசற்ற பச்சை வண்ணம் வருத்தி டாயே. (325)

வருத்திட்ட சங்கோடு சக்கரமுந் தடியும்
    வகைந்துநின்ற பதுமமொடு நாற்க ரங்கள்
குருத்திட்ட குண்டலமுங் கிரீடம் வைத்துக்
    கொத்தான முத்தோடு துளவ மாலை
கறுத்திட்ட கவுத்துவமாம் ரத்னம் பூண்டு
    கையடுக்க லட்சுமியுங் கலந்து வைத்தே
அருத்திட்ட பிரமாதி லோக பாலா
    அருகிருக்கத் தியானிப்பா ரறிந்து காணே. (326)

அறிந்துமே உருத்திரனைத் தியானம் பண்ணு
ஆண்மையைந் தெழுத்துமா யுதங்க ளோடு
புரிந்துமே குண்டலமுங் கிரீட மொன்று
புகழான வுருத்திரியை வாமம் வைத்தே
எரிந்துமே யிருக்கிறதாய்த் தியானித் துள்ளே
எளிதர்க வுபாசிப்பார் பெரியோர் தாமும்
மறிந்துமே மகேச்சுரனைக் கறுப்பாய் நோக்கி
மாசற்றர்ச் சிப்பார்கள் வண்மை யாமே. (327)

வண்மையாய்ச் சதாசிவனை மனோன்மணியை நோக்கி
மனதுன்னித் தியானிப்பா ரதீத மெத்த
அண்மையா யிப்படியே யாறுவகைத் தியானம்
ஆனபின்பு மண்டலத்தில் மூன்றுவகைத் தியானம்
உண்மையா யிப்படியே யுபாசிப் பார்கள்
உத்தமமாந் தேவாதி தியானமாச்சு
விண்மையாய் விசுவமென்ற தியானங் கேளு
விளங்கிநின்ற பிரபஞ்ச மெலாஞ்சரீ ரமென்றே. (328)

சரீரமென்றே நானென்று மபிமா னித்துத்
தனித்து நின்ற வீச்சுரனைச் சிந்திப் பார்கள்
சரீரமென்றே சிவனுக்குச் சரீர மாகக்
கலந்துநின்ற லிங்கத்தைக் கண்டாப் போல
உரீரமென்றே ரூபமாய் நின்ற வெல்லா
உண்மையா யீச்சுரனைப் போலே பார்ப்பார்
புரீரமென்றே பிரணவத்தின் தியானங் கேளு
புகழ்பெறவே யொன்றைந்து முப்பத் தாறே. (329)

ஆரேடு பிரகிருதி யென்றபுரு டனப்பா
அதீதமாம் பரமார்த்த மூன்றுய்க் கண்டு
மாரேடு மகாசமட்டி யந்திர சமட்டி
மருவிநின்ற வியட்டியாய்ப் பிரித்துக் கொண்டு
தேரேடு மந்திரத்தாற் பூசை பண்ணிச்
செபித்துநின்று பாசிப்பார் நாற்பத்தி ரண்டாய்
ஊரேடு ஒவ்வொன்றை யெட்டாப் பங்கிட்டு
உயர்ந்துநின்ற வித்தனையும் வித்தை யாமே. (330)



வித்தையாம் பிரமமென்ற தியானங் கேளு
விரிவான மாயையொடு மாயா பூமி
அத்தையாஞ் சுத்தமென்ற சைதந் யந்தான்
சுருதியா யிம்மூன்று விண்ணைப் போலே
மத்தையா மறைந்திருக்கக் கண்டு சண்டு
மதித்தவரைத் தீர்த்தமுத்திச் சேத்திர மாய்ப்பார்
உத்தையா யெந்நேரஞ் சிந்தை செய்தங்
குகந்தநான் பிரமமென் றெண்ணி யெண்ணே. (331)

## சமாதி விவரம்

எண்ணியதோர் தியானமது பத்துஞ் சொன்னேன்
எளிதாகச் சமாதியைந்து முன்னே சொன்னேன்
அண்ணியதோ ரட்டாங்க மடக்கிச் சொன்னேன்
அடைவெல்லாந் தானறிந்தால் ஞானி யாவான்
ஒண்ணியதோர் சமாதிக்குள் யுத்தி சொன்னேன்
உறைப்பான மாயையின்ற னுறுதி சொன்னேன்
உண்ணியதோ ருளைந்துமுன்னே பார்த்துத் தேறி
ஊன்றியே வாசியென்ற திறத்தைப் பாரே. (332)

திறமாக விப்படியே பிராணா யாமஞ்
செய்தவர்க்கு ரோமமெல்லாம் வேர்வை யோடும்
அறமாக வாண்டொன்று வாசி தன்னை
அநுதினமு மப்பியாசம் பண்ணி னக்கால்
தறமான தாதுவெல்லாஞ் சித்தி யாகும்
தசையிலுள்ள தோடமெல்லாஞ் சாடிப் போகும்
திறமான நெய்போலகக்கும் பாரு
நெடிதாகச் சட்டையொன்று திரண்டு போமே. (333)

போகுமே சடத்திலுள்ள நோய்க ளெல்லாம்
பொருமியே நீருக வெந்து போகும்
தேகுமே தேகமது சிவப்பு மாகுஞ்
செவ்வலரிப் பூப்போலாங் கண்ணி ரண்டும்
வாகுமே சடம்விந்து மிறுகுந் தேகம்
மகத்தான சக்கரங்க ளாறுங் காணும்
ஓகுமே கர்த்தாக்க ளைவருந் தான்வந்து
உற்றவர்கள் கேட்பவெல்லா முதவு வாரே. (334)

உதவுவார் நிருவாணி யேவல் கேட்பாள்
உண்மையா யோகசித்தி வாத சித்தி
விதவுவார் வினைகளெல்லாங் கழன்று போகும்
விரைந்ததோர் சுழிமுனையும் வெளியாய் காணும்
புதவுவார் சடமதுவும் வெண்டு போலாம்
பொற்புமை போலவுந்தா னிருக்க லாகும்
திதவுவார் சடந்தானுஞ் சொன்னபடி கேட்குஞ்
சித்தியாய்க் கூடுவிட்டுப் பாய லாமே. (335)

பாயவே யுமிழ்நீர்தான் பான மாகும்
பார்க்கவொட்டா லகிரியது கண்ணில் மீறும்
தேயவே தேவரெல்லாம் வணங்கி நிற்பார்
செடம்போச்சு கயிலாய தேக மாச்சு
ஆயவே யட்டமா சித்தி யாகு
மதுகடந்த நிர்க்குணமு மடுக்கக் காட்டும்
வாயவே கோபத்தால் வார்த்தை சொல்லின்
மண்ணோடு கல்முதலாய் நீருய்ப் போமே. (336)

அங்கினி மண்டலம்

நீருன வக்கினியின் மண்ட லந்தான்
நேர்ந்தசுவா திட்டானத் தின்கீ ழாக
வாருன மூலமா முக்கோ ணத்தின்
மருவியதோர் நாலிதழ்மே லமர்ந்து நிற்கும்
தேருன வன்னமது சிவப்பு மாகுந்
தெளிந்துகொண்டு வாசியினு லுன்னி யாடும்
மூருன மும்மலமுங் களிம்பும் நீங்கும்
மூளாத்தீ யக்கினிமண் டலமு மாமே. (337)

ஆநித்த மண்டலம்

ஆமென்ற திருமால்தன் வீட்டின் மேலே
அதீதமா முருத்திரன்றன் பதிக்குக் கீழே
பாமென்ற பன்னிருவர் காவ லாகப்
பரிவாகப் பிராணனைத்தான் காத்து நிற்பார்
பாமென்ற பளிங்குநிறம் போன்றிருக்கும்
பரிவாக வாசிவைத்தங் கூதிப் பாரு
தேமென்ற சீவகளை தேசு போலாஞ்
சிறந்தவா தித்தமண் டலமுந் தானே. (338)



சந்திர மண்டலம்

மண்டலமாய் விசுத்தியதின் மேலே தானு
மனோன்மணித்தாய் கொலுவுக்குக் கீழே பாரு
குண்டலமாய்ச் சந்திரமண் டலமுந் தானுங்
குறிப்பாக வமர்ந்திருக்குங் கூடிப் பாரு
அண்டலமா யமிர்தகலை யருவி யாகும்
அதிற்சொக்கி யமிர்தத்தை யுண்ண லாகும்
பண்டலமாய்ப் பதினறு கலையுந் தானும்
பரிவிசுத்தி தனைச்சுற்றிப் பரவுந் தானே. (339)

பாவியே காலாங்கி நாதர் சொன்ன
பக்குவத்தா லடியேனும் பார்த்துத் தேறிப்
புரவியே பொதிகைக்கு வாயு மூலை
பெருத்ததோர் சுணங்கவிருக் கத்தின் கீழே
அரவியே யறுபத்து மூன்று பேர்க்கங்
சுட்டாங்க யோகத்தைப் போதித் தேன்யான்
பரவியே யறுபத்து மூன்று பேர்க்கும்
பலித்ததே யட்டாங்க சித்தி தானே. (340)

சித்தியா யறுபத்து மூன்று பேருந்
தேசமெங்குந் திரிந்திட்டு விண்ணி லேறி
அத்தியா யடுக்காறு தலமும் புக்கி
அதிசயங் களெல்லாந்தா மனைத்து பார்த்து
நத்தியாய் நடனத்தின் புதுமை கண்டு
நாதாந்த தசநாத நாட்டம் பார்த்துப்
புத்தியாய்ப் பூமிக்குள் மேருவலம் வந்து
போந்தாரே பிள்ளைகள்தான் புகழ்ந்தேன் காணே. (341)

காணவே பிள்ளைகள்தான் வணக்கஞ் செய்தார்
கையமர்த்திச் சமாதிக்குள் செல்லு மென்றேன்
ஊணவே காலாங்கி நாதர் பாதம்
உகந்துமேநெஞ் சில்வைத்து மூல நாதர்
தோணவே பாதமென்றன் சிரசில் வைத்துச்
சிவயோக மார்க்கத்தில் தெளிய வென்று
வேணவே சுணங்கவிருக் கத்தின் கீழே
வேட்டிதனை விரித்துமே விரைந்தேன் பாரே. (342)

## சிங்கத்துக்குப் போகர் உபதேசஞ் செய்தல்

விரைந்துமே நூருண்டு சிவயோ கத்தில்
வெளியொளிப்பாழ் தனில்மனம் விரவிப் போச்சு
திரைந்துமே யாண்பெண்ணுஞ் சிங்கம் ரெண்டுஞ்
சிலையென்று நமையெண்ணிச் சிறக்கு நாளில்
புரைந்துமே வெகுநாளாய்ப் பிள்ளைகளைப் பெற்றுப்
பெருக்கங்க ளாகியே சிங்கக் கூட்டம்
நரைந்துமே நமைச்சுற்றி யிருந்து கொணடு
நாட்டமா யிரைகொண்டு புசிக்கும் பாரே. (343)

டார்க்கவே வெகுநாளா யிருக்கும் போது
பரிவாக வதிலொருநாள் நமக்குத் தானும்
ஆர்க்கவே யானந்தக் கண்ணீர் தானு
மருவிபோல் திவலைசிந்த மடியின் மேலே
தீர்க்கவே சிங்கமது படுத்தி ருக்கத்
திவலைதான் சிங்கத்தின் வாயில் வீழ
ஆர்க்கவே யெழுந்திருந்து விழித்துப் பார்த்தங்
கானந்த வாரியினுல் ஞான மாச்சே. (344)

ஞானமாய்ப் பந்துசனந் தமைய மைத்து
நாதாந்த சிவயோகி தன்னை நாமும்
கானமாய்க் கல்லென்றே யருகி ருந்தோங்
கடுஞ்சாபம் நமக்குவரப் போகு தென்று
தூனமா யவ்விடத்தைச் சுத்தி பண்ணிச்
சுற்றிலுந்தான் பிள்ளைகளைக் காவல் வைத்துத்
தானமாய்த் தங்களுக் கிடந்தான் வேறே
சவுதரித்துச் சதாநித்தம் போற்றி செய்தே. (345)

போற்றியே யர்ச்சித்தஞ் சலிதான் பண்ணிப்
பேரான சீவசெந்தைப் புசித்தி டாமல்
தேற்றியே புல்சருகு களைப்பு சித்துச்
சிவசிந்தை மறவாமற் காத்தி ருக்கும்
ஆற்றியே யிப்படிதா னனேக காலம்
அர்ச்சித்துக் காத்திருக்கும் நாளில் தானும்
வேற்றியே வெளியொளிப் பாழ் தன்னை விட்டு
வெளியிலே மனந்தன்னை விரைந்திட் டேனே. (346)



விரைந்திட்டுக் கண்விழித்துப் பார்க்கும் போது
மிருகமென்ற சிங்கமெலா நடுந டுங்கி
அரைந்திட்ட வடிவ்வணங்கி நிற்கும் போதில்
ஆர்நீங்க ளென்றுசொல்லி யான்தான் கேட்கத்
திரைந்திட்ட மிருகமென்ற சிங்கம் நாங்கள்
செயலறியாப் புத்தியினுற் சிலையென் றண்ணி
முரைந்திட்ட மூர்த்தியின் பாதத்தி னின்றே
மூதிர்ந்த கண்ணீர்த் திவிலையினு லறிவுண் டாச்சே. (347)

அறிவுண்டாய்ப் பயந்துமே நடுந டுங்கி
அடியேங்கள் கடைத்தேறும் பொருட்டுக் காகத்
தெரிவுண்டாய்த் தேவர்பதங் காத்தி ருந்தோஞ்
செயலிலது தேவரீர்க டாட்சத் தாலே
நெறியுண்டாய் நான்தானு முபதே சிக்க
நித்தியமா முத்தியெமக் கருளு மென்ன
நறிவுண்டாய் நான்தானு முபதே சிக்க
நாடாளு மிராஜாவாய்ப் பிறந்திட் டாரே. (348)

பிறந்திட்டி ராச்சியங்கள் மிகவே யாண்டு
பேருன சுகாதிகளை யனுபவித்து
மறந்திட்டு மாமாயை பெண்ணி னுசை
மயக்கறுத்து மனந்தன்னை வழிபா டாக்கித்
திறந்திட்டுத் தேகஞ்ச தமல்ல வென்று
திரும்பிவந்தி ராஜாவாய்க் குருவே யையா
கறந்திட்ட பால்போலே யோக ஞானக்
கருத்தையெமக் களியென்றுர் கடாட்சித் தேனே. (349)

என்றுன கடாட்சத்தால் யோகம் பார்த்தங்
கேற்றமா மிராசயோகத் தினின்று
கன்றுன கைநெல்லிக் கனியைப் போலக்
கருதியே யோகத்தின் கருத்த றிந்து
சென்றுன கற்பங்கள் வெகுநாள் தின்று
செடமிறுகக் கற்பாந்த காலந் தானும்
குன்றுன வாதமெல்லாங் கூர்ந்து பார்த்துக்
குளிகைகட்டிக்க கனவழி கொண்டிட் டாரே. (350)

## அருஞ்சொற்பொருள்

பா. எண் 301 முதல் 350 வரை

பா. எண் : 301—காழை = அச்சம், ஐயம்.

பா. எண் : 302 மருவாமல் = சேராமல்.

பா. எண் : 303—நிரந்தரம் = நிலைபெயராது ; வந்தும் = நேரிட்டாலும்; இருபது = இயமத்தில் கூறியவை பத்தும் நியமத்தில் கூறயவை பத்துமாக மொத்தம் இருபதென்க.

பா. எண் : 304—சுவரடிப்படை = (அத்திவாரம்) கடைக்கால்; சூழிகை = மேல்விதானம்; அனுட்டித்தால் = கைக் கொண்டு வினையாற்றினுல்.

பா. எண் : 305 –நெறி = மார்க்கம் (வழி); மாத்திரை = அளவு.

பா. எண் : 306—குவிந்தபின்பு = ஒன்றியபின்.

பா. எண் : 307—சங்கியாமல் = ஐயுருமல்.

பா. எண் : 308—குளச்சு = மூட்டு.

பா. எண் : 309—கரடு = கால் ; குதி = குதிகால்.

பா. எண் : 310—மயூரம் = மயில்.

பா. எண் : 311—தம்பித்து = மூச்சை அடக்கி; ஊடல் = ஊடுருவி நிற்றல்

பா. எண் : 312—மாத்திரை = அளவு; நலத்தபின்பு = நன்றுன பின்பு; பிரமதலம் = சுவாதிட்டானம்.

பா. எண் : 313—விண்டுவில் = மணிபூரகம்; உருத்திரன் = அநாகதம்; மகேசுவரம் = விசுத்தி; சதாசிவம் = ஆக்கினை; பிரமகத்தி = பிராமணரைக் கொலை செய்தபாபம்; த்ரீயாமத்தி = பெண்ணைக் கொலை செய்தபாவம்.

பா. எண் : 314—காங்கிப்போம் = வெம்மைகொண்டிடும்; கம்ப முறும் = நடுக்கம் காணும்; கபாலம் = மண்டைமே லோடு; மும்மலம் = ஆணவம் கன்மம் மாயை; களிப்பு = மலினம்; மரத்துநின்ற = மரம்போலச் செயலற்று நின்றதான; தசநாதம் = பத்துவித ஒலி.



பா. எண் : 315—பருவம் = பாகுபாடு; தீபனம் = மிகுந்த பசி.

பா. எண் : 316—ஆகாச கமனம் = விண்ணில் உலாவல்; தூர திருட்டி = வெகு தொலைவிலுள்ளதையும் காணும் ஆற்றல்; காமப்பால் = அமுததாரை.

பா. எண் : 317—மறிக்கிறதே = தடைசெய்தல்; வெட்டி = நிறுத்தி.

பா. எண் : 318 – கடந்துபோம் = நீங்கிச்சென்ற; சோத்திரம் = செவி.

பா. எண் : 320—தானம் = இடம்.

பா. எண் : 321—வேதாந்தவிசாரம் = மறை முடிவின் ஆய்வு.

பா. எண் : 322—ஆபரணம் = அணிகள்.

பா. எண் : 323—முத்தன் = மோட்சநிலையை அடைந்தவன்.

பா. எண் : 324—கிரமம் = முறை.

பா. எண் : 326—தடி = தண்டாயுதம்; பதுமம் = தாமரை; துளவமாலை = துளசிமாலை

பா. எண் : 327—வாமம் = இடப்பாகம்; உபாசிப்பார் = தியானம் செய்வார்.

பா. எண் : 332—உலைந்து = வருமதி.

பா. எண் : 335—வெண்டு = வச்சிரம்.

பா. எண் : 336—உமிழ்நீர் = சிதாகாசமதிபொழியும் அமுததாரை; கோபத்தால் வார்த்தை சொல்லின் = சினந்து சாப மிட்டால்.

பா. எண் : 339—குண்டலமாய் = வட்டவடிவாய்; பரவும் = பரிவி யாக்கும்.

பா. எண் : 340—சுணங்கவிருக்கம் = நாய்மரம்; வாயுமூலை = வடமேற்கு.

பா. எண் : 343—சிலை = கல்.

பா. எண் : 344 = திவலை = துளி.

பா. எண் : 345—பந்துசனம் = உறவினர்; சவுதரித்து = ஏற்படுத்திக்கொண்டு.

கொண்டிட்டே யறுவரையும் சோதித் தேறிக்
கூர்ந்துமே திரும்பிவந் தடியேன் பக்கல்
அண்டிட்ட வட்டாங்க மீனந்து பார்த்தங்
கதிட்டான சைதந்யத் தடைந்தி ருந்தார்
விண்டிட்ட வறுபத்து நால்வர் சீடர்
மேதினியி லெங்கெங்குஞ் சஞ்ச ரித்தே
அண்டிட்ட சமாதிக்குள் ளடைந்தி ருந்தார்
அறியாட்டால் யோகத்தை யவத்த மாமே. (351)

அடயோகம்

அவத்தமாம் யோகத்தைச் செய்தா னுகில்
அறியாமல் பூரிக்கி லொதுங்கிற் றுனல்
விவத்தமாய் விலாப்புறத்தே சொருகிக் கொள்ளும்
விழிப்பான கண்போகு முகங்கோ ணிப்போ
முவத்தமா முடம்பெரிவு விக்க லாகு
முடம்பெல்லாம் வேர்வையாய் வலியே காணும்
கவத்தமா மடயோகங் கன்ம யோகங்
கடிசான லயயோகக் கருமங் கேளே. (352)

பரியங்க யோகம்

கருமமாய்ப் பூதமெல்லாம் லயமே செய்து
காரணமாந் தத்துவத்தை லயமே செய்து
நருமமாய்க் குருபதத்தி னுடி நின்று
நயந்துமே யேறுவார் கடினம் மெத்த
பருமமாய்ப் பரியங்க யோகத் தாலே
பரிந்துமலம் விடுவார்கள் கர்மங் கர்மம்
நிருமமாய் மிக்கான ராச யோக
நிலைத்தல்லோ சாதித்து நினைவாய்ப் பாரே. (353)

மந்திர யோகம்

நினைவாக விதன்மேலே மந்திர யோகம்
நேரான தசதீட்சை முறையோ டொக்க
அனைவாக வகண்டவெளிச் சக்க ரத்தே
ஆடிநின்ற பிராணுய மறிந்து தேறி
மனைவாக நிர்க்குணத்தில் மவுனத் தூடில்
மருவிவிட்டால் பூரணத்தி னேடு
வினைவாகத் தசதீட்சை யாவர் சொல்வார்
விரைந்துணர்ந்து பெரியோரை யடுத்தி டாயே. (354)



பெரியோரை யடுத்திட்டுத் தொண்டு பண்ணிப்
போற்றியே யநுசரித்துக் கேட்டால் சொல்வார்
மரியோரைக் கேட்டவுடன் சொலவிலை யென்று
மனக்குரங்கால் கெட்டவர்கள் கோடா கோடி
துரியோரை யலையாதே மோட்சம் வேண்டில்
துரிசுவிட்டுக் காத்திருந்து குருபதத்திற் கேளு
குரியோரைக் கொடுத்திட்டால் தீட்சை யாவர்
கூட்டான பூரணத்தில் கடுக நீயே. (355)

கடுகவே யேறையிலே தீட்சைவிதிச் குருவைக்
கருத்துன்னி யங்கங்கே கலந்து காணு
மடுகவே பிராணுய மங்கங்கே வைத்து
வாகாக விருக்கையிலே யொளியோ மீறும்
திடுகவே யொளியோடே சென்றே யேறச்
சிறப்பான தசநாதஞ் செவியிற் கேட்கும்
அடுகவே பராபரத்தா யமுத மீவா ளாள்
அகண்டபரி பூரணந்தான் பேசும் பாரே. (356)

பார்க்கவே பூரணந்தா னெளிதோ மைந்தா
பரிவான தசதீட்சைக் குருவைக் காரு
ஆர்க்கவே யவர்மனது வந்த தானுல்
ஆண்டிலே சித்தியெல்லா மடைந்து கூடும்
நேர்க்கவே யிதைவிட்டு வாமத்திற் சென்று
நினைவுகெடப் பானமுண்டு நிலைத்தங் குன்னூர்
தார்க்கவே கூசாதே குருவைத் தேடித்
தாரையா யுடல்பொருளு மாவி யீயே. (357)

ஆவியவர் கைக்கொண்டா லகண்டங் கொள்ளும்
அடுக்கான வானவத்தின் பிறவிப் போச்சு
பாவியென்ற பேரெல்லாம் படுதீ யாச்சு
பராபரத்தி லுன்னறிவு பாய்ந்து போச்சு
காவியென்ற சீலையென்ன வேட மென்ன
கருவுன்னிச் சமுசாரத் துள்ளே நிற்பார்
கோவியென்ற கோபம்வந்து சபித்தா ராணுல்
கோடையிடி விழுந்ததுபோற் கொல்லுந் தானே. (358)

தானுன பிராணுயம் பண்ணும் போது
    தயங்கியே பிராணத்து லபானன் தங்கில்
ஊனுன வுதரத்தி லுந்தியிலே நோவாம்
    உவப்பான மருந்து கொண்டா லுயரும் நோய்தான்
ஆனுன விலட்சியத்தை யதிலே வைத்தங்
    கசைவற்று மூச்சையுள்ளே வாங்கி நின்ருல்
பானுன வபானனங்கே பிரிந்து போகும்
    பண்பான கற்பத்தைப் பாங்கா யுண்ணே. (359)

உண்ணவே யிவ்வளவும் யோக மார்க்கம்
    உறுதியாய்ப் பார்த்தபடி யுண்மை சொன்னேன்
கண்ணவே காலாங்கி யையர் சொல்லக்
    கடாட்சித்த பாட்டரென்ற மூல நாதர்
திண்ணவே யவர்பதத்தைச் சிரசில் வைத்துச்
    சிறந்த மனேன் மணித்தாயார் சொல்லக் கேட்டு
விண்ணவே பதஞ்சலியார் வியாக்ர பாதர்
    வினயமுள்ளா னென்றுசொல்லிப் போதித் தாரே. (360)

போதித்தார் பெரியோர்கள் ரிசிகள் சித்தர்
    புத்தியுள்ளா னென்றுசொல்லி யடியே னுக்கு
வாதித்த ரிசிசித்தர் சொன்ன புத்தி
    மனம்வைத்து வாசியின்றன் வண்மை பார்த்தே
ஏதித்தே ழாயிரத்திற் சுருக்க மாக
    வெடுத்துரைத்தே னெல்லோரு மெனைப்போ லாகச்
சோதித்த யோகத்தின் மார்க்கந் தன்னைச்
    சொல்லிவிட்டேன் முந்நூற்றுச் சொச்சந் தானே. (361)

### காயசித்தி மார்க்கம்

தானுன காயசித் சொல்லக் கேளு
    சனகாதி நால்வரது பதத்தைப் போற்றிப்
பானுன பாட்டர்திரு மூல நாதர்
    பதமென்றன் சிரம்வைத்துப் பரிந்து போற்றிக்
கானுன காலாங்கி யையர்பதம் போற்றிக்
    கற்பத்தின் வகையெல்லாங் கருதித் தின்று
தேனுன சித்திபெற்ற படியே சொன்னேன்
    சிதைவில்லாக் கற்பமுண்டு யோகம் பாரே. (362)



### ஆகாத பண்டங்கள்

யோகமாம் புளியுப்போ டெண்ணய் சுண்ண
    முரிசையாம் மாமிசங்கள் மச்ச காமா
மோகமாம் மோரோடு கடுகு உள்ளி
    முதிரான காரமொடு பெருங்கா யந்தான்
போகமாம் பெண்களது புணர்ச்சி யோடு
    பேரான நித்திரையுஞ் சோம்பல் தள்ளி
வாகமாம் வாசிதன்னை மறித்துக் கொண்டு
    மறவாம லிரவுபகல் மனத்தி லுன்னே. (363)

### ஆகும் பண்டங்கள்

உன்னியே பாலோடு நெய்யைக் கூட்டி
    யொருசேரச் சமைத்துண்பா யொரு போதப்பா
பன்னியே யிராமாறு பாலைக் கொள்ளு
    பணியாரஞ் சிறுபயறு பழமுந் தேனுங்
குன்னியே கோரக்கர் கற்ப மாகுங்
    கொடிதான வஸ்துவொடு குக்கு டந்தான்
வென்னியே வெள்ளாடு மரை மானுகு
    மிக்கதோர் கவுதாரி யாமே. (364)

ஆமென்ற வாசனையா லுப்புத் தேடி
    அழுத்தமாய்க் கட்டியதோ ருப்பைக் கூட்டு
போமென்ற புளிமேலே யாசை யானுல்
    புளியாரை புளியரணை சீய்க்காய்க் கொழுந்து
நேமென்ற நெல்லிக்காய் பசறைக் கீரை
    நித்தியமாய்க் கூட்டியே கற்ப முண்ணு
ஆமென்ற பயறேடிள நீர்க ரும்பு
    மாகாது குளிர்ந்ததண்ணீர் தானுங் காணே. (365)

### தாம்பூலந்தின்ன, தலைமுழுக

காணவே தாம்பூலந் தின்ப தற்குக்
    கற்பூரச் சிலைச்சுண்ண முத்துச் சுண்ணம்
பாணவே பவளத்தின் சுண்ணத் தோடு
    பறிச்சுண்ண முத்துச் சுண்ண மாகும்
தாணவே தலைமுழுகப் பசுவின் ணெய்தான்
    தடவியே பசும்பயற்றை யரைப்பாய்ப் பண்ணு
ஊணவே பட்சத்துக் கொருக்கால் தானு
    முத்தமனே முழுகுவதற் குண்மை கேளே. (366)

### தலைமுழுக பஞ்சகற்பம்

உண்மையாய் மிளகோடு மஞ்சள் நெல்லி
உத்தமமாங் கடுக்காயும் வேம்பின் முத்தும்
தண்மையாய்ச் சமனுக நிறுத்துக் கொண்டு
தனித்துநின்ற ஆவின்பால் விட்டே யாட்டித்
திண்மையாய்த் தலைகளிலே தேய்த்து வைத்துச்
சிறக்கவே யொருசாமங் கழிந்த பின்பு
வெண்மையாய் வெந்நீரில் முழுகிப் போடு
விரைந்ததோர் பட்சத்துக் கொருக்கால் தானே. (367)

### வழலை வாங்க

தானுன காலையிலே வழலை வாங்கச்
சாதகமாய்க் கரிசாலைச் சாற்றி னுடே
ஆனுன வாவின்னெய் சமன்க லந்தே
யங்குட்ட விரல்தனிலே தோய்த்துக் கொண்டே
ஊனுன வுண்ணுக்கின் மேலே சுற்ற
வோங்கியதோர் சிரசினின்று கபந்தான் வீழும்
கானென்ற சங்கிலிபோல் கபந்தான் வீழ்ந்தால்
காயசித்தி யோகசித்தி கடிசி லாமே. (368)

### மலங் கழல

கடிசான குஞ்சனத்தில் கருவைக் கேளு
கையான தர்ச்சனியாம் விரல்தன் னுள்ளே
எடிசான வேரண்டத் தெண்ணெய் தோய்த்தே
இடசாரி வலசாரி திருப்பு நூறு
படிசான பழமலங்கள் கழன்று போகும்
பறவைபோல் காலையுன்னிப் பண்பாய் வாங்கு
நெடிசான வாமமெல்லாங் கழன்று போகில்
நிசயோக சித்தியோடு காய சித்தே. (369)

### கண்ணுக்கு மை அஞ்சனம்

சித்தாகக் கண்ணுக்கு எஞ்சனத்தைக் கேளு
செங்கடுக்காய் சுட்டகரி வராக னென்று
துத்தாகத் துரிசுதன்னைச் சீலைக்குள் வைத்துச்
சிதருமல் சுட்டபின்பு தூளை வாங்கி
வத்தாக வராகனெடை நிறுத்துக்கொண்டு
மடையன்தான் வராகனெடை யஞ்சனமப் படியே
குத்தாக வெண்ணெயது பலமும் போட்டுக்
கொட்டியே கிண்ணியிலே காவிச் செம்பே (370)



செம்பாலே யரைத்திட்டு வெண்ணெய் போட்டுத்
திரமாங்கோ ரோசனைதான் வராகனெடையிட்டு
நம்பாலே நால்சாம மரைத்து மைபோல்
நன்மாட்டுக் கொம்பென்ற சிமினில் வாங்கி
அம்பாலேயந்திசந்தி யெள்ளுப் போல
வழகாகக் கண்ணிலிட வொளியோ மீறும்
உம்பாலே யுட்பார்வை யொளிர்வுகாணு
மோராண்டு மிப்படிதா னுகந்து போடே. (371)

### நாசித்தூள் (மூக்குறிஞ்சல்)

போடவே மூக்குக்குப் பொடியைக் கேளு
பெரிசான வறட்சுண்டி வேரை வாங்கி
நீடவே நிழலுலர்த்திப் பொடியாய்ப் பண்ணி
நெரிசாய சீலைவடி கட்டிக் கொண்டு
தேடவே குடுக்கைதனி லடைத்து வைத்துச்
சிறிதாக நுனிவிரலில் பிடித்துக் கொண்டு
வாடவே வாசியோ டேற்றி வாங்கி
மவுனமாஞ் சிகரத்தால் ரேசிப் பாயே. (372)

ரேசித்தால் நிராகாரத் தடைப்பு நீங்கி
நின்மலமா மதீதத்தி னெளியோ மீறுந்
தூசித்தால் சுழிமுனைதா னெட்டிட் டேறுந்
தூசான வழுக்கெல்லாஞ் சிந்தி வீழுங்
காசித்த கபாலமது கெட்டி யாகுங்
கண்ணொளிதான் கேசரத்தில் நின்று பார்க்கில்
ஆசித்த வடுக்காறு முருவிக் காணும்
சுந்தரத்தி னெளியெல்லா மருகு மாமே. (373)

### கடுக்காய்க் கற்பங் கொள்ளும் பருவம்

ஆமென்ற வயதங்கே யிருப தாகி
ஆச்சரியங் கடுக்காயை யிருபா னுள்கொள்
மூமென்ற வயதங்கே முப்ப தாகில்
முயற்சியா யிருபதோ டைந்து நாள்கொள்
நாமென்ற வயதங்கே நாற்ப தாகி
நலமாக முப்பதுநாள் கடுக்கா யைக்கொள்
தேமென்ற வயதங்கே யைம்ப தானுல்
திறமாக முப்பதோ டைந்து நாளே. (374)

நாளான வயதங்கே யறுப தாகி
நாற்பதுநாள் கடுக்காயை யுண்டு வாநீ
ஏளான வயதங்கே யெழுப தாகி
ஏற்றமா நாற்பதோ டைந்து நாள்கொள்
தாளான வயதங்கே யெண்ப தானுற்
சதுராக வைப்பது நாள் கடுக்கா யைக்கொள்
தேளான வெண்பதின்மேற் சித்தி யில்லை
திறமதறிந் திப்படியே கற்பங் கொள்ளே. (375)

## கடுக்காய்களின் வகைகளும் தோற்றமும்

கொள்ளவே கடுக்காயுற் பத்தி கேளு
கூறுத விசயனரோ கணியு மாகும்
புள்ளவே பிரிதிவியு மமிர்தை சீவந்தி
பேரான திரிவிருதை யபயன் தானும்
அள்ளவே யமிர்தந்தான் கடைந்த பின்ன
ராழியான மரர்களுக் கமுத மீந்தே
உள்ளவே கையதனை யுதறும் போதி
லுற்றதுனி மண்ணீல்விழ மரமு மாச்சே. (376)

## விஜயன் கடுக்காய்க் கற்பம்

மரமாகி யேழுவகைப் பேத மாச்சு
மகத்தான விசயனென்னுங் கடுக்காயைச் சூர ணித்தே
அரமாகி வெருமடிதா ளமுரி தன்னில்
அளாவியே கெண்டக்கால் வாதம் போக்கும்
பிரமாகிப் பேய்ச்சுரைக்காய் போன்றி ருக்கும்
பெரிதான வாதர்க்காஞ் சித்தியாகும்
நரமாகி நாற்பதுநாள் கொண்டிட் டக்கா
நாசமாம் வாதமது நலங்கிப் போமே. (377)

## அரோகணி கடுக்காய்க் கற்பம்

போமென்ற வரோகணியின் பிரிவு கேளு
பெரிதாகு மொன்றினுற் கீற்று மாகும்
காமென்ற கய்துவராங் கணக்கைப் பார்த்துக்
கலந்திழத்துச் சூரணமாச் செய்து கொண்டே
ஆமென்ற வமுரிதனிற் குழப்பிக் கொள்ள
அதிகமாஞ் சீதமறுங் கிருமி நாசம்
வாமென்ற மண்டலந்தான் கொண்டாகேளு
வன்னியே மிகத்துலங்கி மருவும் பாரே. (378)



## பிரிதிவி கடுக்காய்க் கற்பம்

மருவவே பிரிதிவியின் குணத்தைக் கேளு
மருவுகின்ற மேல்தோல்தான் சிறுத்துக் காணும்
தருவவே சதைதானும் பருத்தி ருக்குந்
தனித்திட்ட கடுக்காயைச் சூர ணித்தங்
கருவவே யமிரியிலே கலக்கிக் கொள்ள
வாமமெல்லங் கழன்று கிருமி வீழும்
நருவவே நாற்பதுநாள் கொண்டா யானுல்
நாடிசுத்தி தேகசுத்தி யாகு நாடே. (379)

## அமிர்தை கடுக்காய்க் கற்பம்

நாடவே யமிர்தையென்னுங் கடுக்காய் தானு
நற்சதைப்பற் றுடைதா நிறமு மஞ்சள்
வாடவே சகலநோய் தனைய கற்று
மருவியிதையிடித்து நன்ருய்ச் சூரணமே செய்தங்
காடவே யமுரியினில் கலக்கிக் கொள்ள
வடைவாக மண்டலந் தானுண்டா யானுல்
தாடவே தசையிலுள்ள ரோக மெல்லாஞ்
சாடுமே சுயம்பாட வாக்கு மாமே. (380)

## சிவந்தி கடுக்காய்க் கற்பம்

வாக்கான சிவந்திகடுக் காய்க்குத் தானு
மகத்தான வேமத்தின் வன்ன மாகும்
ஏக்கான விதையிடித்துச் சூரணமே செய்தங்
கேற்றமா மமுரிதன்னை முன்பின் தள்ளி
வாக்கான மண்டலந்தான் கொண்டு வந்தால்
மகத்தான மூலமது வெளியாய்த் தோன்றும்
நீக்கான வியாதியெல்லா நீருய்ப் போகும்
நிலவரமாய்ச் சடந்தானு நிற்கும் காணே. (381)

## திரிவிருதை கடுக்காய்க் கற்பம்

நிற்குமே திரிவிருதை யெனுங் கடுக்காய்
நிறந்தானும் பஞ்சவன்ன மாயி ருக்கும்
தக்குமே யிடித்துநன்ருய்ச் சூர ணித்துத்
தாக்கான சீலைவடி கொண்டு தானும்
நக்குமே யமுரிதன்னில் மண்ட லந்தா
நலமாக வெறுகடிதூள் கொண்டு வாநீ
சக்குமே சடந்தான்கற் பாந்த காலந்
சனித்துநின்ற வாதபித்த சேத்துமம் போமே. (382)

## அபயன் கடுக்காய்க் கற்பம்

போமென்ற வபயனுங் கடுக்காய் தானும்
    புகழான கருப்புவன்ன மாயி ருக்கும்
ஆமென்ற விதையிடித்த ரித்துக் கொண்டே
    அமுரிதனில் மண்டலந்தா னுண்டா யானல்
வேமென்ற மும்மலமாங் களிம்பு போகும்
    விரைந்து நின்ற நாடியெல்லா முறுக்க தேறும்
ஏமென்ற வெண்பதுக்குள் கொள்ள லாகு
    மேற்றமாம பயனென்ற கடுக்காய் தானே. (383)

தானென்ற கருங்கடுக்காய் கையி ருக்கில்
    சகலபூதப் பிரேதங்கள் சங்கை செய்யும்
ஆனென்ற வனேகநாள் சடமி ருத்தி
    ஆயுள்தான் மிகவுண்டா யழுந்துந் தேகம்
தேனென்ற சிவன்தானு நிருத்தஞ் செய்வார்
    சித்தியாய் சாஸ்வதந்தான் சிறக்குந் தேகம்
பானென்ற சீலனுய்ப் புத்தி யுண்டாம்
    பகர்ந்ததோர் கடுக்காயி லபய னன்றே. (384)

## கடுக்காய்கள் ஏழுவகையும் விளையுமிடமும்

நன்ருன விசயனென்ற கடுக்காய் தானு
    நலமான விந்தியதே சத்துற் பத்தி
கன்ருன வரோகணி யெனுங்க டுக்காய்
    கன்னியாகு மரியிலுற் பத்தி யாகும்
பொன்ருன பிரிதிவிதான் சவுராட்டிர தேசம்
    பேரான வமிரதைதான் காசி யாகும்
தின்ருன சிவந்திதிரி விருதை ரெண்டுஞ்
    செயலான மச்சியதே சந்தா னென்றே. (385)

என்ருன வபயனென்ற கடுக்காய் தானு
    மெழிலான தேசத்தி லபூர்வ மாகும்
கன்ருன கருங்கடுக்காய் தெரிசித் தக்கால்
    காகிதனைத் தெரிசித்த பலத்துக் கொக்கும்
பன்ருன பரிசிக்கில் சிவசிந்தை யாகும்
    பண்பாக வாக்கிராணம் பண்ணி னக்கால்
தன்ருன சடத்திலுள்ள நோய்கள் போகுந்
    தாயான மனோன்மணியுந் தயைசெய் வாளே. (386)



## கடுக்காய்க்கற்பம் உண்ணுங்காலம்

தயையான கருங்கடுக்காய் கிடையா விட்டால்
    சமரசமாம் பொற்கடுக்காய் தூளாப் பண்ணி
அயையான வானிமுத லாடி தானும்
    அரிதான வெல்லத்தி னோடே கொள்ளு
புயையான வாவணியுங் கன்னி தானும்
    பெரிதான விந்துப்புக் கால்வாசி கூட்டிக்
குயையான வமுரிதன்னில் கலக்கிக் கொள்ளு
    கொடியதோ ராமமெல்லாக் கழன்று போமே. (387)

கழன்றுபோ மைப்பசிக்குங் கார்த்தி கைக்குக்
    கலந்துமே சர்க்கரையி னுடனே கொள்ளு
மழன்றுபோ மார்கழிக்குந் தைக்குத் தானும்
    மாசற்ற சுக்குக்கி யாழத்திற் கொள்ளு
தழன்றுபேமா சிபங்கு னிக்குத் தானுஞ்
    சமரசமா வமுரிதனில் கலக்கிக் கொள்ளு
திழன்றுபோஞ் சித்திரைவை காசிக் குத்தான்
    சிறுகுறிஞ்சித் தேன்தன்னில் திரட்டி யுண்ணே. (388)

## சிவப்புக் கற்ருழைக்கற்பமும் வேதையும்

உண்டுமே கடுக்காயைத் தள்ளிப் பின்னர்
    உகப்பான சிவப்புக்கற் ருழை தன்னை
மண்டுமே மண்டலந்தான் கொண்டா யானல்
    மகத்தான திரிதோடஞ் சாடிப் போகும்
விண்டுமே இரும்புதான் பொன்னே யாகும்
    விதமான உடலதுவும் தங்கம் போலாம்
கண்டுமே சிவப்பாங்கற் ருழை தன்னைக்
    கருதியே தின்ருக்கால் சாவு பொய்யே. (389)

பொய்யாகப் போகாமற் கற்ருழை தன்னைப்
    பொருந்தியே சோறெடுத்துக் கடுக்காய்த் தூளைக்
கையாகக் கலக்கியே தெளிவி றுத்துக்
    கரண்டிக்குள் ரசம்வைத்துச் சுருக்குப் போடு
மெய்யாக ரசங்கட்டி மணியு மாகு
    மிரளாதே காரமிட்டு ருக்கிப் பாரு
துய்யாகச் சுப்பிரமாய்க் கண்விட் டாடுந்
    துணையாக நாலிலொன்று தங்கம் போடே. (390)

போடவே நாகமது பலந்தா னுலு
பொரிகாரம் பலமிரண்டு சார மொன்று
நாடவே நாகத்தை யுருக்கிக் கொண்டு
நற்சிவப்புக் கற்ருழைச் சாற்றில் சாய்ப்பாய்
வாடவே பொரிகாரஞ் சாரம் ரெண்டும்
வளமாகப் பொடிபண்ணி மேலே தூவு
ஈடவே யிப்படிதா னிருப தோடொன்
றெழிலாகச் சாய்த்திடவே கூட்டிப் போடே. (391)

சாய்க்கவே தங்கமது ரவியு மாகுந்
தாதுவென்ற வறுபத்து நாலுங் கட்டும்
வாய்க்கவே யுபரசங்கள் சத்து மாகு
மருவிநின்ற சூதமஃ துருகும் போது
காய்க்கவே சுனகமது கால்தான் போடு
கட்டுகின்ற நாகமுமப் படியே போடு
தேய்க்கவே கெந்தியொடு தாளகமுஞ் சிலையுஞ்
சிறப்பாக வெண்காரப் பொரியுங் காலே: (392)

காலோடு நாலையுங்கற் ருழை நீரிற்
கலந்தரைத் துண்டைபண்ணிக் காய வைத்துச்
சாலோடு சரக்கெல்லா முருகும் போது
தாக்கிடுவா யொவ்வொன்ரு யுண்டை தன்னை
ஓலோடு தயிலத்தை யுண்டு வாங்கி
யுயர்ந்திட்ட களங்காகும் நூற்றுக் கொன்று
வேலோடு வெள்ளியிலே கொடுத்தா யானல்
விரைந்துநின்ற மாற்றதுவு மெட்ட தாமே. (393)

எட்டாத செங்குமரி கிடையா விட்டா
லேற்றமாம் வரிக்குமரி சோறு தானுந்
தட்டாத சதுர்க்கள்ளிக் காய்தா னைந்துந்
தனித்திரண்டு மமுரியிலே குழைத்துக் கொள்ளு
வெட்டாத மண்டலந்தான் விரைந்து கொள்ளு
வியந்துடம்பி னின்றபுளி வீழ்ந்து போகும்
கட்டாக முன்சொன்ன கற்பந் தானுங்
காலமே யுண்டபின்பு கருதிக் கேளே. (394)



## கருவேம்பின் குடிநீர்

கருதியே கருவேம்பு முருங்கை யீர்க்குக்
கற்கண்டு சுக்கோடு நாலுந் தானும்
அருதியே யரைப்பலந்தா னிறுத்துக் கொண்டங்
கரிந்துமே யிரண்டிர்க்கும் வறுத்துப்போடு
நருதியே யிரண்டையுந்தா னறுக்கிக் கொண்டு
நல்லதண்ணீர் தனிற்காய்ச்சி நாலி லொன்ருய்
மருதியே மாலையிலே கொள்ள வேதான்
மயக்கமொடு தியக்கங்கள் மாறிப் போமே. (395)

மாறியே கடுக்காயை யுண்ணும் போது
மறவாமல் வழலைதனைத் தினமும் வாங்கு
காறியே காயசித்தி யெண்பதுக் குணன்று
சைகடந்தா லாகாது கடின மெத்த
ஆறியே கடுக்காய்க்கு மலம்போ காட்டா
ஆகாத வாதபித்த தேக மாகும்
தேறியே சிலர்க்குப்போ காமல் சிக்குந்
திறமாகக் கழியாட்டால் சித்தியிலை தானே. (396)

## சிவதைச் சூரணம் கலப்புந்தூள்

தானன சிவதைதன்னைப் பாலிற் போட்டுத்
தனித்துமே யடுப்பேற்றி யெரித்துக் கொண்டே
ஊனன துலர்த்தியே யிடித்து நைய
வுறுசீலை வடிகொண்டு சூரணமே செய்து
கானன கடுக்காய்த்தூ ளிரண்டு பங்கு
கலர்சிவதைச் சூரணந்தா னோர்பங் காக்கிக்
கூனன வமுரியிலே குழப்பிக் கொள்ளு
கூட்டோடேயாம மெல்லாங் கழன்று போமே. (397)

## மிளகுக் கற்பம்—மூதண்ட குடிநீர்

போமென்ற விதைவிட்டுக் கற்பங் கேளு
புகழாக வையைந்தாய் மிளகை யேற்றி
ஏமென்ற விருபதுநாள் கொண்டு வாநீ
யிறக்கியே யிருபதுநா ளமுரியிலே கொள்ளு
வாமென்ற மாலையிலே யறுகம் வேரு
வண்மையா யொருபலந்தா னிடித்து நைய
வேமென்ற மிளகதுதா னிருபத் தைந்து
மிக்கான தண்ணீரி லெட்டிலொன்ருய்க் காய்ச்சிப்
பாமென்றே யிறக்கையில் பாக்களவு வெண்ணெய்
பாலித்துப் பாங்காகக் கொண்டி டாயே. (398)

### மலம் கழற்றக் கலப்புத்தூள்

கொண்டிடுவாய் மண்டலந்தான் குவிந்த பின்பு
குஞ்சனத்தில் மலத்தையெல்லாங் கழற்று தற்கு
முண்டிடுவாய் முன்சொன்ன ப டியே தீரு
முகிந்தபின்பு மிளகுண்ட பின் பு Cகளு
கண்டிடுவாய் கடுக்காய்தான் பலமு நாலு
கருதியதோர் திப்பிலியுஞ் சுக்கோ டொக்க
ஒண்டிடுவாய் சீரகமு மோம மிந்து
முறுதியாய் நறுக்கென்ற மூலந் தானே. (399)

மூலந்தான் வகைக்கொன்று பலந்தான் கூட்டி
முனிந்திடித்துக் கடுக்காயின் விதையைத் தள்ளித்
தூலந்தான் சீலைவடி கட்டிக் கொண்டு
துப்புரவாய் வெருகடித் தூள் வெந்நீ ரிற்கொள்ளு
ஆலந்தா னபானனது கீழே நோக்கு
மாடையிலு மோடையிலு மூலத் துன் னு
தாலந்தான் சஞ்சார சமாதி யாகுந்
தனித்தபின் னன்னத்தில் பொடியைக் கேளே. (400)

### அருஞ்சொற்பொருள்

**பா. எண்: 351 முதல் 400 வரை**

பா. எண் : 351—அறுவரை = ஆறு ஆதாரங்கள்; அணைந்து = ஆழ்ந்து ஆய்ந்து; அவத்தம் = பொய்.

பா. எண் : 354—மருவிவிட்டாய் = இரண்டறக் கலந்தாய்.

பா. எண் : 355—அனுசரித்து = சமயமறிந்து பணிவிடை செய்து கேட்டு அறிந்து.

பா. எண் : 357—உவந்ததானல் = களிப்படைந்ததானல்.

பா. எண் : 358—கருவுன்னி = மூலப் பொருளை மனத்திற் கொண்டு.

பா. எண் : 359—உதரம் = வயிறு; உந்தி = நாபி; உயரும்நோய் = நோய் மிகும்; மூச்சையுள்ளே வாங்கி நின்ருல் = சுவாசத்தை உள்ளே வாங்கி அடக்கினுல் (கும்பகம் செய்தால்)



பா. எண் : 360—வினயம் = அடக்கம்.

பா. எண் : 361—சொன்னபுத்தி = அறிவுரை கூறியதை.

பா. எண் : 362—பரிந்து = அன்புடன்; கருதித்தின்று = விரும்பி உண்டு; சிதைவு = அழிவு.

பா. எண் : 363—உள்ளி = பூண்டு; முதிரான = மிகுதியான; மனத்திலுன்னு = தி பானம் செய்க.

பா. எண் : 364—கோரக்கர்கற்பமென்ற கொடிதான வஸ்து = கஞ்சா; குக்குடம் = கோழி; மரை = காட்டுப்பசு

பா. எண் : 366—கற்பூரச்சிலை = கற்பூரசிலாசத்து; பறி = தங்கம்; அண்டமம் (கோழி) முட்டை (ஓடு); பட்சம் = பதினைந்துதினம்.

பா. எண் : 368—வழலை = சிரசில் சேர்ந்துள்ள கோழை; அங்குட்டவிரல் = கட்டைவிரல்.

பா. எண் : 369—குஞ்சனம் = குதம்; தர்சனியாமவிரல் = சுட்டு விரல்; ஏரண்டத்தெண்ணெய் = ஆமணக்கு எண் ணெய்.

பா. எண் : 370—அஞ்சனம் = மை; துரிசு = மயில்துத்தம்; அஞ்சனம் = நீலாஞ்சனக்கல்.

பா. எண் : 371—எள்ளுப்போல = எள்ளளவாக.

பா. எண் : 372—குடுக்கை = தேங்காய் ஓடு; வாடவே = உப யோகிப்பதால்.

பா. எண் : 373—உருவி = ஊடுருவி; அந்தரம் = விண்.

பா. எண் : 374—இருபானுள் = இருபதுநாள்கள்.

பா. எண் : சதுராக = ஆற்றலுடன்.

பா. எண் : 376—ஆழியான் = திருமால்.

பா. எண் : 377—வெருகடி = (வெருகு = பூனை; அடி = பாதம்; மூன்று விரல் நுனிகொண்ட அளவு; அமுரி = சிறுவர் சிறுநீர்; அளாவி = கலந்து; நலங்கி = வீறிழந்து.

பா. எண் : 378—துவராம் = துவர்ப்புச்சுவையுடையதாம் (செந் நிறமுடையதாம்) சீதமறும் = குளிர்ச்சியைக் நீக்கும்; கிருமி நாசம் = குடலில் வாழும் நுண் புழுக்கள் அழியும்; வன்னி = உதரநெருப்பென்னும் ஜடராக்கினி.

பா. எண் : 379—வாமம் = மலம்; நருவவே = நல்லமுறையில்.

பா. எண் : 380—அடைவாக = ஒழுங்காக; சாடும் = தாக்கி ஒழிக்கும்; சுயம்பாட வாக்கும் ஆமே = தானே பாட்டுகளை யாபித்துப் பாட வாக்குவன்மை அமையும்.

பா. எண் : 381—ஏமம் = பொன்; வள்ளம் = நிறம்; முன்பின் தள்ளி = முன்பகுதி பின்பகுதியை நீக்கி (இடைப் பகுதியைக் கொள்க). மகத்தான மூலமது = பெருமை பொருந்திய மூலாதாரம்; நிலவரம் = இயல்பான; நிற்கும் = பலகாலம் அழியாமல் நிலை பெற்றிடும்.

பா. எண் : 382—பஞ்சவண்ணம் = ஐந்துநிறம் (பசுமை, மஞ்சள், செம்மை, கருமை, வெண்மை) சீலைவடி கொண்டு = துணியில் சல்லித்து வடிகட்டி; தக்கும் = நிலைக்கும்.

பா. எண் : 383—அரித்து = சீலை வடிகொண்டு; களிம்பு = மாசு; மும்மலம் = ஆணவம், கன்மம், மாயை.

பா. எண் : 384—கருங்கடுக்காய் = அபயனென்னும் வகைக் கடுக்காய்; பூதம் = பருப்பொருட்களும் நுண் பொருட்களும்; பிரேதம் = உயிரற்ற பொர்ருள்கள்; சங்கைசெய்யும் = நெருங்கி ஆதாயம் செய்யும்; இருத்தி = நிலை பெறச்செய்து; அழுந்தும் = செறி வொடு திண்மை பெறும்; நிருத்தம் = நடனம்; சாஸ்வதம் = நிலைத்த தத்துவம்; சீலன் = ஒழுக்க முடையவன்.

பா. எண் : 386—அபூர்வம் = கிடைத்தற்கரியது. தெரிசித்தக் கால் = கண்ணால் கண்டாலே; பரிசிக்கில் = கையால் தொட்டால்; ஆக்கிராணம் = மூக்கால் முகர்தல்; தயை செய்வாள் = அருளுவாள்.

பா. எண் : 387—பொற்கடுக்காய் = சிவந்திக்கடுக்காய் (அல்லது) அமிர்தைக் கடுக்காய்; கன்னி = புரட்டாசி; ஆமம் = அபக்குவ தோடங்கள்.

பா. எண் : 388—சிறுகுறிஞ்சித் தேன் = சிறுமலைத்தேன் (பழநித் தலமுள்ள மலைத்தொடர்)

பா. எண் : 389—சாலிப்போகும் = மீறவொட்டாது தாக்கப்படும்.

பா. எண் : 390—காரம் = வெங்காரம்.



பா. எண் : 391—குயிரிகாரம் = வெங்காரம்; சாரம் = நவசாரம்.

பா. எண் : 392—ரவி = தாம்பரம்; சிலை = மனேசிலை.

பா. எண் : 393—ஓலோடு = (சுறுசுறு) ஒலியோடு.

பா. எண் : 394—குமரி = கற்ருழை.

பா. எண் : 395—தயக்கம் = கலக்கம்.

பா. எண் : 396—வழலை = மலம்; கைகடந்தால் = தவறிவிட்டால்.

பா. எண் : 398—பாலித்து = கலந்து.

பா. எண் : 399—முகிந்தபின்பு = முடிந்தபின்; நறுக்குமூலம் = கண்டந்திப்பிலி.

பா. எண் : 400—அன்னம் = சோறு.

---

## அன்னத்திற்குப் பொடி

கேளுமே மிளகொடு திப்பிலியுஞ் சுக்குங்
கெடியான சீரகமு மதியி னுப்பும்
காளுமே கருவேப்பின் இலையி னேடு
கலசமமா வகைவகைக்குப் பலந்தா னென்று
தாளுமே பெருங்காயம் பலமுங் கால்தான்
தனித்துமே சூரணித்து வைத்துக் கொண்டே
ஆளுமே அன்னத்தி னடுவே வைத்தங்கு
ஆவின்னெய் விட்டுமே பிடித்தாங் குண்ணே. (401)

## கற்பம் முறிந்தால் மாற்று

உண்ணவே யபானமது கீழே நோக்கும்
உற்றுப்பார் லட்சியங்க ளுருவித் தோற்றும்
கண்ணவே கடுக்காயு மிளகுந் தொட்டுக்
கைமுறையா யுண்ணயிலே முறிந்த தானல்
தண்ணவே சயமெடுக்குந் தங்கக் கற்பந்
தாக்காக உண்வுடன் தீரும் தீரும்
துண்ணவே உதரத்தில் நோய்கள் வந்தால்
சுகமாக அப்பிரகக் கற்பங் கொள்ளே. (402)

கொள்ளவே மலசமுங் கட்டிற் ருனல்
    குறிப்பாகக் காந்தமென்ற கற்பங் கொள்ளு
அள்ளவே யுடம்பயர்ந்து வீங்கிற் ருனல்
    ஆதியா மிரும்பின் முன் கற்பங் கொள்ளு
கள்ளவே கண்மயங்கி மறைந்த தானல்
    கலங்காதே கற்பூர சத்தைத் தின்னு
உள்ளவே கடிநஞ்சுபோ லுடம்பில் வீழ்ந்தால்
    உறுதியாய்க் கற்பத்தை யுரைக்கக் கேளே. (403)

உரைக்கவே வீழிவேர் சூர ணித்தம்
    உறுதியாஞ் சூதபற்பம் னவத்துட் கொண்டால்
பரைக்கவே பதினெட்டுக் குட்டம் போகும்
    பாங்கான கற்பத்தால் வந்த தோடம்
புரைக்கவே போகவொரு கற்பங் கேளு
    போக்கான அப்பிரகச் சத்துத் தானுந்
தரைக்கவே யொருபலத் திலரைப்பப லமாந்
    தங்கந்தாக் கியேயொன்ருக வுருக்கிக் கொள்ளே. (404)

உருக்கியே தங்கவெடை செயசூ தம்போட்டு
    உத்தமமாங் கெந்தகத்தைச் சுத்தி பண்ணி
மருக்கியதோர் மருந்துநின்ற வெடைக்கெல்லாஞ் சரியாய்
    மாசற்ற கெந்தகத்தை ஓட்டிலிட் டுருக்கு
நருக்கியே மருந்தெல்லாம் பொடியாய்ப் பண்ணி
    நலமான தயிலத்திற் புரட்டிக் கொண்டு
பெருக்கியே பொடிபண்ணி மேருக் கேற்றி
    பெரிதான வாலுகையி லெரித்தி டாயே. (405)

எரித்திட்டுப் பன்னிரண்டு சாமந் தீப்போடு
    இதமாக ஆறவிட்டெ டுத்துப் பாரு
அரித்திட்ட வருணநிற மாக நிற்கும்
    ஆயிரத்துக் கொன்றிடவே யதிகம் வேதை
மரித்திட்டே னென்பார்க்கு மார்பி லாணி
    வகையாகப் பணவெடைதான் தேனி லுண்ண
உரித்திட்டு உகாந்தவரை யிருக்குந் தேகம்
    யோகசித்தி காயசித்தி யுறுதி யாமே. (406)



உறுதியாய்ப் பணவெடைதான் தேனி லுண்ண
    உத்தமனே முறிந்தகற்ப முற்றுந் தேறும்
குறுதியாய்க் கற்பத்தால் முறிந்த தோடங்
    கோடிவித மானலுங் குலாவித் தீரும்
உறுதியாய் வாசியினில் நினைவு வேருய்
    வரிசையாய் ஏருட்டால் கோழ்கிக் கொள்ளும்
நெறுதியாய் சிந்தூர முண்டா யானல்
    நீர்ப்பீச மருவையிலே நிசமு மாமே. (407)

## கற்பத்தில் அபத்தியதோஷம்

நிசமான கற்பங்கள் தின்னும் போது
    நீக்கான சடத்துக்கு வருத்த மேது
கசமான கற்பத்தைத் தின்று கொண்டு
    காயத்தில் நோயெல்லாந் தீர்ந்த பின்பு
புசமான பெண்ணேடே புணர்ச்சி செய்தால்
    பேரான சயரோகஞ் சண்ணும் பாரு
பசமான கற்பமுண்டோன் பத்தியத்தை விட்டுப்
    பயருேடு பழவகைகள் தின்ருற் கேளே. (408)

கேளப்பா நீர்க்கட்டும் மலமுங் கட்டும்
    கெடியான தோளொடு கைகால் சோரும்
தூளப்பா தும்பைரசங் கொண்டா யானல்
    துளித்துமே யிறங்கிறது துறந்து வீழும்
வேளப்பா கற்பமுண்டோன் புளிதின் ருக்கால்
    மிடுக்கான பெருவயிறு யுப்ப லாகிக்
காளப்பா கால்கைகள் சுரப்பே றித்தான்
    கால்கடுப்புங் கைத்திமிரு மாகுந் தானே. (409)

தானென்ற கற்பமுண்டோன் கிழங்கு தின்ருல்
    தன்னுடம்பிற் சோபையொடு பாண்டு மாகு
மீனென்ற மாங்கிசங்கள் மீறித் தின்ருல்
    மிக்கான மயக்கமொடு சுரமு மாகும்
மோனென்ற தாகத்தில் மோருட் கொண்டால்
    மிகையான குன்மவலி மிடுக்கு மாகும்
பானென்ற பங்சையுப்புத் தின்ரு யானல்
    பட்டுதடா கண்ணிரண்டும் பரிந்து காணே. (410)

காணவே நாறுகின்ற கரந்தை தன்னைக்
கலங்காமல் சமூலந்தான் பிடுங்கி வந்தே
ஊணவே நிழலுலர்த்தலாய் உவர்த்திக் கொண்டங்
உகந்துமே யிடித்து நன்றாகச்சூ ரணமே
பாணவே பால்நெய்யில் தேனிற் கொள்ளப்
பாங்கான திங்காளான் றிற் சடநாற் றம்போம்
வாணவே திங்களிரண் டில்வா தம்போம்
மருவுகின்ற மூன்றுதிங்கள் பித்தம் போமே. (411)

போகுமேநாலுதிங்கள் குட்ட மெல்லாம்
புகழான திங்களைந்தில் வன்னி மீறும்
நாகுமே ஆறுதிங்கள் ஞான மீறு
நலமான வேழுதிங்கள் தேகம் பொன்னாம்
ஏகுமே யெட்டதனிற் சட்டை போகு
மேற்றமா யொன்பதிலே கமனங் கொள்ளும்
பாகுமே பரமசிவன் சடையில் வைத்தார்
பாங்கையெல்லாங் கண்டுணர்ந்த படிதா னென்றே. (412)

என்றான கரந்தையைத்தான் கொண்டு வந்தங்
இடித்துமே படிச்சாறு வடித்துக் கொண்டு
கன்றான கரண்டிதனைத் துப்புரவாய் விளக்கிக்
களிம்பகற்றிச் சூதத்தை யதிலே விட்டு
தன்றான கரியோட்டில் வைத்தே யூதிச்
சாறுதான் சுருக்கிட்டு நாலு சாமம்
பன்றாகக் கட்டியது வெண்ணெ யாகும்
பாங்கான வெண்ணெயெல்லாம் வாங்கிக் கொள்ளே. (413)

வாங்கியே யுண்டைபோல் வைத்துக் கொண்டு
மறுபடியு மிலையுரைத்துக் கவசங் கட்டித்
தாங்கியே பத்தெருவில் புடத்தைப் போட்டுத்
தப்பாமல் மறுபடியு மிலைய ரைத்துத்
தேங்கியே பத்துவிசை புடத்தைப் போடத்
திரண்டுமே மணிபோலக் கரியி லாடும்
ஓங்கியே யுண்டைதனைக் குகையி லிட்டங்
உருகையிலே நாலிலொன்று தங்கம் போடே. (414)



தங்கத்தி னெடையொக்க நாகம் போடு
தாக்கியே கலந்தொன்றா யுருக்கி வாங்கிப்
பங்கத்தின் கல்வத்தி லிதனை யிட்டுப்
பாங்காகப் பொடித்திட்டுப் பொடிக்குப் பாதி
லிங்கத்தைக் கூட்டியேதா ளகமுங் கெந்தி
நேரான சிலையொடுகால் வாசி கூட்டி
அங்கத்திற் கரந்தையொன்ற சாறு தன்னால்
அரைத்துமே பொடியாக்கி மேருக் கேற்றே. (415)

ஏற்றியே பன்னிரண்டு சாமந் தீயை
யெழிலான கதிராலே கிண்டிப் பாரு
மாற்றியே மாதளம்பூப் போல நிற்கும்
மாசற்ற நவலோகம் நூற்றுக்கொன்று
கோற்றியே கொடுத்தக்கால் கனக மாகுங்
கூர்ந்துமே சணவெடைதான் கரந்தையிலே
தேற்றியே மண்டலந்தா னுண்டா யானால்
சிவந்தெழுந்த சூரியன்போல் முகமாந் தேறே. (416)

## வெள்ளைக்கரந்தைக் கற்பமும் வேதையும்

தேறியே சங்கநிற மாங்க ரந்தை
தேடியே பாக்களவு பாலி லுண்ணா
மாறியே மண்டலத்தா னுண்டா யானால்
மாசற்ற சந்திரன்போல் முகமு மாகும்
வீறியே வெள்ளைமயிர் காகமயி ராகு
மேனியுமோ சிக்கென்று சிவந்து மின்னும்
ஊறியே அமுதந்தான் யோகத் திற்பார்த்து
உத்தமனே அமுதத்தை யுண்ணா வுண்ணே. (417)

உண்டுமே யுமிஉந்தக்கால் கல்லோடும் பழுக்கும்
உகந்தகண்கள் செண்பகத்தின் கண்போ லாகும்
அண்டுமே வெண்கரந்தை கொண்டு வந்தங்கு
அதிகமாம்படிச்சாறு பிழிந்து வைத்துத்
தொண்டுமே அயக்கரண்டி சுத்தி பண்ணிச்
சுத்தித்தசூதத்தை யதிலே விட்டு
நண்டுமே நாற்சாமஞ் சுருக்குப் போடு
நலமாக வெண்ணெயாம் வழித்து வாங்கே. (418)

வாங்கியே கிழிபோலக் கட்டிக் கொண்டு
மாசற்ற சூடனுடைத் தீயி லேவாட்டு
ஆங்கியே யாரையிலைக் குள்ளே வாட்டங்கு
அதிகமா மத்தங்காய்க் குள்ளே வாட்டு
மூங்கியே முன்கரந்தைக் கவசங் கட்டி
மூன்றுபுடம் போட்டெடுத்தே யுருக்கிப் பாரு
தாங்கியே தங்கம்போ லுருகி யாடுந்
தகர்த்துடைத்தால் வயிரம்போல் தளுக்காம் பாரே. (419)

பாரென்று சூதமணி யெடுத்துப் பார்த்தால்
படிகத்தி னொளிபோலப் பத்தி பாயும்
காரென்று ருக்கினக்கால் கண்விட் டாடுங்
கதித்தெடுத்தங் குடைத்தக்கா னெருங்குந் தூளாய்,
கூரென்று குகையில்வைத் துருகும் போது
கொடிதான நவலோக நீட்டி னக்கால்,
தாரென்று தவளையைப்போல் விழுங்கிப் போடுந்
தனிப்பச்சைச் சரக்கூட்டில் தங்கிப் போமே. (420)

தங்கிப்போம் பால்மதுதேன் தன்னை யுண்ணுஞ்
சாராயந் தனையிருந்தும் விடம்பட் சிக்கும்
மங்கிப்போ மாதருடை ருதுப்பொ சிக்கும்
மாசற்ற சூரியன்போல் வன்ன மாகுந்
தங்கிப்போம் பூர்ணதரி சனமு மாகுஞ்
சபம்பண்ணி லெழுகோடி மந்திரமுஞ் சித்தி
உங்கிப்போஞ் சிவவிந்தைக் கட்டி னேர்க்கிங்
கொருக்காலுஞ் சாவில்லை யுண்மை தானே. (421)

உண்மையாங் குளிகையைச்சிந் தூரம் பண்ணு
உற்பனமாய்க் குருபண்ணு களங்கு பண்ணு,
வண்மையாஞ் சிந்தூரம் பணவெடைதா னிறுத்து
மண்டலந்தான் வெண்கரந்தை தன்னி லுண்ணு,
திண்மையாஞ் சிவன்தின்று சடையில் வதைத்தார்
சிறப்பாக யான்தின்ற வனுபோ கத்தை,
எண்மையே ழாயிரத்தி லெழுதிப் போட்டேன்
எனைப்போலே யாகுகவென் றிசைத்திட் டேனே. (422)



## கறுப்புக்கரந்தைக் கற்பம்

இசைத்திட்ட கரந்தையைத்தான் கருப்பாய்ப் பண்ணி
இதமாக நிழலுலர்த்திச் சூரணமே செய்து,
நசைத்திட்ட நாலிலொன்று கெந்தி சூதம்
நாட்டியரை கருப்பான கரந்தை தன்னால்,
புசைத்திட்டுக் கருப்பாகப் பொடியாய்ப் போகும்
போட்டுமே சூரணத்தில் பிசைந்து கொண்டு,
திசைத்திட்டுத் தேனாலே யரைத்து மைபோற்
சிறுகவே யுண்டையது சுண்டைக் காயே. (423)

சுண்டைக்காய்ப் பிரமாண மண்டலந்தான் கொள்ளச்
சோபமில்லை தாபமில்லை மயக்கம் போச்சு,
பண்டைக்காய்க் காயத்தில் பதைப்புப் போச்சு
பருத்திட்டுக் கண்ணிரண்டும் பார்வை யாச்சு,
உண்டைக்கா யுகரத்தில் சிருமி போச்சு
உயர்ந்திட்ட வாசனைதான் சடத்தி லாச்சு,
மண்டைக்காய் சிரசுதனில் வருத்தம் போச்சு
மாசற்று வெண்டதுபோல் சடமு மாச்சே. (424)

## கொட்டைக்கரந்தைக் கற்பமும் வேதையும்.

ஆச்சுதே கொட்டையாங் கரந்தை தன்னை
யதிகமாய்ச் சமூலந்தான் பிடுங்கி வந்து
வாச்சிதே நிழலுலர்த்தி யிடித்துக் கொண்டு
வடிகட்டி நாலிலொன்று கண்டு சேர்த்து
வேச்சுதே வெருகடித்தூள் வெந்நீரிற் கொள்ள
மிடுக்காகுங் கால்கைக்குப் பலமுண் டாகும்
ஏச்சுதே வாசியென்ற குதிரை தன்னை
ஏற்றியே முனைகட்டி லிருக்குந் தானே. (425)

தானான கொட்டையாங் கரந்தை தன்னைச்
சமூலந்தான் பிடிங்கிவந்து சாறு வாங்கி
ஆனான அயக்கரண்டி தன்னில் சூதம்
அழுந்தவிட்டு மேலாகச் சுருக்குப் போடு
நானான நாற்சாமஞ் சுருக்கிட் டக்கால்
நல்லவெள்ளிக் கம்பிபோல் ரசமு மாகும்
கானான இலையரைத்துக் கவசங் கட்டிக்
காரியமாய் லகுபுடமாய்ப் போட்டி டாயே. (426)

போட்டிடுவாய் புடமொருபத் திலைக்கவசங் கட்டிப்
பேரான குகையிலிட்டங் குருக்கிக் கொண்டு,
நாட்டிடுவாய் தங்கமது நாலுக் கொன்று
நாகந்தான் தங்கத்தி னெடையே கூட்டிக்,
காட்டிடுவாய் கல்வத்தில் நொருக்கிக் கொண்டு
கரந்தையென்ற சாற்றுலே யரைத்து மைபோல்,
பூட்டிடுவா யுலரவைத்துப் பொடியாய்ப் பண்ணிப்
பேரிதற்குச் சரிகெந்தி கூட்டிக் கொள்ளே. (427)

கொள்ளவே யோட்டிலிட்டுக் கெந்தகத்தை யுருக்கிக்
குறித்தமுன் பொடிபோட்டு வறுத்துப் போடு,
கள்ளவே கல்வத்தில் போட்டுக் கொண்டு
காணீதுக் கெட்டிலொன்று தாளகமுஞ் சிலையும்,
விள்ளவே கரந்தையென்ற சாற்ற ரைத்து
மிக்காக வுலரவிட்டுப் பொடியாய்ப் பண்ணித்,
தெள்ளவே காசியென்ற மேருக் கேற்றிச்
சிலாக்கிட்டுச் சிவந்தபதந் தீயை மாற்றே. (428)

மாற்றியே மண்டலந்தான் சிந்தூ ரத்தை
மதுதன்னில் குழைத்துமே பணவெடைதா னுண்ணு,
தேற்றியே சிவந்திகதிர் போலத் தேகஞ்
சிறப்பான வுலோகத்தி லாயிரத்தொன் றீயப்,
பாற்றியே பத்தரையா மாற்றுக் காணும்
பதினறு வயதாகப் பாலிப் பார்பார்,
ஏற்றியே வாசியென்ற யோகம் பார்த்தா
விருந்திடுமே கற்பாந்த காலந் தானே. (429)

## செங்கரந்தைக் கற்பமும் வேதையும்

தானென்ற செங்கரந்தைக் கொட்டைதனைத் தள்ளித்
தனிச்சாறு படியிரண் டளந்து கொண்டு,
நானென்ற நாகமது பலந்தா னெட்டு
நவச்சாரம் வெங்காரம் பலந்தா னென்று,
மேனென்ற பொடிபண்ணி வைத்துக் கொண்டே
யேற்றமா மிலுப்பைநெய் விட்டு ருக்கி,
வேனென்ற வெங்காரப் பொடிமேல் தூவி
விரைந்துநின்ற சாறதனிச் சாய்த்திட் டாயே. (430)



சாய்த்திட்டுப் பதினெருக்கால் பின்பு நீயுந்
தகடுதட்டி லேசாகச் சதுர மாக்கிக்
காய்த்திட்ட கல்லுப்பு நாகவெடை தூக்கிக்
கல்லுப்பைச் செங்கரந்தைச் சாறு தன்னுல்
ஆய்த்திட்ட ரைத்துமே தகட்டி லப்பி
அசையாம லகலிலிட்டுப் புடத்தைப் போட்டு
மாய்த்திட்டே யாறவிட்டுக் கல்வத் திட்டு
மருவியரைத் தொன்ருக வில்லை கட்டே. (431)

கட்டியே யைந்தெரு வடுக்கிப் போடு
கனல்குளிர்ந்த பின்புதா னெடுத்துக் கொண்டு
கொட்டியே கல்வத்திற் சாறதனு லரைத்துக்
கூர்ந்துமே பத்துவிசை போட்டெ டுத்துத்
திட்டியால் பார்த்தக்கால் சிறப்பு மாகுய்
சிறந்திதற்கு நாலிலொன்று சூதஞ் சேர்த்து
வெட்டியே வெங்காரப் பொரியோடு சிலையும்
மீருமல் சூதவெடை கூடப் போடே. (432

போட்டுமே லகுபுடமா யைந்து போடு
பேரான வெள்ளியினூற் றுக்கொன் றீய
நீட்டியே பத்தரையே மாற்றுக் காணு
நிலைத்துண்ணு செங்கரந்தை தன்னில் வைத்து
மாட்டுமே மண்டலந்தான் கொண்டா யானல்
வாசியெல்லா முள்ளடங்குஞ் சாவோ வில்லை
தூட்டுமே காலாங்கி நாதர் சொன்ன
சூட்சமாங் கற்பத்தை திறந்திட் டேனே. (433)

## விஷ்ணுகாந்திக் கற்பம்

திறந்திட்ட விஷ்ணுகாந்தி தனைக்கொ ணர்ந்து
செப்பமாய் மண்டலந்தான் பாலிலரைத் துண்ணு
மறந்திட்ட நினைவெல்லா மருவி யுன்னு
மாசற்ற வெலும்புக்குள் சுரந்தான் போக்கும்
கரந்திட்ட தேகமது கறுத்து மின்னுங்
கண்ணி னெளி யோசனைத்தூ ரந்தான் காணும்
இறந்திட்ட சுவாசமெல்லா மிறுகி யேறும்
ஏற்றமாஞ் சுழிமுனையுந் திறந்து போமே. (434)

## வெள்ளை விஷ்ணுகாந்திக் கற்பமும் வேதையும்

போமென்ற வெள்ளைவிஷ்ணு காந்தி தன்னைப்
பிடுங்கியே நிழலுலர்த்த லாயுலர்த்திக் கொண்டு
ஏமென்ற விடித்துச்சூ ரணமே செய்தே
யெளிதாக மண்டலந்தான் தேனிலு ண்ணு
சாமென்ற சாவுபொய்யாஞ் சதுமுகன்றன் படைப்புந்
தப்பியே சதகோடி தரித்து நிற்குங்
காமென்ற கருவூரார் கொண்ட கற்பங்
காரணமா யடியேற்குக் கருதி னரே. (435)

கருதியே வெள்ளைவிஷ்ணு காந்தி தன்னைக்
கனக்கவே பிடுங்கிவந்து வைத்துக் கொண்டங்
அருதியே அயச்சட்டி யடுப்பி லேற்றி
அதிகமாய்க் காரீயந் தன்னை வைத்து
மருதியே யுருகவிட்டு வாங்கிக் கொண்டு
வறுத்திடுவா யிலையோடங் கிரும் பினலே
நருதியே நாற்சாமம் வறுத்தா யானல்
நாட்டமாஞ் செம்பரத்தம் பூப்போ லாமே. (436)

பூப்போலச் சிந்தூரம் பொருமிப் போகும்
பேராக வாறவிட்டு வாங்கிக் கொண்டு
தீப்போல மனேசிலையு நாலத் தொன்று
செயமான வெங்காரப் பொரிதான் கூட்டு
தூப்போலச் சூதமது நாலத் தொன்று
சுத்தமாங் கற்ருழஞ் சாற்ரு லாட்டு
மூப்போல மூன்றுபுடம் போட்டெ டுக்க
முதுமையாம் ரவிதன்னி னூற்றுக் கொன்றே. (437)

நூற்றுக்கங் கொன்ருன சிந்தூ ரத்தை
நுகர்ந்துமே மண்டலந்தான் தேனி லுண்ணு
பார்த்துகொண் டேபெண்ணைத் திரிந்தி டாதே
பாழான மனந்தன்னைப் பரவொட் டாதே
காத்துக்கொண் டேயிருநீ வாசி யோடே
கலந்துமே கேசரியில் கருத்தை யுன்னு
மாற்றுக்கொண் டேறியிடுஞ் சடமுந் தானும்
மகத்தான சித்தியிது மருவிப் பாரே. (438)



## சூரியகாந்திக் கற்பமும் வேதையும்

பார்பரிதிக் காந்தியென்ற பூவை வாங்கிப்
பண்பாக நிழலுலர்த்திச் சூரணமே செய்து
நேராவின் பால்தன்னில் வெருகடிதூள் கொள்ளு
நிசமாக மண்டலந்தான் கொண்டா யானல்
கார்கருகி லிடியுக்குள் பயமோ வில்லை
கலந்துநின்ற கேசரத்தி லாட லாகும்
வார்கருகிச் சட்டைகக்கி மதன்போ லாகும்
மகத்தான வமுதமுண்ட மார்க்க மாமே. (439)

மார்க்கமா மயப்பொடிதான் புதிதாய் வாங்கி
மகத்தான பழச்சாற்றி லூற வைத்துக்
கார்க்கமாங் களிம்பெல்லாங் கழுவிப் போட்டுக்
காரியமாய்ச் சூரியகாந் தத்தின் பூவைத்
தீர்க்கமா யிடித்துமே பிழிந்து கொண்டு
சேரந்தவயப் பொடிதன்னி லூற வைப்பாய்
ஆர்க்கமா யைந்துநா ளூறி யபின்
அதிடனுடே வெங்காரங் கூட்டக் கேளே. (440)

கூட்டவே வெங்காரப் பலகை கேளு
குறித்தவுத்தா மணியின்றன் சாறு வாங்கித்
தாட்டவே பலவகைதனில் தோய்த்துச்
சமர்த்தான ரவிதன்னிற் போட்டு வைப்பாய்
பாட்டவே பத்துநாள் போட்ட பின்பு
பாங்கன லிங்கமது சுருக்குப் போடத்
தூட்டவே சூரியகாந் திலையின் சாற்றில்
சுருக்கிடவே நாற்சாமங் கட்டிப் போமே. (441)

கட்டியதோர் லிங்கமது பலந்தா னென்று,
கல்லான காரமது பலந்தானென்று,
மட்டியதோர் பூச்சாற்றி லரைத்து மைபோல்
வளமாக மூன்றுபங்கு பண்ணிக் கொண்டே
ஒட்டியதோர் முன்வைத்த வரப்பொடிதன் னல்
உறுதியாய்ப் பிசைந்துவைத் தொருநாள் தானும்
தெட்டியதோர் குகையிலிட்டுச் சில்லுப் போட்டுத்
திரளவே சரவுலையி லுருக்கி யாட்டே. (442)

ஆட்டையிலே களிபோல வுருகும் பாரு
அடித்துமே யாய்ந்தெல்லாம் பொறுக்கிக் கொண்டு,
மூட்டையிலே முன்மருந்து பிசறி வைத்து
முதிர்ந்துமே யுருக்கினுல் மணியு மாகும்,
பூட்டையிலே பின்பொருக்கால் மருந்திட் டாட்டு
பேரான சூரியன்போல் ரவியு மாகுங்,
காட்டையிலே மதிதன்னில் பத்துக் கொன்று
கனகமஃ தைந்தாகுங் கண்டு தீரே. (443)

தீரவே சிந்தூரஞ் செய்யக் கேளு
சிறப்பான அயச்செம்ப துருகும் போது
தாரவே தங்கமது நாலுக் கொன்று
தாக்கியே யுருக்கியபின் தகடு தட்டி
ஆரவே யதின்மேலே பூசக் கேளு
அரிதாரஞ் சிலைகெந்தி சூதத் தோடு
வேரவே வீரமோட ரைக்கால் வாசி
மிகக்கூட்டி அயச்செம்புத் தகட்டிற் பூசி
மூரவே புடம்போட்டுப் பின்பு தானு
முன்மருந்து பூசியே புடத்தைப் போடே. (444)

புடம்போடக் கருப்பாக நொருங்கிப் போகும்
பொரிகாரம் பொரித்தெடுத்து நாலத் தொன்று,
மடம்போட மனேசிலையு நாலத் தொன்று
மாசற்ற சூதமது நாலத் தொன்று,
கடம்போடக் காந்திப்பூச் சாற்ற ரைத்துக்
கசகாமல் சில்லிட்டுச் சீலை செய்து,
நடம்போட லகுவாகப் புடத்தைப் போட்டு
நவலோக நூற்றீய வேம மாமே. (445)

## ஓரிலைத்தாமரைக் கற்பம்

ஏமமா மோரிலைத்தா மரைச்ச மூலம்
இடித்துமே சூரணித்து நெய்யிற் கொள்ளச்
சேமமா யுடம்பினின்ற வேக மொல்லாஞ்
சிதைந்துமே விட்டுப்போஞ் சிறுநீர் தானுங்
காமமாய்க் குளிர்ந்துவிடுங் கண்பு கைச்சல்
காமாலை வறட்சியொடு கடிய பித்தம்
வாமமாய்ப் போய்விடுமண் டலந்தான் கொள்ளு
மகந்தான ரோகமெல்லா மாறிப் போமே. (446)



## விடத்தேர்க் கற்பம்

மாறவே விடத்தேர்வேர்ப் பட்டை வாங்கி
மருவநன்ரு யிடித்தரித்துச் சூர ணித்துத்
தாறவே பலநாலு நிறுத்துக் கொண்டு
தளுக்கான சூதமது பலந்தா னுலு
கூறவே குலாமல்லிச் சாற்றி னுலே
குலாவியரைத் தெண்சாமம் பொடியாய்ப் பண்ணித்
தேறவே நாற்பதுநாள் தேனிற் கொள்ளு
சில்விடமாம் பதினெட்டுக் குட்டம் போமே. (447)

## சீந்திற் கற்பம்

போமென்ற பொற்சீந்தி லானு னன்று
புகழான சிவப்புநன்று கறுப்பு நன்று,
நாமென்றே கிடையாட்டா னல்ல சீந்தி
னறுக்கியே துண்டுதுண்டாய்க் கிழித்துப் போட்டங்
கேமென்ற நிழலுலர்த்தி யிடித்துத் தூளாய்
ஏற்றமாய் வடிகட்டிச் சூரணமே செய்து,
தாமென்றே நாலிலொன்று சர்க்கரையைச் சேர்த்துச்
சமர்த்தாக வெருகடிதூள் மண்டலந்தான் கொள்ளே. (448)

கொள்ளவே குன்மமொடு சந்தி விக்கல்
கொடிதான வத்திசுர மெய்ம்ம றத்தல்
வெள்ளவே மேகமூத்தி ரங்கி ரிச்சம்
மிக்கதோர் நீர்ப்பாடு மேனி கன்றல்
தெள்ளவே சிரசிலுள்ள வாயு வெல்லாம்
சிந்துமே யமுதந்தான் நாடி சுத்தி
கள்ளவே காமப்பா லுடம்பி லூறுங்
கணக்கான வமிர்தசஞ் சீவி தானே. (449)

## வேம்பின் கற்பம்

சஞ்சீவி யாகுநூற் ருண்டின் வேம்பைச்
சதைப்பட்டை வெட்டிவந்து நிழலு லர்த்தித்
துஞ்சீவி யிடித்துச்சூ ரணமே செய்து
சுத்தமாங் கருங்குன்றிச் சாறு வாங்கிப்
பஞ்சீவி யைந்துவிசைப் பாவனமே பண்ணிப்
பரிதிமுன் பரப்பிவடி கட்டிக் கொண்டு
நஞ்சீவி கற்கண்டு நாலிலொன்று சேர்த்து
நலமாக மண்டலந்தான் கொண்டி டாயே. (450)

## அருஞ்சொற்பொருள்

**பா. எண்: 401 முதல் 450 வரை**

பா. எண் : 401—கருவேம்பின் இலை—உலகவழக்கில் கறிவேப்பிலை என்று வழங்கப்படுகின்றது; இதன் கியாழம் பா எண் 395இல் கூறியுள்ளமையுங் காண்க. கலசமமாய் = சம எடையாய்த் தூளாக்கிக் கலந்திருக.

பா. எண் : 402—உருவித்தோன்றும் = நழுவிக்காணும்; க்ஷயம் = இளைப்புநோய்.

பா. எண் : 404—செயசூதம் = கட்டிய இரசம்.

பா. எண் : 406—அருணன் = இளஞ்சூரியன்.

பா. எண் : 407—கோழ்கிக் கொள்ளும் = முடங்கிக் கொள்ளும்.

பா. எண் : 409—துளித்துமே = சொட்டுச் சொட்டாக; துறந்து விழும் = (அடைப்புகள்) திறக்கப்பட்டு வேகமாய் ஊற்றும்; சுரப்பு = வீக்கம்.

பா. எண் : 410—மிடுக்கும் = வலிமை பெறும். பட்டுதடா கண்ணிரண்டும் = கண்களிரண்டும் அழிந்துபோம்; பரிந்து = இரங்கி.

பா. எண் : 411—சடநாற்றம் = தேகத்தில் காணும் தீயநாற்றங்கள் திங்கள் = மாதம்.

பா. எண் : 412—சட்டை = மேல்தோல்; கமனம் = விண்ணில் செல்லும் வழி.

பா. எண் : 417—சங்கநிறம் = வெண்மை.

பா. எண் : 418—கல்லோடும் பழுக்கும் = கற்களும் ஓடுகளும் பொன்னாகும்; சூதம் = இரசம்.

பா. எண் : 419 மத்தங்காய் = ஊமத்தங்காய்.

பா. எண் : 421—சிவவிந்து = இரசம்.

பா. எண் : 424—பிரமாணம் = அளவு; வெண்டு = வைரம்.

பா. எண் : 425—கண்டு = கற்கண்டு (தூள்).

பா. எண் : 429—மது = தேன்.

பா. எண் : 430—தள்ளி = நீக்கி.



பா. எண் : 432—பத்துவிசை = பத்துதடவைகள்; திட்டியால் = கண்ணால் திருஷ்டி).

பா. எண் : 433—திறந்திட்டேன் = வெளிப்படையாகக் கூறி விட்டேன்.

பா. எண் : 436—கனக்கவே = அதிகமாக.

பா. எண் : 439—பரிதிக்காந்தி = சூரியகாந்திப்பூ; மதன் = மன் மதன்.

பா. எண் : 444—அரிதாரம் = தாளகம்; சீலை = மனோசிலை.

பா. எண் : 445—சாந்திப்பூ = சூரியகாந்திப்பூ.

பா. எண் : 447—அரித்து = சலித்து.

பா. எண் : 449—சத்தி = வாந்தி.

———

கொண்டிட்டால் வயிரம்போ லிறுகுந் தேகங்
குறிப்பான கண்ணிரண்டுஞ் சிவப்பு மாகு
முண்டிட்டா லூழிவினைப் பயனும் போகும்
உகாந்தமாங் கற்பவரை யிறுகுந் தேகம்
நண்டிட்டா னரம்பதுவு முறுக்கு மாகு
நரைதிரையு மாறிப்போம் ஞான முண்டாம்,
ஓண்டிட்டால் யோகத்தி லுறுதி யாகு
மொருக்காலுஞ் சாவில்லை யுண்மை தானே. (451)

### கருவேம்புக் கற்பம்

உண்மையாய்க் கருப்பாக வேம்புண் டாக்கி
யுகந்துமே மண்டலந்தான் கொண்டா யானல்
வெண்மையாஞ் சடங்கரிய வண்டு போலா
மேனியினி லுரோமமெலா நிமிர்ந்தெ ழும்புந்
தண்மையாந் தனுத்தானுங் கற்பாந்த காலஞ்
சமாதியிலே யிருக்கலாந் தளுக்காய்க் காணும்
எண்மையா யிருட்டறையி லிருந்தா யானல்
எழுகின்ற கதிர்போல விருக்கும் பாரே. (452)

## சர்க்கரைவேம்பின் கற்பமும் வேதையும்

பாரென்ற மலைதொறுஞ் சர்க் கரைவேம் புண்டு
  பட்டைதின்ருற் கற்கண்டு போலே காணுங்
காரென்ற விலைதின்ருற் கரும்பு போலாங்
  காய்தின்ருல் மாம்பழத்தின் ரசனை போலாம்
வேரென்ருல் கத்தூரி வாசம் வீசும்
  விதைதின்ருல் மிக்கநெல்லிக் காய்போ லாகுந்
தாரென்ற சமூலஞ்சூ ரணமே செய்து
  தனியாவின் பால்தன்னிற் சமர்த்தா யுண்ணே. (453)

உண்ணவே மண்டலத்தில் கமன சித்தி
  யோகசித்தி லோகசித்தி யுயர்ந்த சித்தி
விண்ணவே வேர்தன்னில் சூதங் கட்டும்
  மிக்கான விலைதன்னில் நாகங் கட்டும்
கண்ணவே காய்தன்னில் செம்பு நீறுங்
  கடியதோர் விதைத்தயிலந் தாது கட்டும்
பண்ணவே பட்டைதன்னி லுப்புக் கட்டும்
  பாங்கையெல்லாம் யான்சொன்ன படியே பாரே. (454)

படியான சர்க்கரையாம் வேம்பின் காயைப்
  பக்குவமா யிளம்பிஞ்சுப் பருவம் பார்த்துக்
கடியான திடித்துமே சாறு வாங்கிக்
  காய்ச்சியே கொழுசுதன்னைத் தோய்த்திட் டக்கால்
எடியான வயந்தானு மேம மாகும்
  ஏற்றமாம் பூச்சாற்றில் செம்பு மாகும்
நெடியான பழச்சாற்றில் காரீ யமேமம்
  நிச்சயமாய்ப் பார்த்தபடி யான்சொன் னேனே. (455)

## பொற்றலைக் கற்பமும் வேதையும்

சொன்னதோர் பொற்றலையின் சாறு வாங்கிச்
  செம்புதனைத் தகடுதட்டிச் சாற்றில் தோய்ப்பாய்
பன்னவே காய்ச்சியே பதினொ ருக்கால்
  பருவமுடன் தோய்க்கவே யதராய் வீழும்
அன்னதோ ரதரெல்லா மரைத்து மைபோ
  லடைவாக லேசான வில்லை தட்டிப்
பொன்னதோ ரண்டோடு பொடித்து மூடிப்
  பொருந்தகலி லாயிரமா மெருவிற் போடே. (456)



எருவிலே புடமிட்டே யாற விட்டங்
  கெடுத்தக்கால் குருபற்ப மென்று பேரு
அருவிலே யணுகினுல் சூதங் கட்டு
  மணுகினுல் மதிதன்னி லேம மாகும்
பொருவிலே பொற்றலையி னிலைய ரைத்துப்
  பேரான பாக்களவு பணவெடைதான் பற்ப
மருவிலே மண்டலந்தா னுண்டா யானுல்
  மாணிக்க வொளிபோல வடிவு மாமே. (457)

## கிளிமூக்குக் கற்பம்

வடிவான கிளிமூக்கு மரம தொன்று
  மகாவுயர்த்தி யாயிருக்கு மகத்தாந் தூலம்
இடிவான விலையரசி னிலைபோ லாகு
  மேற்றமாம்பூப் பூத்தமற் ருநாள் பழமாம்
படிவான பழத்தையுண்டால் சாமத்தில் சித்தி
  பண்பான கேசரத்தி லாகும்
நெடிவான பழமரிது கிடைக்க வென்ரு
  னேர்ந்தங்கே சமாதியுற்ரு னேருந் தானே. (458)

## கரிசாலையாதி திரிகற்பம்

நேர்ந்தபின்பு கரிசாலை குப்பை மேனி
  நேர்சிறிய செருப்படியுங் கருப்பாய்ப் பண்ணி
ஏர்ந்தபின்பி டித்துநன்ருய்ச் சூரணமே செய்தங்
  கேற்றமாந் தேனதனில் கிண்டி வைத்துக்
கார்ந்தபின் அந்திசந்தி கழஞ்சு கொள்ளு
  கண்காண மண்டலந்தான் கொண்டா யானுல்
தார்ந்தபின் புதசையிலுள்ள தோடம் போகுஞ்
  சகலநூற் கருவெல்லாந் தோணும் பாரே. (459)

தோணுமே சுயம்பாடப் பாலை வாக்காஞ்
  சுத்தமாய்ப் பொன்னிறம்போ லாகும் தேகம்
காணுமே மன்மதன் போலழ குண்டாகும்
  கஞ்சமலர் போற்கண்கள் சிவப்பு மாகும்
வேணுமே பெண்களனு போகந் தானும்
  விரைந்துநின்ற மாயத்திற் சிக்க வேண்டாம்
தூணுமே துரும்பாம்பெண் ணராக்க டித்தால்
  சொல்லிவிட்டேன் சித்தியெல்லாம் விழலாய்ப் போமே. (460)

### கரிசாலையாதி பஞ்சகற்பம்

விழலாகப் போகாமல் கரிசலை கரந்தை
மிக்கான பொற்றலையும் நீலிவல் லாரை
பழலாகப் பாக்களவு பாலிற் கொள்ளு
பாங்கான மண்டலந்தா னுண்டா யானல்
கழலாகக் காயந்தா னுயிரத் தெட்டுக்
கனகம்போற் சடந்தானுங் கனிந்து மின்னும்
மழலாக வார்த்தையது கின்னரத்தி னெலியா
மகத்தான வாசியுமோ விறுகும் பாரே. (461)

### சிவனார்வேம்புக் கற்பம்

இறுகுமே சிவனார்தன் வேம்பி னேடே
ஏற்றமாம் வாலுழுவை சமனய்ச் சேர்த்து
நறுகுமே யிடித்துநையப் பூப்புடத்திற் றயிலம்
நலமாக வாங்கியே வைத்துக் கொண்டு
திறுகுமே சீரகமுஞ் சருக்கரையும் போட்டுத்
திறமாகக் கலக்கியதில் வைத்துக் கொண்டு
கறுகுமே கால்கழஞ்சு சந்தி சந்தி
கனமான மண்டலந்தான் கொண்டி டாயே. (462)

கொண்டிட்டால் வாதபித்த கபத்தைச் சாடுங்
கொடியான தாதுவெல்லாம் பருத்து ரக்குங்
கண்டிட்டால் கோடைரவிக் காந்தி யில்லை
காலுரக்கு மெத்தூரம் நடந்திட் டாலுந்
தண்டிட்ட சமாதிக்கு ளிருந்தால் கேளு
சாங்கமா யுறைப்புண்டாந் தளர்ச்சி இல்லை
விண்டிட்ட சரசுவதி நிருத்தஞ் செய்வாள்
வேதாந்தம் பார்த்துநித்தம் விரவி டாயே. (463)

### வெள்ளைத்தூதுவளையாதி அட்டகற்பமும் வேதையும்

விரவுவெள்ளைத் தூதுவளை யிலையி னேடு
விரிவான தக்கோலஞ் சாதிக் காயும்
வரவுவாலு ழுவையென்ற விதைதன் னேடு
மகத்தான கொடிவேலி வேரின் பட்டை
நிரவுநிலப் பனங்கிழங்கு பொற்கொன் றைப்பூ
நேரான வைங்கோல விதையுங் கூட்டித்
தரவுசம னுக்கியே பொடியாய்ப் பண்ணிச்
சமர்த்தாக வெருகடிதூள் முட்பன்றி நெய்யில்
உரவுஒரு மண்டலந்தான் கொண்டா யானு
லுகாந்தவரைச் சடந்தானு மிருக்கும் பாரே. (464)



பாரென்ற பராபரமா மூல நாதர்
பாட்டர்பதஞ் சிரசில்வைத்து வணக்கஞ் செய்து
தேரென்ற திருமூல ரைஞ்நூற் றுள்ளே
சொல்லிவைத்தார் சிக்காகத் தெளிவாய்த் தானு
மேரென்ற வேழாயி ரத்திற் றுனு
மெளிதாகச் சொல்லி வைத்தே னறிய வென்று
காரென்ற காலாங்கி யையர் தின்ற
கற்பத்தை யடியேற்குக் கருதி னரே. (465)

கருதியதோர் சங்கத் தூ துவளை தன்னைச்
சமூலந்தான் பிடுங்கிவந்து சாறு வாங்கிப்
பருதியதோர் படிச்சாற்றை யளந்து கொண்டு
பாங்கான பூநீறு பலந்தான் போட்டங்
கருதியதோ ரயக்கரண்டி தனைவி ளக்கி
ஆசில்லாச் சூதமது பலந்தான் விட்டுத்
தருதியதோர் சாறுதனைச் சுருக்குப் போடச்
சமரசமாய்க் கட்டியே மணிபோ லாமே. (466)

மணிபோல நின்றதொரு சூதந் தன்னை
வாட்டியே மத்தங்காய் தன்னிற் றுனும்
துணிபோலச் சூடன்றன் நீயில் வாட்டிச்
சுயமான கரண்டிதனி லுருக்கிக் கொண்டு
தணிபோலத் தங்கமது நாலத் தொன்று
தங்கத்தி னெடைதானு நாகம் போடு
விணிபோல வெங்காரஞ் சிலையுங் கூட்டி
வெளுப்பான தூதுவளைச் சாற்று லாட்டே. (467)

சூட்டியே லகுபுடமா யைந்து போடங்
காண்மையாஞ் சூதமது குருவு மாகு
மாட்டியே வெள்ளிதனில் நூற்றுக் கொன்று
மருவிடவே மாற்றேழு காணுங் காணும்
பாட்டியே பாக்களவ யிலைய ரைத்துப்
பற்பமது பணவெடைதான் பாலிற் கொள்ள
நாட்டியே நாற்பதுநாள் கொண்டா யானல்
நலமான சூரியன்போல் முகமு மாமே. (468)

### அமுரியை முறிக்க

ஆமென்ற வமுரிதனை முறிக்கக் கேளு
வடிகனத்த தேற்றும்வேர் வெட்டி வந்து
பாமென்ற பாத்திரம்போல் கடைந்து வாங்கிப்
பக்குவமா யமுரிதனை முன்பின் தள்ளி
நாமென்ற பாத்திரத்தி னடுவமுரி விட்டு
நற்றேற்றும் வித்தொன்று பொடித்துப் போட்டு
காமென்ற கால்நாழி வைத்து வைக்கக்
கசடகன்று சுத்தமாய் முறிந்து போமே. (469)

### கற்ப பாத்திரம்

முறிந்துபோ மூத்திரத்தின் தோடம் போகும்
முயற்சியாங் கற்பமெல்லா மிப்படியே கொள்ளு
நொரிந்துபோ நூருண்டின் வேப்பம் வேரி
னுணுக்கமாய்ப் பாத்தி ரந்தான் பண்ணிக் கொள்ளு
கரிந்துபோங் கற்பபாத் திரமு மாகுங்
காணிந்தப் பாத்திரம்பால் நெய்தே னுக்காம்
வெரிந்துபோங் கற்பங்கள் தின்னும் போது
வெட்டையே மேற்கொண்டால் விவரங் கேளே. (470)

கேளுநீ தேற்றும்வேர் பாத்திர ந்தான்
கிளர்ந்தெழுந்த வமுரிக்கு வைத்துக் கொள்ளு
மாளுநீ வேம்பின்வேர்ப் பாத்தி ரந்தான்
மருந்தென்ற நெய்தேனுக் காகு மாகும்
காளுநீ காந்தமென்ற பாத்தி ரந்தான்
காயத்துக் குண்ணுகிற வூணுக் காகும்
தாளுநீ யிந்தமுறை தப்பா மனின்று
சத்தியமாய்க் கற்பத்தைத் தாக்கி யுண்ணே. (471)

### கற்பத்தால் சூடு கொண்டார்க்குக் குடிநீர்

உண்ணவே கற்பத்தால் காந்தி கொண்டா
லுயர்கின்ற மயக்கமொடு சோபந் தாபம்
முண்ணவே மூர்ச்சையொடு சுரங்கள் கண்டால்
மூர்க்கமாங் கியாழமொன்று சொல்லக் கேளு
தண்ணவே தாளிசபத் திரியுஞ் சுக்குந்
தனியான மதுரமொடு சீர கந்தான்
துண்ணவே சிறுதேக்குக் கற்கன் டோடு
சிறப்பாக வகைக்குக்கால் பலமே கூட்டே. (472)



கூட்டியே நீர்விட்டங் கெட்டி லொன்றுய்க்
குறுகவே காய்ச்சிப்பாத் திரத்தி லுண்ணு
மாட்டியே மயக்கமொடு தாபஞ் சோபம்
வருத்தமாஞ் சேத்துமமுஞ் சுரங்கள் மூர்ச்சை
ஏட்டியே காசமோ டெரிவ ழற்சி
இனிமையாம் வாய்த்துவர்ப் பெல்லாந் தீரும்
மாட்டியே பஞ்சகற்பந் தேய்த்து வைத்து
மருந்தென்ற நீர்தன்னில் முழுகிப் போடே. (473)

முழுகவே பற்படக நிழனு வற்றுன்
முதிராத மருதிலையும் பழம்பாசி கூட்டு
நமுகவே செம்பரத்த விலைதன் னோடு
நற்குளத்திச் குளிரியென்ற விலையு மாகும்
உழுகவே ஓரிலைத்தா மரையிவ் வேழு
முற்றுமே சமபாகந் தண்ணீரிற் போட்டுக்
கழுகவே வெந்நீரில் முழுகிப் போடு
காந்தியெல்லாந் தணிந்துவிடுங் கற்ப முண்ணே. (474)

### நீலச்சோதி கற்பம்

உண்ணவே நீலமாஞ் சோதி தானும்
உயர்கின்ற கெந்தகமுஞ் சரியாய்க் கூட்டித்
துண்ணவே சூதமது கெந்தகத்தி னிறைதான்
துடியான திப்பிலியு மேலங் கூட
அண்ணவே ஐந்தையுந்தான் சமபாக மாக்கி
அதட்டியரை கலவத்தி லவுரிச் சாற்றுல்
கண்ணவே நாற்சாம மரைக்க மையாங்
காயவைத்துக் கால்கழஞ்சு தேனி லுண்ணே. (475)

உண்ணவே வாயுவென்ற தளத்தைச் சாடும்
ஓடுகின்ற வாசியெல்லா முள்ளே தாக்குந்
தண்ணவே சமாதிக்கு ளசைத்தி டாது
சாங்கமாம் பொறிகளெல்லாந் தண்மை யாகும்
விண்ணவே கேசரத்தி லோடும் போது
மிக்கான மயக்கமொடு தாப மில்லை
அண்ணவே ரோமமெல்லா மண்டங் காக்கை
அதினுடைய இறகுக்கு மதிக மாமே. (476)

## பிரமி கற்பம்

அதிகமாம் பிரமியுடைப் படிச்சா றென்றும்
ஆவினெய் படியொன்றுஞ் சமனாய்ச் சேர்த்து
நிதிகமா யடுப்பில்வைத் துக்காய்ச்சிக் கொண்டு
நேர்நாட்டுச் சர்க்கரைதா னுலத் தொன்று
விதிகமா மிளகொடுதிப் பிலியிந் துப்பு
மிக்காஞ்சுக் கோடுகடு நெல்லி தான்றி
பதிகமா மஞ்சளொடு சமனாய்ச் சேர்த்துப்
பாங்காக வகையினுக்கோர் பலமாய்க் கூட்டே. (477)

பலமாக இடித்துநன்றாய்ச் சூரணமே செய்து
பாங்கான முன்நெய்யில் கிண்டிக் கொண்டு
குலமாக வடித்தெடுத்துக் கற்பந் தின்று
கூர்ந்துமே மிளகுதின்னுங் காலந் தன்னில்
கலமாகக் கியாழமிரா மாறு கொள்ளு
கடிசான சிந்தூரங் காலையிலே தின்றால்
மலமாக நெல்லிக்காய்ப் பிரமா ணந்தான்
மாலையிலே யிம்மருந்தைக் கொண்டி டாயே. (478)

கொண்டிடவே பதினாறு வயது மாகுங்
குறிப்பாய்ப்பெண் கொண்டக்கால் கருப்ப நாடும்
அண்டிடவே யடுக்காறு முருவிக் காணும்
அந்தரத்து மீதெ ல்லாம் பகலிற் றேன்றும்
விண்டிடவே வெள்ளெழுத்து மாறிப் போகும்
மேற்கொண்ட வாசுயெல்லா மீண்டு புக்கும்
கண்டிடவே காமப்பா லுடம்பி லூறுங்
கடிசான சிந்தூர வேகம் போமே. (479)

## கற்பிமிக் கற்பமும் வேதையும்

வேகம்போங் கல்லுக்குள் பிரமி தன்னை
விரைந்திடித்துச் சூரணமாய்ச் செய்து கொண்டு
தாகம்போந் தேன்றன்னிற் குழைத்துண் டக்கால்
சடந்தானுங் கருங்கல்லாய்த் தளுக்கு மாகுங்
காகம்போங் கத்தியால் வீசி னக்கால்
கலீரென்று வெண்கலத்தி னேசை காணும்
ஆகம்போ மந்திசந்தி மண்டலங் கொள்ளு
மலையிலுள்ளோ ரெல்லோருங் கொண்டிட் டாரே. (480)



கொண்டிட்ட கற்பிரமிச் சாறு வாங்கிக்
குகையரைத்தங் கிலேதன்னைச் சூதம் விட்டே
ஓண்டிட்ட வோட்டில்வைத்துச் சருக்குப் போட
ஒருசாமந் தன்னிலே யுண்டை யாகும்
பண்டிட்ட தங்கமிட்டு நாகம் போட்டுப்
பரிவாகக் குகையிலிட் டுருக்கிக் கொண்டு
கண்டிட்ட கல்வத்தில் பொடியாய்ப் பண்ணிக்
கனமான சிலைகெந்தி காரங் கூட்டே. (481)

கூட்டியே கற்பிரமிச் சாற்று லாட்டிக்
குறிப்பாகக் காசியென்ற மேருக் கேற்றி
ஆட்டியே பன்னிரண்டு சாமந் தீயை
ஆறவிட்டெ டுத்தக்கா லருண மாகும்
நாட்டியே நவலோக மாயிரத்துக் கோடும்
நயந்துமே பணவெடைதான் பாலி லுண்ணு
மாட்டியே மண்டலந்தா னுண்டா யானால்
மாசற்ற வயிரம்போல் தேக மாமே. (482)

## நெல்லிமுள்ளிக் கற்பம்

வயிரமா நெல்லிமுள்ளி தன்னை வாங்கி
மருவநன்றா யிடித்துச்சூ ரணமே யாக்கி
அயிரமா மப்பிரகச் சிந்தூ ரந்தான்
அதற்கெட்டுப் பங்குக்கோர் பங்கு சேர்த்துத்
துயிரமாந் தேன்தன்னில் குழைத்தே யுண்ணு
சுகமாக மண்டலந்தா னுண்டா யானால்
கயிரமாங் காயமது கருங்காலிக் கட்டைக்
கனல்போலச் சோதியாய்க் காணுங் காணே. (483)

## நெல்லிப்பூக் கற்பம்

காணவே நெல்லிப்பூ தன்னைச் சேர்த்துக்
கண்காண நிழலுலர்த்திச் சூரணமே செய்து
பாணவே பால்தன்னிற் குழைத்துக் கொள்ளு
பாங்காக மண்டலந்தா னுண்டா யானால்
தோணவே தீயெரிப்புச் சலக்க ழிச்சல்
தூயவிர ணஞ்சோபை பாண்டு போகும்
ஊணவே லோகபற்பம் வைத்தே யுண்ணு
ஓடலாம் வெகுதூர மூச்சா டாதே. (484)

## நெல்லிப்பட்டைக் கற்பமும் வேதையும்

ஆடாத நெல்லிவேர்ப் பட்டை வாங்கி
அதியிரவி தனிலுலர்த்தி பாணைக் கிட்டு
மேடாத மேல்மூடிச் சீலை செய்து
மிக்கவடித் தூர்தன்னில் துருவு போட்டுப்
பூடாத பூப்புடத்தில் தயிலம் வாங்கிப்
பேரான வயப்பொடி தூய்மை செய்து
மாடாத தயிலத்தில் புரட்டி வைத்து
மனோசிலையும் வெங்கார மெட்டுக் கொன்றே. (485)

எட்டுக்கு ளொன்றுதான் கல்வத் திட்டு
இழுத்தரைத்து மூன்றுபங்கு பண்ணிக் கொண்டே
உட்டுக்கு ளொருபங்காய்ப் பொடியிற் சேர்த்து
குறுக்குநீ குகையிட்டுச் சரவுலையிற் றூனும்
நட்டுக்கு ளுருகிநன்றாய் மணியு மாகும்
நறுக்கியுடைத் திட்டுமுன் மருந்து கூட்டி
முட்டுக்கு மூன்றுருக்கு ருக்கிப் பாரு
முதிர்ந்தயந்தான் ரவியாக விருக்கும் பாரே. (486)

இருக்கின்ற வயச்செம்பி லெட்டுக் கொன்று
ஏற்றமாந் தங்கத்தை யுருகை யிலேஈவாப்
நருக்கின்ற நாகத்தைத் தங்கவெடை போடு
நலமாக வுருக்கியே தகடு வார்த்து
மருக்கின்ற மனோசிலையும் லிங்கங் காரம்
மாளவே யெட்டொன்று தயிலத் தாட்டித்
தருக்கின்ற தகட்டின்மேற் பூசிப் பூசிச்
சார்வாக அகலிலிட்டுப் புடத்தைப் போடே. (487)

போடவே நொறுங்கியது தூளு மாகும்
போரான மதிதன்னிந் நூற்றுக் கொன்று
மாடவே மாற்றஃதே முறையே காணு
மகத்தான புடசெயந்தான் மாட்டிப் பாரு
பாடவே பணவெடைதான் தயிலத் துண்ணு
பண்பான சடந்தானுஞ் செம்பிநிற மாகும்
காடவே மதிக்காப்புக் கையி லிட்டாற்
காயத்தின் வேகத்தா லேம மாமே. (488)



## கருநெல்லிக் கற்பம்

ஏமமாங் கருநெல்லி மலைதோ றுமுண்டாம்
எளிதாகக் கிடையாட்டால் கறுப்புப் பண்ணி
நாமமாம் நாற்பதுநாள் பாலிற் கொள்ளு
நமன்வந்து நாடாம னடுங்கிப் போவான்
தாமமாஞ் சட்டையெல்லாங் கக்கிப் போகுந்
தங்கப்போல் மேனியுமாந் தளுக்குக் காணும்
ஆமமாங் கருநெல்லிப் போக்குச் சொல்ல
அரன்காணார் யான்தானுங் கண்டி லேனே. (489)

## கற்பூரவில்வக் கற்பம்

கண்டிலேன் கற்பூர வில்வந் தானுங்
கடிந்தரைத்துப் பாக்களவு பாலி லுண்ணு
அண்டில்லா வக்கினியைத் தான விக்கும்
அழுந்துகின்ற மேகமெல்லாஞ் சாடிப் போடும்
வண்டிலேன் வாதபித் தத்தை நீக்கும்
வாய்நீர்தான் மிகவூறல் வற்றிப் போதம்
வெண்டில்லா மேனிசர சரப்புப் போகும்
மிக்கான வெள்ளெழுத்து மீறி டாதே. (490)

## வில்வப்பூக் கற்பமும் வேதையும்

மீறிடாப் பூப்பறித்தே யிடித்துச் சாறு
மிகப்பிழிந்து கலசமதில் வைத்துக் கொண்டு
நாறிடாக் கெந்தகத்தைக் கரண்டிதனி லுருக்கி
நறுநெய்யாம் பன்றியுடை நெய்தான் குத்தித்
தாறிடாச் சாறதனில் முப்பத் தொன்று
சாய்க்கவே கெந்தகந்தான் கட்டிப் போகும்
பாறிடாப் பன்றிநெய்யை விட்ட ரைத்துப்
பாங்காக நாற்சாமம் பண்பாய் வாங்கே. (491)

வாங்கியே காசியென்ற மேருவிலே போட்டு
வளமாகக் குப்பிக்குக் கதம்பை வைத்துத்
தாங்கியே சட்டியினில் பொத்த விட்டுச்
சாங்கமாய்க் குப்பிநுனி தலைகீழாய் நிற்க
ஆங்கியே யடுப்பேற்றி யடுப்புக்குள் கிண்ணி
அகலமாய் வைத்துமேசட் டியில்தீப் போடு
தேங்கியே கிண்ணிக்குள் தயிலம் வீழுஞ்
சிறிப்பான மதித்தகட்டில் தேய்த்தி டாயே. (492)

தேய்த்துமே புடம்போட்டே யாறப் பார்த்தால்
சிவந்தெழுந்து பத்தரையா மேமந் தானுஞ்,
சாய்த்துமே தயிலத்தைப் பணவெடைதா னெடுத்துச்
சர்க்கரையில் கொண்டிடவே தாது விர்த்தி
மாய்த்துமே மன்நந்தனீன மாயந் தன்னில்
மருவாமல் மதியென்ற மண்டலத்தில் புக்குத்
தோய்த்துமே யமுதந்தான் தாரை யாகுஞ்
சோமப்பால் தனீயுண்ணிச் சோதி யாமே. (493)

## வில்வவயிர வேதை

சோதியா நூருண்டின் மரத்தைப் பார்த்துச்
சோதித்து வயிரமுண்டு வெட்டி வந்து
வீதியாய் மெல்லியதாய்த் தூளாய்ப் பண்ணி
மிக்கொழுந் திலைச்சாற்று லரைத்து மைபோல்
பாதியாய்க் குகைபோலப் பண்ணி ரண்டு
பருவமுடன்சுத்தித்த சூதம் வார்த்தே
ஆதியா யகலில்வைத்து மேலே மூடி
அசையாதே பத்தெருவில் புடத்தைப் போடே. (494)

போடவே சூதமது ஏம மாகும்
பிரித்திதனீ விற்றக்கால் பிரமை கொள்வார்
ஆடவே கம்பிபண்ணிக் குளிகை கோத்தே
அடையாள மாய்மார்பு தன்னிற் போடு
மாடவே மாற்றென்ன வைம்பத் தொன்று
மாத்திரைக்கோல் தனக்குத்தான் வனீயம் போடும்
காடவே குண்டலங்கை வனீயல் பண்ணு
கண்கொள்ளாச் சோதியது காண லாமே. (495)

## வில்வப்பழக் கற்பமும் வேதையும்

காணலா மென்றவில்வப் பழத்தைத் தேடிக்
கனமாகப் பொறுக்கியே சதையை வாங்கி
வேணலாம் வெய்யிலில்வைத் துலர்த்திக் கொண்டு
மிக்கான பூப்புடத்தில் தயிலம் வாங்கி
ஆணலாச் சூதத்தை அயத்தில் வைத்தங்
கதீதமாய்ச் சுருக்கிடவே கட்டிப்போகுந்
தோணலாய் முன்போல்செந் தூரம் பண்ணிச்
சுத்தமாந் தயிலத்தில் குழைத்தே யுண்ணே. (496)



உண்ணவே மண்டலத்தி னரையோ மாற்று
முகாந்தமெல்லாஞ் சடந்தானு முகந்து காணும்
பண்ணவே தயிலத்தில் நாகஞ் சாய்க்கப்
பாங்கான புகையைந்துங் கட்டிப் போகும்
அண்ணவே அயமுருகி யீய மாகும்
அறுபத்து நாலான பாடா ணந்தான்
தண்ணவே சாமத்தில் கட்டிப் போகுந்
தனித்ததோ ருபரசங்கள் சத்து மாமே. (497)

## ஜவணக்கற்பமும் வேதையும்

சத்தாக வைவணப்பூ த்தனீன வாங்கிச்
சமரசமாய்ச் சாறிடித்துப் பிழிந்து கொண்டு
பத்தாகச் சாதிலிங்கஞ் சுருக்குப் போடப்
பாங்கான புகைகட்டி மணியு மாகும்
அத்தாக வெடையிரண்டு அரப்பொடி யைச்
சேர்த்ததிகமாம் வெங்காரஞ் சிலையுங் கூட
நத்தாக நாலிலொன்று சேர்த்துக் கொண்டு
நமனுகும் பூச்சாற்றி லரைத்தி டாயே. (498)

அரைத்திட்டே யைந்துதர முருக்கிப் போடுங்
கதிகமா நாகம்போல் சத்து மாகும்
பரைத்திட்ட நாகத்தை நாலுக் கொன்று
பாங்காகக் கொடுத்திட்டா லுள்ளே கொள்ளும்
தரைத்திட்ட தங்கமிட்டுச் சூத மிட்டுத்
தனியான சிலைகாரங் கெந்தி கூட்டித்
திரைத்திட்ட சிந்தூரம் பண்ணிக் கொண்டு
சிறந்தநவ லோகத்தி லாயிரத்துக் கொன்றே. (499)

ஒன்றான சிந்தூரம் பணவெடைதான் தேனில்
உய்த்துமே மண்டலந்தான் கொண்டா யானுல்
குன்றான மலைபோலக் கைகை ளாகுங்
குத்தினுல் தவிடுபொடி கூழாங் கற்கள்
வென்றான சடமாகும் வாசி தானும்
விடுகாமல் கும்பிக்குஞ் சாமந் தானும்
பன்றான பருதிக்குள் ளோடும் போது
பாங்கான ரவிகாந்தி பனிப்போ லாமே. (500)

## அருஞ்சொற்பொருள்

### பா. எண் : 450 முதல் 500 வரை

பா. எண் : 452—தனு = உடல்; தளுக்கு = ஒளி.

பா. எண் : 453—ரசனை = சுவை.

பா. எண் : 455—கொழு = ஏரில் மாட்டியுள்ள இரும்புத்துண்டு.

பா. எண் : 456—அயிர் = துணுக்குகளாய்.

பா. எண் : 457—பற்பம் = ஏதாவதோர் பற்பத்தை.

பா. எண் : 458—தூலம் = பருமன்; நேரும் = கிடைக்கும்.

பா. எண் : 459—கரு = உட்பொருள்.

பா. எண் : 460—சுயம்பாட = தானே; பாலைவாக்காம் = இளைஞனுடைய குரல்போலாம்; கஞ்சமலர் = தாமரை; மலர்விழல் = புல்முதலான களையத்தக்க பொருள்.

பா. எண் : 461—நீலி = அவுரி; கின்னரம் = வீணை.

பா. எண் : 463—உரக்கும் = வலிமை பெறும்; நிருத்தம் = நடனம்

பா. எண் : 464—கொடிவேலி = சித்திரமூலம்; ஐங்கோலம் = அங்கோலம் ; அழிஞ்சில்; முட்பன்றி = முள்ளம் பன்றி.

பா. எண் : 466—சங்கத்துதுவளை = வெள்ளைத் துதுவளை குற்றமற்ற (சுத்திசெய்த).

பா. எண் : 468—இலை = வெள்ளைத் தூதுவளை இலை; பற்பம் = மேற்படி பாட்டில் கூறப்பட்ட சூத பற்பம் (குரு).

பா. எண் : 469—கால்நாழி = கால்நாழிகை (கடைக்குறை) ஆறு நிமிடங்கள்.

பா. எண் : 471—ஊணுக்கு = உண்ணும் பொருள்களுக்கு.

பா. எண் : 472 காந்தி = சூடு = உஷ்ணம்.

பா. எண் : 474—நற்குளத்திற் குளிரி = தாமரை.

பா. எண் : 477—கடு = கடுக்காய்த்தோல்.

பா. எண் : 479—அடுக்காறு = ஆருதாரங்கள்; அந்தரம் = விண்மீன்; நட்சத்திரம்.

பா. எண் : 481—உருண்டையாகும் = கட்டிப்யோகும்.

பா. எண் : 485—துருவு = துருவித் தொளை (போட்டு).



பா. எண் : 488—மதிக்காப்பு = வெள்ளிக்காப்பு.

பா. எண் : 492—கதம்பை = சிறு சிறுதுவாரமும் அவைகளின் மெல்லிய குதிரைவால் மயிர் சொருகப்பட்டும் உள்ளதானமூடி.

பா. எண் : 493—மதிமண்டலம் = ஆருதாரங்கள் கடந்து சிதாகாசத்தில் உள்ள சந்திரமண்டலம்.

பா. எண் : 495—மாத்திரைக்கோல் = மந்திரக்கோல். வளையம் = பூண் (தொடி). குண்டலம் = காதணி.

பா. எண் : 497—புகையைந்தும் = கந்தகம், தாளகம், வீரம், பூரம், இலிங்கம்.

பா. எண் : 498—நமன் = இயமன் = மடியச் செய்யும் தன்மையுடைய பொருள்; ஐவணம் = மருதோன்றி, அழவணம்.

பா. எண் : 500—பருதி = சூரிய மண்டலம். ரவிகாந்தி = சூரியனுடைய சூடு. பனிப்போலாம் = குளிர்ச்சியான பனி பெய்தது போல ஆகும்.

———

## மருதோன்றியிலைக் கற்பமும் வேதையும்

பனிப்போல மருதோன்றி யிலையி டித்துப்
பாங்கான கிட்டிகட்டிச் சாறு வாங்கித்
தனிப்போல மெருமையின்றன் சாணி தன்னைச்
சாங்கமாய்க் கிட்டிகட்டிச் சாறு வாங்கி
இனிப்போலா மிரண்டுபடி யொன்ருய்க் கலக்கி
யேற்றமாம் வெடியுப்புப் பலட நாலு
தினிப்போலாஞ் சீனமது பலமு நாலு
சிந்தாத கல்லுப்புப் பலமு நாலே. (501)

நாலாகப் பொடிபண்ணிச் சாற்றிற் கலக்கி
நலத்ததோர் காரீயம் பலந்தா னெட்டு
ஆலாக வயக்கரண்டி தனிலு ருக்கி
அதற்குள்ளே சாய்த்திடுவாய் சாறுவற் றுமட்டும்
போலாகப் புரட்டியேபகலிட்டுந் பெரும்பு டந்தான்
போட்டெடுத்துக் கல்வத்திற் கொட்டி மீண்டும்
மாலாக மருதோன்றி பிலைச் சாற்ரு லரைத்து
மாளுமட்டும் மூன்றுபுடம் போட்டி டாயே. (502)

போட்டெடுக்க மாதுளம்பூ நிறம தாகும்
 பேரான கற்கண்டில் பணவெடைதான் கொள்ளு
ஆட்டெடுக்க வருணநிறம் போலா மேனி
 ஆயிரத்துக் கொன்றிடவே பதிக மாற்றும்
நீட்டெடுத்த மேனியுமோ லேசாய்க் காணும்
 நிலையான வாசியெல்லா முள்ளே யாடும்
காட்டெடுத்த கைசிவந்து மருவிப் போச்சு
 கனகத்தைக் கண்டாலுங் கரியாய்ப் போமே. (503)

## பலாச கற்பம்

போகாமல் பலாசின்றன் கற்பங் கேளு
 புகழ்ந்தவேர்ப் பட்டையிலை காய்பூ வோடு
நோகாமல் நிழலுலர்த்தா யுலர்த்தி டித்து
 நெரிசாக வடிகட்டிச் சூரணமே செய்து
வேகாமல் வெள்ளாட்டுப் பாலிற் கொள்ளு
 விரைந்துமே மண்டலந்தான் கொண்டா யானல்
சாகாமலிருக் கலாஞ் சதுமுக கன்றன் படைப்புந்
 தகர்ந்துபோஞ் சமாதியினி லிருந்தி டாயே. (504)

## வெண்புரசுக் கற்பமும் வேதையும்

இருந்திட்ட வெண்புரசுப் பூவை வாங்கி
 இதமாகப் படிச்சாறு பிழிந்து கொண்டு
தருத்திட்ட தாளகந்தான் பலமு நாலு
 தாக்கான கற்சுண்ண நீரிற் போட்டுத்
துருத்திட்ட மூன்றுநா ளூற வைத்துச்
 சுப்பிரமாய்க் கழுவியே சுருக்குப் போடு
பொருந்திட்ட பூவரைத்துக் கவசங் கட்டிப்
 புரசுபட்டைச் சாம்டல்வைத் தழுத்தி டாயே. (505)

அழுத்தியே தீயெரிப்பாய் நாலு சாம
 மாறவிட்டுப் பார்த்தக்கால் சங்கம் போலாம்
பழுத்தியே பணவெடைதான் பாலிற் கொள்ளு
 பரிதிதன்னி னொளியாகுங் காயந் தானும்
நழுத்தியே நாற்பதுநாள் கொண்டா யானல்
 நாகங்கள் பலநஞ்சு நாடி மாது
தழுத்தியே சர்ப்பங்கள் கடித்திட் டக்கால்
 தனக்குதான் கேடென்றே நாடிச் சாமே. (506)



நாடியே நவலோகத் தீந்தா யானல்
 நாட்டமாய்ப் பதினைந்து மாற்று மாகுந்
தூடியே துரிசின்மேல் பொட்டுப் போட்டால்
 சுக்கான்போல் பொருமியே நீறு மாகும்
நீடியே யிந்நீற்றை இலிங்கம் மேலே
 லேபித்தால் முழுக்கட்டாம் வீரத் துக்கு
மாடியே லேபித்துப் புடத்தைப் போட
 மணிபோலே நின்றுமே யுருகும் பாரே. (507)

## பொற்கொன்றைக் கற்பமும் வேதையும்

பாரென்ற பொற்கொன்றைப் பூச்சாறு வாங்கிப்
 பாங்கான மனோசிலைக் குச்சுருக்கு போடு
நாரென்ற நாற்சாமஞ் சுருக்குப் போட
 நலமான பவழம்போ லிறுகிக் கட்டும்
நேரென்ற காரீய முருகும் போது
 நினைவாகக் காரத்தோ டீந்தா யானல்
ஓரென்று நொருங்கியே தூளாய்ப் போகும்
 ஓர்ந்திதற்கு நாலொன்று தங்கம் போடே. (508)

தங்கத்தி னெடைபோடு லிங்கந் தன்னை
 தங்கவெடை சுத்தித்த கெந்த கந்தான்
அங்கத்தின் கற்றாழஞ் சாற்றி லாட்டி
 அகலிலிட்டுப் புடம்போடக் களங்கு மாகும்
பங்கத்தின் ரவிமதியி லிருபதுக் கொன்றீயப்
 பாங்காத மாற்றேழு பரிந்து காணும்
வங்கத்தின் வேதையென்றால் புடசெ யந்தான்
 மறவாமல் மண்டலந்தான் பானத் துண்ணே. (509)

உண்ணவே லகரியஃ துள்ளே மீறி
 உற்றாறு தலமெல்லா முருவாய்த் தோற்றும்
வண்ணவே வாசிசற்று நழுகி டாது
 மறவாதே பகலிரவும் வாசி மாட்டுத்
துண்ணவே காமமென்ற பேயைத் தள்ளு
 சுகாதீதத் தனுபோகந் துன்னு நேசங்
கண்ணவே சொல்முறைகள் கருவைப் பாரு
 கலந்தோடித் திரிந்தக்கால் கசட றுச்சே. (510)

## வெள்ளை மந்தாரைப்பூக் கற்பமும் வேதையும்

ஆச்சென்ற வெள்ளைமந் தாரைப் பூவை
அமர்த்தியே யிடித்துத்தான் சாறெடுத்து
வேச்சென்ற வெள்ளைப்பா டாணத் துக்கு
மிடுக்காக நாற்சாமஞ் சுருக்குப் போடு
பூச்சென்ற பூவரைத்துக் கவசங் கட்டிப்
புளிப்புறணிச் சாட்பலுக்குள் பொருந்த வைத்து
நாச்சென்ற நாற்சாமங் கமலத் தீயால்
நாடியே யெரியிட்டு நலமாய் வாங்கே. (511)

நலமாக வாங்கியே ரவியி லிய
நலமான மாற்றதுதான் பத்து வெள்ளி
பிலமாக வீய்த்துக் கசைந்தி டாது
பேணிப்பார் லகுவான வித்தை யாகும்
வலமாக மந்தாரை வெள்ளைப் பூவை
வாங்கியே நிழலுலர்த்தி யிடித்துத் தூளாய்க்
குலமாக வெருகடிதூள் தேனிற் கொள்ளக்
குட்டமது பதினெட்டு மோடிப் போமே. (512)

## வெள்ளை நீர்முள்ளிக் கற்பமும் வேதையும்

ஓடியே வெள்ளைநீர் முள்ளி தன்னை
யுற்றவிலை யரைத்துப்பாக் களவு பாலில்
மாடியே மண்டலந்தான் கொண்டா யானல்
மாசற்ற மதிபோல முகமு மாகுந்
தேடியே காமத்திற் சிதைய வேண்டாஞ்
சிவயோக மார்க்கத்திற் சிந்தை யுன்னு
காடியே பெண்மாயை தன்னிற் கண்ட
காரணத்தை நினைவிலுன்னிக் கருத்தாய்ப் பாரே. (513)

கருவான நீர்முள்ளிச் சாறு வாங்கிக்
கரண்டிதனில் ரசம்விட்டுச் சுருக்குப் போட
நெருவான நீர்வற்றிக் கட்டி யாகும்
நிலவரமாய்ச் சூடன்றன் தீயில் வாட்டி
உருவான குகைதன்னி லுருக்கிக் கொண்டங்
குகந்துமே நாவிலொன்று தங்கங் கூட்டு
தருவான தங்கவெடை நாகம் போட்டுத்
தகர்த்துமே கல்வத்திற் பொடியாய்ப் பண்ணே. (514)



பொடியான மருந்துக்குப் பாதி கெந்தி
பொடித்துமே யோடுதனி லுருக்கிக் கொண்டு
தடியான தயிலத்திற் பொடியைப் போட்டுச்
சமர்த்தாக வறுத்திடுவாய் சூரி யாலே
கடியான கரிபோலத் தூளு மாகுங்
கலக்கிதற்குள் மனோசிலையுங் காரந் தானும்
பிடியான பொடிபண்ணி மேருக் கேற்றிப்
பெரிதான வாலுகையி லெரித்தி டாயே. (515)

எரித்திட்டால் செந்தூரம் பவளம் போலாம்
இதமான வெள்ளைநீர் முள்ளி தன்னைப்
பரித்திட்டா லிலையரைத்துப் பாக்க ளவுதான்
பாலிலே மிகக்கரைத்துப் பருகிட் டக்கால்
அரித்திட்டால் நரையெல்லா மாறிப் போகு
நாதாந்தப் பெருவெளியி லுட்டங் கூடும்
உரித்திட்டா லொன்பதிலும் நூற்றுக் கோடும்
உயர்ந்திட்ட மாற்றுருகு முண்மை தானே. (516)

உண்மையாய்ச் செம்படித்துத் தகடு தட்டி
உறுதிநீர் முள்ளியிலைச் சாற்றில் தோய்ப்பாய்
பண்மையாய்ச் சதிஞெருக்கால் தோய்த்தா யானல்
பட்டைவிட்டு செம்பெல்லா நொருங்கிப் போகும்,
கண்மையாய்க் கல்வத்தி யரைத்துக் கட்டிக்
காசுபோல் வில்லைதட்டிக் காயப் போட்டு
விண்மையாய் மூன்றுதர முலர்த்திச் சாறு
விட்டரைத்து ரவிதன்னில் காயப் போடே. (517)

காய்ந்தபின் பிலையரைத்துக் கவசங் கட்டிக்
கனக்கவே புடம்போடக் கட்டி நீறும்
தாய்ந்தபின் யெடைக்கெடைதான் சூதஞ் சேர்த்துத்
தாக்கான வாய்நீரில் மத்தித் தேதான்
வேய்ந்தபின்பு வெய்யிலில் வைகடிகை தானும்
வெண்ணீருப் பொருமியே விரிந்து போகும்
நாய்ந்தபின்பு வீசமெடை பாலி லுண்ணு
நாற்பதுநாள் மறவாம லுண்டி டாயே. (518)

மறவாமல் மதிதனிலே யீந்தா யானல்
மாசற்றுத் தங்கமுமா யிரத்துக் கோடும்
பறவாமல் சூதத்தைக் கவ்விக் கொல்லும்
பாடான மென்றதெல்லாம் படுதீப் பற்றுந்
துறவாமல் வாழையென்ற பழத்தை வாங்கித்
துரும்பால்தொட் டப்பழத்தைக் கீறி வைக்க
அறவாமற் சாமந்தான் கழித்துப் பார்க்க
வழுந்தியது பச்சைக்கா யாகும் பாரே. (519)

பாரென்ற காய் தன்னைத் தோலைச் சீவிப்
பக்குவமாய்ச் சமைத்துண் ண அன்னத் தோடே
காரென்ற காயந்தான் தளர்ந்த தெல்லாங்
கதித்திறுகிப் பதினாறு வயது மாகும்
கூரென்ற குருவாலே சூதங் கட்டிக்
கொடிதான சாரணை தான் தீர்த்துக் கொண்டே
ஆரென்ற வண்டரண்ட கடாகங் கள்பார்த்து
ஆராய்ந்தே யடுக்குகள் சோ திக்குங் காணே. (520)

### அருணன் வியர்வையில் தோன்றிய மூலிகைகள்

காணவே சிவப்புச்சித் திரமூ லந்தான்
கருவருணன் ரதந்தன்னை யூரும் போது
வேணவே வேர்வைதான் நிலத்திற் சிந்தி
மிக்ககடு மூலிகைதான் நாலு சாதி
அணவே சிவப்பா மார்க்கத் தோடே
யனலான வெள்ளெருக் கிரத்தக் கள்ளி
ஊணவே யிவைநாலு முற்பத்தி யாயிற்று
உதிகடு மூலிகைதா னுசத்தி தானே. (521)

### சிவப்புச் சித்திரமூலக் கற்பமும், வேதையும்

உசத்தியாஞ் சிவப்புச்சித் திரமூலந் தன்னை
யுருகிடித்துப் பஞ்சாக வைத்துக் கொண்டு
கசத்தியாங் காரீயஞ் சட்டியிலே போட்டுக்
கலரிதற்குள் பதினாறுக் கொன்றி னங்கன்
தசத்தியாஞ் சட்டியிலே யுருக்கிக் கொண்டு
தாக்கிடுவாய் வெடியுப்பு முன்னே தானுங்
குசத்தியா மாதொண்டைக் கழியி னாலே
குத்தியே கடைந்திடுவாய் குறிப்பாய்த் தானே. (522)



தானென்ற சிவப்புச்சித் திரமூலந் தன்னைத்
தயங்காமல் போட்டுமே கழியால் கிண்டு
நானென்ற விட்டடிதா னுவு சாமம்
நலமான வாதொண்டைக் கழியால் மத்தி
தேனென்ற சிந்தூரம் ரவிதான் தோற்குஞ்
சிறப்பாகக் கைமுறையாய்ச் செய்து பாரு
ஆனென்ற சிந்தூரமா யிரத்துங் கோடும்
ஆயியவள் நெற்றிதனிற் பொட்டு மாச்சே. (523)

ஆச்சுதே மண்டலந்தான் வீசமெடை தூக்கி
ஆவின்னெய் தனிலுண்ண வாண்மை மெத்த
ஏச்சுதே யிடிவிழுந்தால் சடத்தின் மேலே
எழும்பியே பந்துபோ லப்பால் வீழும்
போச்சுதே யாகாச கமன மோடில்
பொளிச்சென்று மின்னலுடை யொளிபோல் காணும்
காச்சுதே வாதமடம் வங்கக் கம்பங்
கட்டுதற்கு மதயானை சூத மாச்சே. (524)

சூதத்தை வங்கமென்ற மரத்திற் கட்டித்
துப்புரவாய்ப் பறியான விலங்கை மாட்டித்
தீதற்ற கெந்தகத்தைத் தீனி யூட்டி
சிறப்பாகப் பலகாயஞ் சிலையுங் காரம்
வேதத்தை வெள்ளியென்ற குடிசில் சென்று
விடுபட்டுப் பத்துமாய் வெளிக்கே சென்று
காதத்தைக் கடையினிற் சென்றேறி விற்றுக்
கனமான சிவசொத்தை நீந்திட் டாரே. (525)

நீத்திட்ட விரத்தவபா மார்க்கந் தன்னை
நிச்சயித்துப் பாக்களவு பாலி லுண்ணு
தேத்திட்ட செழுங்கஞ்சம் போலாந் தேகஞ்
சிதையாதங் கிடிகொண்ட பஞ்சு சுமையாம்
நாத்திட்ட நாகத்தை யிலுப்பை நெய்குத்தி
நலமாகச் சாய்த்திடுவா யைம்பத் தொன்று
வேத்திட்ட வெங்காரஞ் சாரஞ் சேர்த்து
மிஞ்சாமல் பொடிபண்ணி மேலே தூவே. (526)

தூவியே சொன்னபடி சாய்த்திட் டக்கால்
துத்தநா கந்தானுஞ் செம்பு மாகும்
ஆவியே போகாமல் சிந்தூரித் துண்ண
ஆயிரமா மாற்ருகு முன்தே கந்தான்
கூவியே திரியாதே யொருவ ரோடுங்
குறிகெட்டா னென்றுசொல்லிக் குழைத்து பேசு
சாவியே பித்தன்போல் சமாதிக் குள்ளே
தனித்துமே மவுனத்தைத் தாக்கி டாயே. (537)

### வெள்ளெருக்கு வேதை

தாக்கிட்ட வெள்ளெருக்குப் புட்பந் தன்னைச்
சமர்த்தாக விடித்துமே சாறு வாங்கு
பாக்கிட்ட பால்வேறே வைத்துக் கொண்டு
பாடாணந் தனக்குத்தான் சுருக்குப் போடு
வீக்கிட்ட பாலோடு சாறு தானு
மிகமாறி மாறியே விரைந்து போடு
தூக்கிட்ட விதையரைத்துக் கவசங் கட்டிச்
சுத்தமாய் வேரரைக்கப் பழுப்புச் சாறே. (528)

சாற்றினல் வேரரைத்துக் குகைபோற் பண்ணி ந்
தாங்கியே கவசத்தை யதற்குள் வைத்து
மாற்றினல் மேல்மூடி மண்ணைச் செய்து
மகத்தான கெசபுடமாய் மருவப் போடு
தேற்றினல் பாடாணங் கட்டி யாகச்
சிறந்துநிற்குங் குகையில் வெள்ளிய முருக்கித்
தாற்றினல் சமனுகப் பாட ணமீந்தால்
சமரசமா யுருகியொன்றுய்த் தகர்ந்து போமே. (529)

தகர்ந்துநின்ற வெடைக்கயப் பொடியைக் கூட்டிச்
சாங்கமாய்க் காரமிட்டு ருக்கி யாட்டி
மகர்ந்துநின்ற மத்தானு மதற்கு நேராய்
மாட்டியே யுருக்கியபின் கல்வத் திட்டுப்
புகர்ந்துநின்ற பொடியாக்கிச் சூதங் கூட்டிப்
புகழான காரம்வெள்ளைப் பாடா ணந்தான்
முகர்ந்துநின்ற பொடிக்குக்கால் வாசி கூட்டி
மூர்க்கமாம் பால்விட்டே யரைத்தி டாயே. (530)



அரைத்துமே வில்லைகட்டிக் காயப் போட்டங்
காதியாம் பூநீற்றுக் குள்ளே வைத்து
நரைத்துமே நாற்சாமங் கமலம் போல
நலமாக வெரியிடவே களங்க தாகும்
பொருத்திட்டி ரவிதன்னி லைம்பதுக் கொன்று
பொருந்தவே கொடுத்தக்கால் மதியு மாகும்
மறைத்திட்ட ரசிதமல்ல சீன வெள்ளி
மாயிசொல்லச் சீனருமே மகிழ்கின் ருரே. (531)

### இரத்தக்கள்ளிக் கற்பமும் வேதையும்

மகிழ்கின்ற ரத்தமாங் கள்ளி தன்னை
மண்தோண்டி யதன்வேரை வளைய வெட்டி
நெகிழ்கின்ற கலம்வைத்து வெட்டு வாயில்
நிசமான துரிசிகுரு பணவெடைதான் பூதி
துகிழ்கின்ற கலயத்தில் மண்வி ழாமல்
துப்புரவாய் மேல்மூடித் தூரத் தானும்
எகிழ்கின்ற வரகுவைக்கோல் கொளுத்திப் போட
வேற்றமாம் ரசமெல்லா மிறங்கிப் போமே. (532)

இறங்கியதோர் பால்தானுந் தண்ணீர் போல
விழுந்திடுமே பீங்கானி லெடுத்து வைத்து
மறுங்கியதோர் மண்டலந்தா னுண்ட பின்பு
மகத்தான வமுரிதனி லுலோகம் போட்டால்
பறங்கியதோர் மாற்றதுவும் பன்னி ரெண்டாம்
பாங்கான வமுரிதனி லெல்லாங் கட்டுந்
தறங்கியதோர் பால்தன்னில் தங்க நாகத்
தாதுவகை வுபரசங்கள் செம்பு மாமே. (533)

### கருந்துளசிக் கற்பமும் வேதையும்

செம்பான கருந்துளசி யிலையை ரைத்துச்
சிறப்பான பாக்களவு தேனி லுண்ணு
கம்பான காயந்தான் கற்றா ணுகுங்
கனமான மூச்சாடு முள்ளுக் குள்ளே
வம்பான சுக்கிலந்தான் கீழோ டாது
மதியென்ற சந்திரனில் வாசி யூதங்
கம்பான வருவிபோ லமுதந் தானு
மண்ணுக்கில் விழுந்ததை நீயருந்து வாயே. (534)

அருந்தவே யிலைச்சாற்றில் சூதந் தன்னை
யரைக்கவே வெண்ணையாங் கிழிபோல் கட்டித்
திருந்தவே படிச்சாற்றில் சுருக்குப் போடு
சிதறுமல் சூடன்றன் தீயில் வாட்டு
அருந்தவே குகையில்வைத் துருக்க வாடு
மதற்கொக்கக் கால்வாசித் தங்க மூட்டு
நருந்தவே கால்வாசி நாக மூட்டு
நயந்தபொடி சரிக்குத்தான் கெந்தி கூட்டே. (535)

கூட்டியே கருந்துளசிற் சாறு விட்டுக்
குலாவியே வெங்காரஞ் சிலையுங் கூட்டிப்
பூட்டியே பொடிபண்ணி மேருக் கேற்றிப்
புகழான வாலுகைவைத் தெரித்த பின்னர்
ஆட்டியே யாறவிட்டெ டுத்துக் கொண்டங்
காயிரத்துக் கொன்றிடவே யதிக வேதை
நாட்டியே நவலோகத் தீந்தா யானல்
நலமாகப் பதினறு மாற்று மாமே. (536)

## குழல் ஆதொண்டைக் கற்பமும் வேதையும்

மாத்தான வெண்குழலா தொண்டை தன்னில்
மண்வெட்டிக் கலசத்தி லெண்ணெய் வைத்தே
ஏத்தான வேரண்டத் தெண்ணெ யாகும்
மிதமாகத் தோண்டிவே ரண்டை வைக்கக்
கோத்தான கொதித்துமே யெண்ணெய் தானுங்
குமிளிவிடும் பக்குவத்தில் கொண்டு வந்து
காத்தான காசெடையாய்க் கொள்ள வேதான்
கடிசான கட்டியெல்லாங் கரைந்து போமே. (537)

போமென்ற விலைதானும் பொன்னின் நிறமாகும்
புகழ்கொம்புக் கொறுக்கையினற் குழல்போல் காணும்
வேமென்ற வேரதுவுஞ் சிவப்பு மாகு
மிக்கான காய்பழந்தான் வெளுப்பு மாகுங்
காமென்ற கப்பதுவும் பச்சை யாகுங்
கண்டிந்தக் குணங்குழலா தொண்டை யாகுஞ்
சாமென்ற திகைக்கண்டா லொருநா ளுமில்லை
சமத்தான பேரென்ருல் கிட்டும் பாரே. (538)



கிட்டுமே யிலைபறித்துப் பொடியாய்ப் பண்ணிக்
கிளர்ந்தெழுந்த மண்டலந்தான் தேனில் கொள்ளு
அட்டமா சித்தியெல்லா மாட லாகு
மதிகமாய்ச் சந்திரனி லோடும் பே து
குட்டுமே குளிர்ச்சியில்லை வெதுப்பு மில்லை
குறுகிநின்ற சந்திரனே டடுத்துப் பேசித்
துட்டுமே சோமனென்ற குளிகை வாங்கு
சொன்னமா மாரியென்ற துன்னிடத்தி லாமே. (539)

ஆம்வெண்டு தணைவெட்டிச் சாண்தா னீள
அடித்துண்டில் சூதம்விட் டடைக்கக் கேளு
ஊம்ஊசிக் காந்தத்தை வெண்கருவா லாட்டி
யுதுட்டியா யிருபுறமு மடைத்துப் போடு
ஏமென்ற விலைதன்னை யெலுமிச்சம் பழத்தா
லிழுத்தரைத்த தின்மேலே கவசங் கட்டி
நாம்நாற்ப தெருவடுக்கிப் புடத்தைப் போட
நாகம்போல் சூதமது கட்டி யாமே. (540)

கட்டியாஞ் சூதத்தில் சாரணையே செய்தால்
கடுவேக மதியளவு கண்டு மீளும்
ஓட்டினல் சிந்தூர மாயிரத்துக் கோடு
முறுதியாய் முன்பேற்சிந் தூரம் பண்ணு
திட்டியாய் மண்டலந்தான் தேனி லுண்ணு
சிறிதாகச் சட்டைகக்கிச் சிவப்பு மாகுந்
துட்டினல் தொந்தித்தா னுறுதொந்த மேறுஞ்
சொல்லவரி தாதொண்டைச் சூட்சந் தானே. (541)

## கருவீழிக் கற்பம்

சொல்லான கருவீழி மலைதோ றுமுண்டு
சூட்சமாய்ச் சாறுபடி துவைத்து வாங்கி
மல்லான நாகத்தை யுருக்கிச் சாய்க்க
மாசற்றுக் கண்விட்டு மறுகும் பாரு
வெல்லான தங்கமிட்டுச் சூத மிட்டு
மிடுக்கான சிலைகெத்தி வீரங் காரம்
நல்லான நாகத்தி லொன்று கூட்டி
நறுக்கியே நல்வேளைச் சாற்றி லாட்டே. (542)

ஆட்டியே வில்லைகட்டி யகலி லிட்டங்
கசகாமல் மூடியே சீலை செய்து
கூட்டியே கெசபுடமாய்ப் போட்டெ டுக்கக்
கொடியான மாதளம்பூ நிறம தாகும்
வீட்டியே வீசமெடை விழுதியினி லுண்ணு
மேருவெங்குஞ் சுற்றுதற்கு மேனி திடமாகும்
பூட்டியே யடுக்காறும் புகுந்து வந்து
பொன்மலையில் பூரணத்தில் புக்க லாமே. (543)

புக்கவே கருவீழி தனைய ரைத்துப்
பொருந்தவே பாக்களவு பாலில் கொள்ளு
தக்கவே யுகாந்தவரைச் சடந்தா னிற்குஞ்
சமாதிக்கு ளிருக்கையிலே மூச்சா டாது
பக்கவே பதினாறு வயது மாகும்
பாலையா முன்தேகஞ் சாவு போச்சு
நிக்கவே நிலையாறு தலங்க ளெல்லாம்
நிச்சயமாய் நினைவுறைக்கு மறிவு மாமே. (544)

## போகர் பசுவுக்கு உபதேசித்தல்

அறிவுண்டாய்ச் சுரபிசன்மா ரண்ணி யத்தி
ஆயன்தான் மேய்கின்ற காலந் தன்னில்
நெறியுண்டாய்ப் புலியோன்றங் காவின் மேலே
நீச்சாகப் பாய்ந்திடவே யாவு தப்பி
மறியுண்டாய் மலைமுழைஞ்சில் புகுந்து போச்சு
மடையனு மிடையன்தான் மாட்டைத் தேடில்
வெறியனுய்த் தேடிவிட்டுக் காணு மற்றுன்
மீண்டுவந்து மனஞ்சலிப்பாய் விரைந்திட் டானே. (545)

விரைந்தபின் பாவுக்குப் புல்லில் லாமல்
வீழியென்ற விலைதன்னைத் தின்று கொண்டு
அரைந்தபின் பனேகநாள் புசிக்கும் போதங்
காவுக்குப் புலிப்பாயி லப்போ தானும்
முரைந்தபின் பூமூன்றுதிங்கள் வயிற்றில் கர்ப்ப
மூர்க்கமா யிலையதுதின் றேழு மாதங்
கரைந்தபின்பு கன்றீன்று பெரிய தாகிக்
கறுப்பான வீழியிலை தின்னும் பாரே. (546)



தின்னுமே யுகாந்த வரைச் சடமி ருக்கில்
சிறப்பான மூலிகையால் சித்தி யாச்சு
தென்னுமே யிப்பப டியா யிருக்கும் போதங்
கேகமாய்நா ளெருநாளி லைக்குப் போந்தேன்
கண்ணுமே கருவீழி தன்னைப்ப றிக்கில்
கருதியேதாய் பிள்ளையி ரண்டும் வந்தே
அண்ணியே யென்னைமோந் தடியி னிற்க
வாதரவா யனுபூதி யுரைத்திட் டேனே. (547)

உரைத்திடவே வாய்பேசி பூர்வ சரிதை
உரைக்கலுமே மனமகிழ்ந்து தாய்பிள் ளைக்கும்
புரைத்திடவே பூரணத்தின் விலாசஞ் சொல்லிப்
பிரமநிட்டை யோகத்தைப் போதித் தேனு
திரைத்திடவே திண்ணமிகு மாசு தானும்
திருந்தியுமே காயமது தூயதாகும்
மிரைத்திடவே யோகத்தி னின்று தேறி
நிலையான காயசித்தி யோகசித்தி யாச்சே. (548)

யோகசித்தி காயசித்தி பண்ணிக் கொண்டங்
குற்றபசி யடக்குதற்கு வீழி யாகும்
தாகசித்தி சுனைத்தண்ணீர் தனைக்கு டித்துத்
தன்முலைப்பால் தன்னையே கன்றுக் கீந்தே
ஆகசித்தி யனேகமாங் கோடி கால
மடுக்கான மலைமுழைஞ்சில் புக்கு நின்று
காகசித்தி போற்பறந்து சாம தேனுய்க்
கற்பாந்தந் தாய்பிள்ளை யிருந்திட் டாரே. (549)

இருந்திட்ட படியாலே கறுத்த வீழி
யேற்றமா மலைதனிலே யிருக்கு மெத்த
கருந்திட்ட கருவீழி கொண்டு தானுங்
கடியதோ ரண்டமெல்லாஞ் சோதித் தேன்யான்
பருந்திட்ட கருவீழி பாட்டர் கொண்டார்
பயின்றெடுத்த காலாங்கி பருகித் தின்றுர்
உருத்திட்ட கருவீழி யுயர்த்தி மெத்த
உயர்த்தியாம் மூலியெல்லா முரைக்கக் கேளே. (550)

## அருஞ்சொற்பொருள்

**பா. எண் : 501 முதல் 550 வரை**

பா. எண் : 506—சங்கம் = சங்கு (வெண்மை)

பா. எண் : 515—சூரி = கத்தி.

பா. எண் : 516—ஒன்பதிலும் = ஒன்பது உலோகங்களின் கூட்டில் (தங்கம், வெள்ளி, செம்பு, நாகம், கருவங்கம், வெள்வங்கம், இரும்பு, உருக்கு, வெண்கலம்) இதையே நவலோகமென்றும் கூறுவர்.

பா. எண் : 519—பறவாமல் = விரைந்து போகமல் கவ்வி = கட்டி; கொல்லும் = மடித்திடும்.

பா. எண் : 520—அருணன் = சூரியன்

பா. எண் : 521—கடுமூலிகை = காரமானமூலிகை; சிவப்பபா மார்க்கம் = செந்நாயுருவி (சிவப்பு + அபா).

பா. எண் : 522—இணங்கன் = வெடியுப்பு

பா. எண் : 523—மத்தி = கடைவாயாக.

பா. எண் : 524—காலும் = காயும்.

பா. எண் : 525—பறி = தங்கம்; தீதற்ற = சுத்மாக்கப் பட்ட; தீனி = உணவு; குடிசில் = குடில்; சிவசொத்து = தீ (பசித்தீயைக் குறிக்கும் நீத்திட்டார் = தீர்த்துக் கொண்டார்.

பா. எண் : 526—செழுங்கஞ்சம் = செழித்த தாமரை; இ த்த அபாமார்க்கம் = செந்நாயுருவி;

பா. எண் : 527—தாக்கிடாயே = (வலித்தல்) தாங்கிடாயே.

பா. எண் : 529—தகர்ந்துபோம் = வெட்டையாகி உடைந்து போகும்.

பா. எண் : 530—மதி = வெள்ளி; நேராய் = சமமாய்.

பா. எண் : 531—இரவி = தாம்பிராம்; ரசிதம் = வெள்ளி.

பா. எண் : 532—கலம் வைத்து = (மண்) பாத்திரம் வைத்து = துரிசுகுரு = மயில் துத்தக் குருபற்பம்; துட்புரவு = தூய்மை; ரசம் = மது.

பா. எண் : 534—அண்ணுக்கு = அண்ணம் வாயின் = உட்புறமேற் பகுதி.

பா. எண் : 535—சூடன் = கற்பூரம்; கால்வாசி = கால் பங்கு.



பா. எண் : 537—மாத்தான = பெருமை பொருந்திய (மகத்தான); ஏரண்டம் = சிற்ரு மணக்கு; குமிளி = குமிழி (இது ஓர் நீர்ப்பொருள் கொதிக்கும்போது தோன்றும்). கடிசான = மிக்க கஷ்ட சாத்திய மான;

பா. எண் 538—கொறுக்கை = நாணல்தட்டு; கப்பு = கிளை; சாமென்றது = இப்போம் (சாக்காடு) என்பது.

பா. எண் : 540—வெண்டு = குழலாதொண்டை; உதுட்டி = வலிவு

பா. எண் : 542—துவைத்த = இடித்து

பா. எண் : 543—பொன்மலை = சகஸ்ராரம் (குருபாதம்).

பா. எண் : 545—ஆயன் = இடையன் முழைஞ்சு = (முழை) குகை; மனம் சலிப்பாய் = மன வெறுப்புடன்.

பா. எண் : 547—போந்தேன் = வந்தேன்; அண்ணியே = நெருங்கியே.

பா. எண் : 548—பூர்வசரிதை = பழைய வரலாறு; பிரம நிட்டை யோகம் = நீட்கள சமாதி யோகம்.

பா. எண் : 550—பாட்டர் = தாதை (தாத்தா); பருகித்தின்ருர் = (ஒருசொல் நீர்மைத்து) உண்டார் என்பது பொருள்.

---

## கற்ப மூலிகைகள்

கேளென்ற கருநெல்லி கருத்த நொச்சி
கெடியான கருவீழி கருத்த வாழை
காளென்ற கரியகரி சாலை யோடு
கருப்பான நீலியொடு கரிய வேலி
கோளென்ற கருமத்தைத் தீபச் சோதி
கொடுதிரணச் சோதிசாயா விருட்சம்
ஏளென்ற வெருமைகணைச்சான் ரோம விருட்ச
மேற்றமாஞ் சுணங்க விருட்சஞ் செந்திரா. (551)

செந்திராய் செங்கன்னி செம்மல்லி யோடு
சிவந்தகற் ருழைசெஞ் சித்திர மூலம்
நந்திராய் சிவப்பபா மார்க்கத் தோடு
நலமான கற்பிரமி கற்சேம் பாகும்
பந்திராய் கல்லுத்தா மரையி னேடு
பாய்ந்தகுடி லாதொண்டை மகாபொற் சீந்தில்
வெந்திராய் வெண்புரசு வெள்ளைத் துத்தி
மிகுவெள்ளைத் தூதுவளை மிடுக்கு மாமே. (552)

மிடுக்கான குண்டலமாம் பாலை யோடு
வெள்ளை நீர் முள்ளிவெண் விண்டுக் காந்தி
கடுக்கான வெண்கண்டங் காரி யோடு
கசப்பான பசலையொடு மதுர வேம்பு
கிடுக்கான கிளிமூக்குத் துவரையழு கண்ணி
கெடியான பொன்மத்தை மதுரக் கோவை
யடுக்கான பொன்வன்னச் சாலி யோடு
பாங்கான கருந்தும்பை மதனத் தண்டே. (553)

தண்டோடு மூவிலையாங் குருந்து மாகுந்
தணலான சிவத்ததில்லை கருத்த வேம்பு
இண்டோடே யிவ்வுகைகள் நாற்பத் தைந்து
மேற்றமா மலைகளிலே மிகுதி யுண்டு
பண்டோடு பாடாண மறுபத்து நாலும்
பட்டுட்னே கட்டுண்டு படுதீப் பற்றும்
துண்டோடு சூதமது கட்டு மாகுஞ்
சுயம்பான வுபரசங்கள் சத்து மாமே. (554)

சத்தான மூலிகையில் சுருக்குச் சித்தி
சாப்பிட்டால் மண்டலந்தான் சாவோ இல்லை
மத்தான மன்மதன்போல் தேக மாகு
மாசற்று நரைதிரைக ளெல்லாம் மாறும்
எத்தான வாசியெல்லா மிறுகிப் போகு
மேறலாங் ககனத்தி லேற்ற மாக
அத்தான வடுக்கெல்லாஞ் சோதித் தேறி
யண்டரண்ட பதமெல்லா மறிய லாமே. (555)

## அண்ட கற்பம்

அறியவே யண்டத்தின் கற்பங் கேளு
ஆர்க்கமாங் கருங்கோழிச் சேவலுடன் பேடு
வறியவே வளர்த்தந்த முட்டை வாங்கி
மாசற்ற கல்லுப்பைப் பொடியாய்ப் பண்ணிப்
பறியவே பாண்டத்திற் பாதி போட்டுப்
பதித்துமே முட்டையைத்தான் மேலும் போட்டு
கெறியவே யாகாயக் கெருட னை
கிழங்கின்நீர் படிவிட்டு மூடிப் போடே. (556)



மூடியே யிருபதுநாள் கழித்த பின்பு
முசியாம லெடுத்துப்பார் கட்டிப் போகும்
ஓடியே யொவ்வொன்று கிழங்குச் சாற்றி
லூறப்போட்டு நீர்வற்றக் காய்ச்சிக் கொண்டு
தேடியே மேலோடு தள்ளிப் போட்டுச்
சிறப்பாக விரண்டாக்கிப் பாதி கொள்ளு
ஆடியே யந்திசந்தி மண்ட லந்தா
அன்றுட மன்றுட மவித்துக் கொள்ளே. (557)

கொள்ளவே மண்டலந்தா னந்தி சந்தி
குத்தினல் காயத்தில் தைத்தி டாது
கள்ளேவ கருங்கல்லாஞ் சடலந் தானுங்
கற்பாந்த காலந்தான் மசக மாச்சு
துள்ளவே நித்திரைதான் கொள்ளொட் டாது
சோபமில்லை தாபமில்லை துர்ப்பசியும் போச்சு
விள்ளவே சுக்கிலந்தான் கீழோ டாது
வேண்டியதோர் பெண்ணோடே மருவ லாமே. (558)

## மூலிகைகளுக்குக் கருப்பேற்றும் செய்ல்முறை

மருவவே கறுப்பான மூலி தன்னை
வைக்கிறதோர் முறையினது வண்மை கேளு
கருவவே கரம்பைமண்தா னரையளவு விட்டுக்
கதித்துநன்றுப் பரப்பியே பாத்திக் கட்டித்
திருவவே சேங்கொட்டை முழவுயரம் போட்டுச்
சிறப்பாக வெட்டிவிட்டால் மூன்று திங்கள்
அருவவே முழுக்கொட்டை யாறு திங்க
ளதும்பாமல் விட்டுவா தண்ணீர் தானே. (559)

தானுன சேங்கொட்டை யழுகும் பின்பு
தண்ணீரை விடாமல்தான் காயப் போடு
பானுன பத்துநாள் காய்ந்த பின்பு
பாங்காகக் கொத்தியே யாறப் போட்டு
வானுன பாத்தியெல்லாம் வரிசை யாக்கி
வைக்கின்ற மூலிகைதான் கரிய சாலை
தேனுன கரந்தைசெருப் படியு மோமஞ்
செப்பரிய வல்லரை நீலி தானே. (560)

தானுன கருவீழி கருத்த வாழை
தாக்கான கருநெல்லி கருத்த நொச்சி
கானுன கருவேம்பு கருத்த வேலி
கருத்தமணித் தக்காளி கருவூ மத்தை
பானுன வறுகீரை கருங் கடுக்காய்
பண்டாகக் கஞ்சாவு மற்று மூலி
வேனுன வேர்விதைகள் கொடிகள் கொம்பு
விதித்துவைத்துக் காய்த்தபின்பு விதையை வாங்கே. (561)

வாங்கியே முன்போல்சேங் கொட்டை போட்டு
வருக்கின்ற போதுதானி ரண்டிடத்தே போடு
வேங்கியே விதைதெளித்துப் பயிருண் டாக்கி
விதைமுதிர்ந்த பின்புமறு விடத்திற் போடு
தேங்கியே கருஞ்சத்து கூடி வந்து
திறமாக பூதத்தின் அணுவும் சேர
தாங்கியே நாலுதரம் போட்டுத் தீர்ந்தால்
சமரசமாய் முழுக்கருப்ப தாகும் பாரே. (562)

பாரென்ற பாரமாம் விருட்சத்துக் கெல்லாம்
பாங்காகக் குழிவெட்டி யாளுயரம் போடு
மூரென்ற முதல்தரமா மூலிகையைக் கொள்ளு
முதிர்ந்தே பின் பிரண்டான மூலிகையைக் கொள்ளு
தாரென்ற மூன்றுன மூலிகையைக் கொள்ளு
தண்மையாய் முழுக்கருப்புப் பின்னே கொள்ளு
நாரென்ற நரைதிரைகள் மாறிப் போகும்
நலமான பரீட்சையது பார்த்துக் கொள்ளே. (563)

## கருப்புப் பரீட்சை

பார்த்துமே கொக்கிறகு தன்னில் தானும்
பரிவான இலைச்சாறு மூன்றுதரந் தடவி
வேர்த்துமே வெய்யிலிலே போட்டு வைக்க
மிக்கான காகத்தின் நிறமே யாகும்
நீர்த்துமே யிப்படிதா னிலைமை பார்த்து
நிச்சயித்துக் கருப்பான மூலிகையைக் கொள்ளு
சேர்த்துமே சித்தர்கள் தாங்கொண்ட மார்க்கந்
திறமையாத் திட்டாந்தஞ் செப்பினேனே. (564)



செப்பினேன் பாட்டர்திரு மூல நாதர்
திறமான கரிசாலைக் கற்ப முட்கொண்
டொப்பிலெழு பதுகோடி யுகமி ருந்ததா
ருகந்துமே யெனையீன்ற காலாங்கி நாதர்
கப்பினேன் கரந்தையென்ற கற்ப முண்டு
கண்திறவாச் சமாதியிலே கற்பாந்தம் நின்றார்
அப்பினே னடியேன்று னேம முட்கொண்
டைந்துயுகம் பிள்ளைகளுக் கருள்செய் தேனே. (565)

செய்ததோர் செருப்படியின் கற்ப முண்டு
சிறுபாட்டர் பதஞ்சலியார் வியாக்கிர பாதர்
ஐததோ ரம்பலத்தி லைந்து கோடி
யதிகமாய்த் தவமிருந்தங் காடல் கண்டார்
மைததோர் மச்சமுனி வல்லரை யுண்டு
மவுனமாஞ் சமாதியிலே கோடியுக நின்றார்
கொய்ததோர் கூர்மமுனி கருவீழி யுண்டு
கோடியுகஞ் சமாதியிலே கூர்ந்திட் டாரே. (566)

கூர்ந்திட்ட சித்தர்தாங் கோடா கோடி
குறிப்பாகக் கற்பமுண்டு கொடிதா ஞானம்
ஆர்ந்திட்ட வதீதத்தி லயித்திப் கோடி
ரதிகமா யிலிங்கத்திற் புகுந்தோர் கோடி
ஓர்ந்திட்ட ஆதிமுத லொன்பதுபேர் சித்த
ரொருகோடி நவகோடி கோடா கோடி
பூர்ந்திட்ட பூரணத்தி லபித்தோர் கோடி
பேரான நாதாக்கள் சித்தி னுட்டே. (567)

## கறியுப்புக் கட்டு

ஆட்டான அன்னத்தி லுப்புக் கூட்ட
வடைவெல்லாஞ் சொல்லுகிறே னறிந்து கொள்ளு
பூட்டான கல்லுப்பைப் பாக்குப்போற் பொறுக்கிப்
பெருங்குப்பை மேனியொரு கல்லுருவி தானு
நீட்டான சாறிடித்துப் பிழிந்து கொண்டு
நீக்காக வெட்டிலொன்று பழச்சாறு கூட்டிக்
காட்டான கல்லுப்பில் பிசறித் தானுங்
காயவே போட்டிடுவாய் ரவியில் தானே. (568)

ரவியிலே யடிக்கடிக்குப் பிசறிப் போட
நலமாக வேழுநாள் கழிந்த பின்பு
புவியிலே வெங்கார மனோசிலே யிலிங்கம்
பொருந்தியவுப் புக்கெட்டி லொன்று கூட்டித்
தவியிலே சாற்றரைத்து நாலு சாமந்
தண்ணீர்போல் குழப்பியே வைத்துக் கொண்டு
செவியிலே பாயும்போ லுள்ளே செல்லக்
கெடியான கல்லுப்பிற் பிசறிப் போடே. (539)

போட்டுமே காய்ந்தபின் பிரண்டியுலே மரைத்துப்
பெருக்கவே கவசமாய்க் கட்டத் தானும்
நாட்டுமே நூறெருவிற் புடத்தைப் போடு
நுணுக்கமா யாறவிட் டெடுத்துக் கொண்டு
மூட்டுமே சாறுவிட்டு முன்பு போல
மூன்றுநாள் பிசறியே ரவியிற் போடு
நாட்டுமே வெங்கார மனோசிலே யிலிங்கம்
நலக்கரைத்து முன்னிலேயைக் கவசங் கட்டே. (570)

கட்டியே கனபுடமாய்ப் போட்டெ டுத்துக்
கரியில்வைத் துருக்கிப் பார் கண்விட் டாடும்
நட்டியே யிந்தவுப்பைப் பொடியாய்ப் பண்ணி
நலமாகக் கறிசோற்றி லுண்டு வாநீ
கெட்டியே யுன்னுடன் பிருப்புத் தூணுங்
கிளர்ந்தெழுந் தமுரியிலே யிறங்கா துப்பு
மட்டியே பச்சையுப்புத் தின்று யானல்
வாய்த்திருந்த சித்தியெல்லா மண்ணாய்ப் போமே. (571)

## நாகக்கட்டு

மண்ணான நாகத்தைக் கட்டக் கேளு
வழக்கமாம் வெடியுப்புப் பலந்தா ணைந்து
தண்ணான எண்ணெய்சவுக் கார மைந்து
சமரசமாய்ப் பொடிபண்ணிச் சட்டி பிட்டே
அண்ணான வடுப்பேற்றி யெரித்தா யானா
லழன்றுமே வெந்துருகிச் சுண்ண மாகும்
உண்ணான சுண்ணத்துக் கெடைதான் பாதி
யொக்கநன்றாய்ப் பொடியாக்கி உண்ர்வு கேளே. (572)



உணர்வான காரீயம் வங்கம் ரெண்டு
முறவாகச் சட்டியினி லுருக்கிக் கொண்டே
இணர்வான விருவங்கத் தெடைக்குத் தானு
மியல்பாகப் பொடியிட்டு வறுத்துக் கிண்டு
அணர்வான பொடிபோட்டே யடிக்க டிக்கங்
கயத்தினுற் கிண்டிடவே சுண்ண மாகும்
நணர்வான நாகத்தைச் சுத்தி பண்ணி
நலமாக வில்லேபோல் வார்த்துக் கொள்ளே. (573)

வார்த்துநின்ற வில்லேக்குச் சமனுய்த் தானும்
வாங்கத்தின் சுண்ணம்பைக் கவசங் கட்டிச்
சேர்த்துநின்ற வுலேதன்னில் சிவக்க வூதிச்
சிறக்கவே யாறவிட்டுக் கவசம் வாங்கி
மார்த்துநின்ற மறுசுண்ணங் கவசங் கட்டி
வண்மையா யைந்துதர மிப்படியே யூது
காத்துநின்ற கவசத்தை வாங்கிப் போட்டுக்
காரசாரம் போட்டுமே உருக்கி டாயே. (574)

உருக்கியே லேசாக வில்லே தட்டி
யுறுதியா யிலுப்பைப்பிண் ணாக்கு தன்னை
நருக்கியே பழச்சாற்று லரைத்து மைபோல்
நயமாக வடைதட்டி யிரண்டு தானும்
அருக்கியே நாகத்தை யதில்ப ரப்பி
யடைமூடு யெருவடுக்கிக் கெசபு டந்தான்
கருக்கியே போட்டெடுக்க நாகங் கட்டிக்
கரியினின்று கண்விட்டாங் காடுந் தானே. (575)

## வெங்காரக் கட்டு

தானான வெங்காரப் பலகை தானும்
தனித்தெருத்தின் சாணிதனிற் கழுவிப் போட்டே
ஊனான மணிச்சாறு தன்னிற் றேய்த்தே
யுறுவெய்யில் தனிற்போடு வாரந் தானுப்
ஆனான வடிக்கடிக்குத் தோய்த்துத் தோய்த்தங்
கதிகமா மிரவித்னி லதட்டிப் போடு
வேனான தினந்தோறும் ரவியில் தானு
மிராளாதே தேய்த்துமே போட்டி டாயே. (576)

போட்டிட்டே பெட்டுநா ளான பின்பு
பொருந்தவே மணியென்ற விலைய ரைத்துக்
காட்டிட்டுக் காரன்மேற் கவசங் கட்டிக்
காடையாம் புடமொன்று போட்டெடுக்க
மாட்டிபடுக் காரமது மணியு மாகு
மனேசிலைதான் பலமொன்று நிறுத்துக் கொண்டு
நீட்டுட்டுப் புளிப்பான காடி தன்னில்
நிச்சயமாய்க் கிளிஞ்சிலென்ற சுண்ணம் போடே. (5'7)

சுண்ணந்தான் காடியிலே யரைத்துக் கொண்டு
டோளைகட்டி யெரித்திடுவாய் சாமந் தானுங்
கண்ணந்தான் கற்ருழஞ் சாறு வாங்கிக்
கடுக்காய்த்து ளிட்டுமே தெளிவி றுத்து
வண்ணந்தான் மனேசிலைக்குச் சுருக்குப் போட்டு
வங்கமாஞ் சுண்ணும்புக் கவசங் கட்டித்
திண்ணமாங் கரியோட்டில் சிவக்க வாட்டிச்
சிறப்பாக வைத்துமே யரப்பொடியை வாங்கே. (578)

### துருசுச் சுண்ணம்

வாங்கியே பழச்சாற்றி லூற வைத்து
மாசகற்றிக் கழுவி ய வைத்துக் கொண்டு
தேங்கியே துரிசியொரு கட்டி வாங்கித்
திரமான முன்சொன்ன வங்கச் சுண்ணம்
ஆங்கியே யதின்மேலே கவசங் கட்டி
யண்டத்தின் கடுஞ்சுண்ண மதின்மேற் கட்டி
ஓங்கியே யண்டத்தின் கடுஞ்சுண்ணங் கேளு
ஓடெடுத்துச் சுண்ணும்புத் தண்ணீரில் போடே. (579)

போட்டுமே யெரியிட்டுக் கழுவிப் போட்டுப்
புகழ்ந்தபின்பு பழச்சாற்ரு லரைத்து மைபோல்
மூட்டியே கெசபுடமாய்ப் போட்டெ டுத்து
முயன்றக லோடேமூன் றுபுடம் போடு
மாட்டுமே மறுபடியு மரைக்க வேண்டாம்
மாசற்ற சுண்ணமுப ரசத்தின் சுண்ணந்
தாட்டியே தாம்பூலம் தின்ன லாகுஞ்
சமரசமாங் கற்பத்துக் குறுதி தானே. (580)



உறுதியாஞ் சுண்ணும்பைக் கவசங் கட்டி
யுழமண்ணில் வைத்துமே யெரிதான் சாமந்
திறுதியாந் துரிசியது சுண்ண மாகுஞ்
சிவப்பான செம்பரத்தம் பூவிற் போட்டுத்
தறுதியாய்ப் பிசைந்து வைக்கச் சாமந் தானுஞ்
சத்தெல்லாங் கக்கியே சிவப்பாய் விடும்
நிறுதியா யிலிங்கத்தில் சுருக்கிட் டுத்தான்
நிலவரமா யெடுத்துவைத்து நேர்மை கேளே. (581)

### அயச்செம்பு

நேர்மையாய் முன்வைத்த வரப்பொடியை நிறுத்து
நிசமாகப் பலம்நால் வைத்துக் கொண்டு
தீர்மையாய் முன்கட்டும் வெங்கார மொன்று
திறமையாய் முன்கட்டுங் கல்லுப் பொன்று
வார்மையாய் மனேசிலையாங் கட்ட தொன்று
மகத்தான துரிசியென்ற சுண்ண மொன்று
தார்மையாஞ் சாதிலிங்கக் கட்ட தொன்று
தாக்கியெல்லாம் வாழைப்பால் தன்னு லாட்டே. (532)

ஆட்டியே யைந்துபங்காய்ப் பண்ணிக் கொண்டே
அரப்பொடி யிலொருபங்கு பிசறி வைத்து
வாட்டியே மறுநாள்தான் குகையி லிட்டு
வாய்மூடி யுலைவைத்துத் துருத்தி ரெண்டால்
ஊட்டியே யுருக்கிடுவா யுயர்ந்த வூத்தா
லுடைத்துமே மறுபங்கு மருந்து கூட்டி
நீட்டியே யைந்துதர முருக்கித் தீர்த்தால்
நேரான வயந்தானுஞ் செம்பு மாமே. (583)

ஆமென்ற செம்புதனைத் தகடு த ்டி
யதீதமாம் பழச்சாற்று லூற வைத்து
நாமென்ற நாலாநாள் கழுவிப் போட்டு
நற்கட்டுச் சாதிலிங்க மனேசி ல வெங்காரஞ்
காமென்ற கட்டுப்புப் பழச்சாற்றி லரைத்துக்
கலந்தப்பு காயவைத்துத் தகட்டில் தானும்
ஆமென்ற வாதொண்டம் வேர்ப்பட்டை வாங்கி
யதிகமாம் வெண்ணெச்சிச் சாறு வாங்கி. (584)

வாங்கியே பட்டைதனைச் சாறு தன்னால்
வார்த்தரைத்து மைபோலத் தேங்காய் மட்டும்
ஆங்கியே யடைதட்டிச் செம்பைத் தானு
மதிற்பரப்பி மேலுமந்த வடையால் மூடித்
தேங்கியே மண்செய்து புளிப்புறணி யெருவுஞ்
சேர்ந்தடுக்கிக் கெசபுடமாய்ப் போட்டு வாங்கு
தூங்கியே செம்பதுவு நொறுங்கித் தூளாஞ்
சுத்தமா யெடுத்துவைத்துச் சொல்லக் கேளே. (585)

சொல்லவே முன்கட்டு முப்பைத் தானுஞ்
சிவகரந்தைச் சாற்றரைத்து மூசை பண்ணிப்
பல்லவே யுப்புக்குப் பாதி சூதம்
பகுந்தரைத்துச் சிவகரந்தைச் சாற்றினாலே
நல்லவே நாற்சாம மரைத்துப் பின்பு
நலமாகு மூசைக்கே வாரி யிட்டு
மெல்லவே யுப்பாலே மேலே மூடி
மிரட்சியில்லா தகலில்வைத்து வெயிலிற் போடே. (586)

வெய்யிலிலே போட்டபின் பகலால் மூடி
வெடியாமல் மண்செய்து புடத்தைப் போடு
நய்யிலிலே மெழுகாகும் பின்பு கேளு
நலமான வாரையிலைக் கவசங் கட்டிக்
கய்யிலிலே புடமைந்து போட்ட பின்பு
கனமான சூடனுடைத் தீயில் வாட்டி
உய்யிலிலே முன்கட்டு முப்பைத் தானு
மொருபலந்தான் குகைபிலிட்டு ருக்கி டாயே. (587)

உருகையிலே யுப்புக்குக் கால்வாசி தங்க
முறுகட்டு நாகமுங்கால் வாசி போடு
நருகைபிலே ந கவெடை செம்பு காரம்
நற்காரத் தெடைபோடு சூதந் தன்னைப்
பருகைபிலே லிங்கமுமிப் படியே போடு
பறியோடே யயஞ்சேர்த்துக் கூடப் போடு
கருகையிலே மனோசிலையைப் போட்டு வாங்கு
கண்காண மயில்கழுத்துக் களங்க தாமே. (588)



களங்கதனை ரவிமதியி லீந்தா யானால்
கண்டிடுமே திசைமாற்றுக் கருதிப் பாரு
புளங்கத்தைக் கல்வத்தில் பொடியாய்ப் பண்ணிப்
பொற்றலையின் சாற்றூட்டி போடக் கேளு
விளங்கத்தை காரமனோ சிலைபி லிங்க
மீருமல் களங்குக்கால் வாசி கூட்டி
இளங்கத்தை யேகத்தில் சரியாய்க் கெந்தி
யிழுத்தரைத்துப் பொற்றலையின் சாற்று லாட்டே. (589)

ஆட்டியே யோட்டிலிட்டு வறுத்துக் கொண்டங்
கரைவாசி காசியென்ற மேருக் கிட்டு
வாட்டியே வாலுகையின் மேலே வைத்து
மறவாதே பன்னிரண்டு சாமந் தீயை
நீட்டியே யாறவிட்டெ டுத்துக் கொண்டு
நிச்சயமா யாயிரத்துக் கொன்று போடு
மாட்டியே பன்னிரண்டு மாற்றுக் காணு
மருவிநின்ற காயசித்தி யிதற்குள் ளாச்சே. (590)

ஆச்சென்ற வுப்பில்லா லோக வேதை
யாகாது புடமதற் குறுதி யில்லை
மாச்சென்ற வுப்பாலே வந்த வேதை
மசகில்லை மாசில்லை வழுக்கு மில்லை
காச்சென்ற காயசித்தி கடிசி லாகுங்
கனமான வுப்பென்ற சிந்தூ ரந்தான்
பாச்சென்ற பணவெடைதான் தேனி லுண்ணப்
பத்தியந்தா னதின்பின்ன ரில்லை தானே. (591)

தானென்ற பத்தியத்தை விட்டு நீயுஞ்
சமரசமாங் கற்பமெல்லா முண்டு பாரு
வானென்ற வாசியைநீ யந்தி சந்தி
மறவாதே லட்சியத்தை மாட்டித் தீரு
பானென்ற ஞானவெள்ளந் தன்னை யுண்டு
பாடண்ட மனிதரொடு பழக்கம் விட்டு
நானென்ற வாணவத்தை நலியக் கொட்டி
நாதாந்தப் பெருவழியின் நாட்டம் பாரே. (592)

## அயக்களங்கு சிந்தூரம்

நாட்டமா யுப்பென்ற சிந்தூ ரத்தை
நாற்பதுநா ளாந்திசந்தி கொண்ட பின்பு
ஆட்டமா மரப்பொடிதான் பலமும் பத்தா
மதுநிம்பப்பழச் சாற்றி லூறவைத்து
மூட்டமாய் மூன்றும்நாள் தண்ணீரிற் கழுவி
முயற்சியாய் வாழைப்பால் விட்டு வைத்து
மாட்டமாய் மனேசிலையுங் காரம் லிங்கம்
மருவியே யெட்டிலொன்று பொடித்துப் போடே. (593)

பொடித்துமே மூன்றுநாள் போட்ட பின்பு
பேரான குகையிலிட்டு ருக்கிக் கொண்டு
மடித்துமே மறுபடியு நறுக்கித் தூளாய்
மாசற்ற வாழைப்பால் தன்னிற் போட்டுத்
துடித்துமே முன்போல மருந்து கூட்டிச்
சுத்தமாய் மூன்றுருக்குத் தீர்ந்த பின்பு
வெடித்துமே வேருக வைத்துக் கொண்டு
மீறியதோர் சாரத்தைக் கட்டக் கேளே. (594)

கட்டவே சாரமொரு பலந்தா னுன்கு
கழுதையுடை மூத்திரந்தான் படியி ரண்டு
புட்டவே பொடுதலையின் சாறுபடி ரெண்டு
பூநீறு படியரைதான் கூடப் போட்டே
எட்டவே யேகமாய்க் கலக்கிக் கொண்டங்
கிறுத்துமே தண்ணீரை யொன்றில் வைத்துத்
தட்டவே சாரமொரு பலந்தான் கட்டித்
தளவோட்டின் மேல்வைத்துச் சுருக்குப் போடே. (595)

சுருக்கிடுவ தெப்படிதா னென்றுற் கேளு
துணிகட்டிக் கழிதன்னில் தோய்த்துக் கொண்டு
குறுக்கிடுவ கொஞ்சமாய்த் தடவிக் காய்ச்சிக்
குத்தியே சீலையினுல் புரட்டிக் காய்ச்சு
நறுக்கிடுவ நாற்சாமஞ் சுருக்குப் போடு
நயந்தபிட்டி தனையெடுத்துக் கவசங் கட்டிச்
சிறுக்கிடுவ சீலைசெய்து மணல்மறைவிற் புடந்தான்
செயமாகக் கட்டுமது சாரந் தானே. (596)



கட்டுகின்ற சாரத்திற் சமனுய்த் தானுங்
கட்டிதண்டச் சுண்ணத்தைக் கவசங் கட்டிப்
புட்டுகின்ற பூநீற்றுக் குள்ளே வைத்துப்
பூர்த்தியாயூ திடவே புட்ப மாகும்
வெட்டுகின்ற வெங்காரப் பலகை தானு
மீறுமுத்தா மணிச்சாறு தன்னில் தோய்த்துத்
துட்டுகின்ற ரவிதன்னில் தோய்த்துப் போடு
சுருக்காக வெட்டுநாள் கட்டு மாமே. (597)

ஆமென்ற வெங்காரம் பலமி ரண்டோ
டண்டோட்டுக் சுண்ணந்தான் பலமி ரண்டு
காமென்ற கட்டினதோர் சாரம் நாலு
கடிந்தரைத்து நெட்டடங்கு மட்டு மாட்டு
பாமென்ற வழித்தெடுத்துக் கல்வத் திட்டுப்
பக்குவமாய்ப் புடம்போட்டுப் பனியில் வைக்கத்
தேமென்ற செயநீர்தான் சுருக்கு மெத்தச்
செப்பமாய்ப் பரணிதனிற் சேர்த்தி டாயே. (598)

சேர்த்திட்ட செயநீரில் வீரம் பூரஞ்
சிறப்பான சவுக்காரச் சுண்ணந் தானும்
பூத்திட்ட பொடித்திட்டு லிங்கத் துக்குப்
பேராகச் சுருக்கிடவே கட்டிப் போகும்
மாத்திட்ட கவுரிமனே சிலையுங் கட்டும்
மணிபோல நின்றுடும் வீரந் தானும்
ஆர்த்திட்ட செயநீரி லறுபத்து நாலு
மரகார முழுக்கட்டா யாகும் பாரே. (599)

ஆகுமே யயந்தானின் றுருகும் போதி
லவ்வெடைக்கு நாலிலொன்று தங்கம் போடு
தாகுமே தங்களடை நாகம் போடு
தாக்கிடுவா யயத்தினெடை யிலிங்கந் தானும்
ஏகுமே யுட்கொண்டு சரக்கெல் லாந்தா
னேற்றமாங் களங்காகும் கல்வத் திட்டுப்
போகுமே பொற்றலையின் சாற்று லாட்டிப்
புடம்போட்டுப் பொருந்தவே தேனி லுண்ணே. (600)

## அருஞ்சொற்பொருள்

**பா. எண் : 551 முதல் 600 வரை**

பா. எண் : 551—எருமைகனேச்சான் = எருமை மரம் என்பர்; சுணங்கவிருட்சம் = நாய்மரம்.

பா. எண் : 553—மதுரவேம்பு = சர்க்கரை வேம்பு (இனிப்புச் சுவையுள்ள வேம்பு = இதன் பஞ்சாங்கங்களும் இனிப்புச் சுவையுடைய என்பர். இது ஒரு அரிய மூலிகை).

பா. எண் : 554—குருந்து = குருந்தமரம் என்பர். தென் முகக் கடவுள் நால்வர்க்கும் குருந்தமரத்தடியில் அமர்ந்து உபதேசித்ததாகப் பூராணம் கூறும். அந்த கடவுளுக்குத் தோத்திரம் இயற்றிய பரஞ்சோதி முனிவர் ''கல்லாலின் புடை யமர்ந்து'' என்று கூறுவதால் அந்த குருந்த மரமென்பது ஒருவகைக் கல்லால் மரமாக இருக்கலா மென்றும் ஊகிக்கற் பாலது. அருமருந்தன்ன என்பது 'அருமந்த' என்று மருவி வழங்கி வருதல்போல குருவிருந்த மரம் என்பது குருவிந்த மரமென்று மருவி இருக் கலாம் என்றும் கொள்ளக்கிடக்கிறது.

பா. எண் : 555—சுருக்கு = விரைவிலாகும்; அடுக்கெல்லாம் = ஆருதாரத்தானங்கள்.

பா. எண் : 556—அண்டம் = (கருங்) கோழிமுட்டை; பேடு = பெட் டைக் கோழி; ஆகாயக்கெருடன் = கொல்லன் கோவைக் கிழங்கு.

பா. எண் : 557—தள்ளிப்போட்டு = நீக்கி. அவித்து = வேக வைத்து; கொள்ளே = உட்கொள்வாயாக (ஏ = ஈற் றசை).

பா. எண் : 558—காயத்தில் = உடலில்; மசகம் = கொசுகு; துர்ப்பசி = கேடுதரும்பசி (பசிவந்திடப்பத்தும் பறந்து போம் என்பர் நூலோர்); சுக்கிலம் = விந்து; மருவ லாம் = கூடாலாம் (உடலுறவுங் கொள்ளலா மென்றவாறு); வைக்கிறது = செயற்கை முறையில் உண்டாக்குதல்; அரையளவு = மூன்றடியளவு (நல்லவளர்ச்சி யுடையவனுடைய இடுப்பளவு); திங்கள் = மாதம்; அதும்பாமல் = உலராமல்.



பா. எண் : 560 – நீலி = அவுரி.

பா. எண் : 561—வேலி = கொடுவேலி.

பா. எண் : 565—கரந்தை = சிவகரந்தை.

பா. எண் : 566—அம்பலம் = சிதம்பரம் (சிற்றம்பலம்).

பா. எண் : 570—இரண்டிலை = குப்பைமேனியிலை, கல்லுருவி இலை (பா. எண் 568-ல்காண்க); கவசம் = மேல் பொதிதல்.

பா. எண் : 571—இறங்காது = வெளிப்படாது.

பா. எண் : 572—மண்ணுன = பிருதிவி அமிசமுள்ளதான கூறுள்ளதான; சமரசமாய் = சமஅளவாய்.

பா. எண் : 574—காரசாரம் = வெங்காரம், நவசாரம்.

பா. எண் : 575—எருவடுக்கி = வறட்டியடுக்கி.

பா. எண் : 576—மணிச்சாறு = உத்தமணிச்சாறு; சிலர்க்குன்றி மணி சமூலச் சாறு என்பாரும் உண்டு.

பா. எண் : காடையாம் புடம் = காடைப்புடம் (ஐந்து வறட்டி களால் இடும்புடம்).

பா. எண் : 580—எரி = தீ.

பா. எண் : 582—தீர்மை = சரியாக; வாழைப்பால் = வாழைப்பூ காய் முதலியவைகளின் காம்பிலிருந்து வடியக் கூடியது; ஆட்டு = அரை.

பா. எண் : 586—மிரட்சி = அச்சம்.

பா. எண் : 588—உறுகட்டு = வலிந்தகட்டு.

பா. எண் : 589—திசைமாற்று = எட்டுமாற்று.

பா. எண் : 591—மசகு = குறைவு; மாசு = குற்றம்; வழுக்கு = கீழ்மை.

பா. எண் : 592—லட்சியம் = குறிக்கோள்; பாடண்டர் = நாத்திக வாதிகள்.

பா. எண் : 593 மதுநிம்பம் = சர்க்கரை வேம்பு.

பா. எண் : 595—ஏகமாய் = ஒன்ருக; தளவோடு = மண்ணோடு

பா. எண் : 596—பிட்டி = சுருக்குக் கொடுக்கப்பட்ட சாறு கொடுத்த மூலிகையின் திப்பி,

பா. எண் : 597—புட்பமாகும் = பற்பமாகும்.

பா. எண் : 599—அரகாரம் = கடுங்காரம்; முழக்கட்டாம் = சண்டிக் கட்டாகும்.

பா. எண் : 600—பொற்றலை = மஞ்சள் கரிசாலை.

உண்ணவே மண்டலந்தா னந்தி சந்தி
யுகாந்தவரை தேகத்துக் கழிவோ வில்லை
கண்ணவே மேனியது கருங்கல் லாகுங்
கத்தியால் வீசினுல்தோ லுமுரி யாது
பண்ணவே சிங்கம்போல் பராக்கிரம மாகுய்
பரிதியா மண்டலத்தில் புக்க லாகும்
விண்ணவே மேனியுடை யுரோம மெல்லாம்
விடுபட்ட வேனத்தினு ரோம மாமே. (601)

**காந்தச் சத்து**

ரோமமாங் கேசந்தான் பலமோ பத்து
நுட்பமா மயிலிறகு பலமோ பத்து
ஏமமா மெள்ளுப்போல் நறுக்கிக் கொண்டங்
கேற்றமா முலைப்பாலில் நலியக் கொட்டிக்
கேமமாங் கெந்தகந்தான் பலமோ வைந்து
கெட்டியா மனேசிலைதான் பலமோ மூன்று
வேமமாம் வெங்காரம் பலமோ மூன்று
வீரமது பலமொன்று துரிசிபலம் நாலே. (602)

நாலோடே கட்டியதோர் கல்லுப் பொன்று
நலமான சவுக்காரச் சுண்ண மொன்றும்
ஏலோடே யிவையெல்லா மெருக்கம் பாலில்
இழுத்தரைத்து மயிரதனில் பிசறிக் கொண்டு
வேலோடே வில்லைபண்ணி வெயிலில் வைத்து
மிக்கான பூப்புடத்திய் தயிலம் வாங்கு
பாலோடே பரணிதனி லடைத்து வைத்துப்
பலம்பத்துக் காந்தத்தைப் பண்பாய் வாங்கே. (603)

பண்பான ஊசியெட்டுப் பிடிக்குங் காந்தம்
பருபருக்கை யாயுடைத்துக் கிழிபோற் கட்டி
வெண்பான வெள்ளாட்டி னுதிரந் தன்னில்
மிக்காக மூன்றுநா ளூற வைத்துக்
கண்பான காடிதனில் கொதிக்க விட்டுக்
கழுவியெல்லாங் கல்வத்தில் மருத்தை யிட்டுத்
தண்பான நாவிலொன்று காரம் போட்டுத்
தாக்கியரை தயிலநாற் சாமந் தானே. (604)



சாமந்தா னரைத்தபின்பு குகையி லிட்டுத்
தாக்கியேதுருத்தியஃ திரண்டா யிட்டு
வாமந்தா னூதிடவே கறடு மாகும்
மறுபடியுந் தயிலமிட்டுக் காரம் போட்டுப்
பூமந்தான் குகைக்குள்ளே வாரி யிட்டுப்
பொருந்தவே யூதினல் மணியு மாகும்
ஆமந்தா ஊேந்துதர மப்படியே யூதி
ஆச்சுதே காயசித்தி யாண்மை தானே. (605)

ஆண்மையாஞ் சத்திலே காரந் தானிட்
டடிகனத்த கிண்ணியாய் மெழுகுகட்டி வாரு
கேண்மையா யமுரிகொள்ளு சிந்தூரங் கொள்ளு
கெட்டியா யுன்மேகஞ் சித்தி யுண்டாந்
தாண்மையாஞ் சட்டைகக்கிச் சந்திரவிம் பம்போல்
சதகோடி வேதாந்தம் பார்க்க லாகுங்
காண்மையாய்க் கரியுரித்தோன் நடன மெல்லாங்
கண்டுகொண்டு காட்சியா யிருக்க லாமே. (606)

இருக்கவே கார்தமென்ற சத்துத் தானு
மிதமாகக் குகையினின்று முருகும் போது
தருக்கவே நாலுக்குத் தங்க மொன்று
தங்கத்தி னெடைபோடு நாகந் தன்னை
நருக்கவே சத்தெடைதான் சூதம் போடு
நறுகியதோர் சூதவெடை கெந்திபோடு
பெருக்கவே பொற்றலையின் சாற்று லாட்டிப்
பொடிபண்ணிக் காசியென்ற மேருக் கேற்றே. (607)

மேருக்கே யேற்றியே தீயை மூட்டு
விதமாகப் பன்னிரண்டு சாமம் தானும்
ஆருக்கே யாறவிட்டெ டுத்துக் கொண்டே
அருணநிற மாயிரத்துக் கொன்றங் கீவாய்
போருக்கே நவலோகம் பொன்னு மாகும்
புகழ்கின்ற மாற்றதுவும் பனிரண் டாச்சு
மாருக்கே மண்டலந்தான் தேனி லுண்ண
வச்சிரம்போல் தேகமுமாம் மருவி யுண்ணே. (608)

உண்ணவே சமாதிக்குள் ளிருந்து கொண்டே
பூழியாங் காலமெல்லா முன்ன லாகுங்
கெண்ணவே கேசரத்தி லாடும் போது
கெடியான விடிமின்னல் கிட்ட வஞ்சம்
வண்ணவே மாருதத்திற் சுழலொட் டாது
மதியளவு மோடையிலே குளிர்ச்சி யில்லை
அண்ணவே நூற்றறுப தாமண் டத்தி
லையரென்ற நந்தியடி யறிய லாமே. (609)

## அப்பிரகச்சத்து

அறியவே அப்ரகச் சத்துத் தானும்
அதிற்கேளு முதற்றரந்தா னேம வண்ணந்
தெரியவே சிவப்புவண்ண மிரண்டாம் பட்சஞ்
செப்பக்கேள் கருப்பானல் மூன்றும் பட்சம்
மறியவே வெளுப்பானு லாம் பட்சம்
மகத்தான நாலுவகைச் சாதி தன்னில்
எறியவே யேமவண்ணப் பிரகந் தன்னை
யிடித்துநன்ருய் நவநீதம் பண்ணிக் கொள்ளே. (610)

பண்ணியே கிழிபோலக் கட்டிக் கொண்டு
பாங்கான கொள்ளோடே வேக வைத்து
திண்ணியே தினமொன்று வெந்த பின்பு
சேரிதிலே வெங்காரம் பாதி தானுங்
கண்ணியே கல்வத்திற் போட்டுக் கொண்டுக்
கருப்பான வெள்ளாட்டி னிரத்தத் தாட்டு
மண்ணியே மாளுமட்டு மரைத்த பின்பு
மகத்தான வெண்ணெய் குன்றி வெல்லந் தானே. (611)

தானான தேனேடு சிறுமீ னெள்ளு
தாக்கான கோதும்பை யுளுந்து மொச்சை
வேனான முசலெலும் பெருமைக் கொம்பு
வேகமாங் குதிரையுடைக் குளம்புத் தந்தம்
வானான வறள்தவளை குக்கி லோடு
வகைக்கொன்று பலங்கால்தான் வளமாய்ப் போட்டு
கோனான வப்பிரகம் பலந்தான் பத்துக்
கூட்டியெல்லாம் வெள்ளாட்டி ரத்தத் தாட்டே. (612)



ஆட்டியே வில்லைபண்ணிக் காயப் போட்டிங்
கடுக்கடுக்காய் வங்கமென்ற நாளத் தூது
மூட்டியே முத்துப்போல் சத்து வீழும்
முறைமுறையா யுடைந்தெடுத்துக் கறட்டை வாங்கி
மாட்டியே முன்போல மருந்து கூட்டி
மறவாதே வங்கமென்ற நாளத் தூது
நீட்டியே மருந்தினையிட் டைந்துதர மூதி
நினைவாகச் சத்தெல்லாம் பொறுக்கி கொள்ளே. (613)

பொறுக்கியே சத்தெல்லா முருக்கிக் கொண்டு
பேரான காரமொடு சாரஞ் சேர்த்துத்
தறுக்கியே சாய்க்கின்ற விபரங் கேளு
தனியான வதிமதுர மிலுப்பைப் பூவுந்
தெறுக்கியே தேனேடு நெய்யும் வெல்லஞ்
சீரான நல்லெண்ணெய் தேங்காய்ப் பாலும்
அறுக்கியே யாட்டுப்பால் சதுரக் கள்ளி
யடிப்பாலுஞ் சமனுக்கிக் கலக்கிக் கொள்ளே. (614)

கலக்கியே கலசத்தில் வார்த்து வைத்துக்
கைமுறையாய்ச் சத்துருக்கி யதிலே சாய்ப்பாய்
பலக்கியே பதினைந்து தரமே சாய்த்துப்
பார்த்தக்கால் சரிகைவெள்ளி போலாஞ் சத்துத்
தலக்கியே சத்துக்குச் சமமைத் தங்கந்
தாக்கியே பாத்திரம்போல் வார்த்துக் கொண்டே
அலக்கியே யப்பிரகச் சத்துக் கிண்ணி
யட்சயமாம் பாத்திரமென் றறிந்தி டீரே. (615)

அறிந்திட்ட பாத்திரத்தில் வத்து வைத்தே
யருச்சித்தங் காத்தாளை யஞ்சல் பண்ணிப்
பறிந்திட்ட வாசியெல்லா மிழுத்து வாங்கிப்
பாங்கான வறிவோடே பானம் பண்ணி
நெறித்திட்ட துவாதசத்தி னினைவை யுன்னி
நேர்மையெலா மறித்திடுவாய் நிலைத்துப் போகுந்
தெறித்திட்ட வப்பிரகக் கிண்ணி தன்னில்
சிறப்பாக வடித்தூறில் சீலை செய்யே. (616)

சீலைசெய்து வாலுகையின் மேலே வைத்துச்
சிறந்திட்ட பாத்திரத்தில் சூதம் விட்டுக்
காலைசெய்து கருமத்தஞ் சாறு விட்டுக்
கலந்தெரிப்பாய் நாற்சாமங் கமலத் தீவில்
வேலைசெய்த வெண்ணெய்போல் குழைந்து போகு
மிக்காக வழித்தெடுத்துத் தண்ணீரிற் போடு
ஆலைசெய்தா வாரையிலைக் கவசங் கட்டி
யடுக்காகப் பதினைந்து புடந்தான் போடே. (617)

புடம்போடு விராலியிலைக் கவசங் கட்டிப்
புகழாகப் பதினைந்து புடமும் போடு
திடம்போடு செந்திராய்க் கவசங் கட்டித்
திறமாகப் பதினைந்து புடமு மானல்
அடம்போடு குளிகையுமா மிதற்குள் கேளு
அபினேடு கெஞ்சாவுஞ் சாதிக் காயும்
முடம்போடு பத்திரியுங் கிராம்பாம் நாபி
முற்றியதோர் மத்தைவித்துந் தேங்காய்த் தானே. (618)

தேங்காயுங் கசகசா சாரப் பருப்புஞ்
சிறப்பான மருளுமத்தை யெட்டி வித்துக்
தாங்காயு மிவையெல்லா மிடித்து நையச்
சாராயம் விட்டரைத்துச் சாமந் தானும்
வாங்காயுங் குளிகைக்குக் கவசங் கட்டி
மார்க்கமாம் புகைப்போக்கில் கட்டி வைத்து
நாங்காயு மண்டலந்தான் கழித்த பின்பி
ரவியிலே போட்டிடுவாய் தினந்தான் பத்தே. (619)

தினம்பத்துக் கழித்தபின்பு வாயி லிட்டால்
ஸ்தீரிகளுக்குத் தம்பனையாஞ் சுருக்கு மெத்த
இனநூற்றே டெட்டுமணித் தாவடமாக் கோத்தே
யியல்பான வைந்தெழுத்து மூன்றெழுத் தோத
மனம்பார்த்துத் தேவியொடு சிவந்தான் வந்து
மகத்தான யோகசித்தி காயசித்தி யீவார்
தனம்பார்த்து வாதமுதல் சித்தை யீவார்
சாங்கமாய் மனமுறைத்தால் சித்தி யாமே. (620)



சித்தியாம் ரசவாதி ஞானி யோகி
செகச்சாலந் தனைமறந்து செம்மை யாகி
உத்தியா மனமுறைத்தா லவனே ஞானி
யூரிருந்தென் காடுறைந்தென் மலையில் வாழ்ந்தென்
அத்தியாந் தான்வேறு பொருள்வே றென்று
மசத்தில்லா எவ்வுமிரு மொன்றே யென்றுந்
தத்தியாய் மனமுறைத்துச் சாங்க மாகிச்
சடமெடுத்த வித்தேது விந்து வாச்சே. (621)

விந்துவாஞ் சூதத்தில் மந்திரமோ சித்தி
மேகத்தி லோடுகிற குளிகை சித்தி
உந்துவாம் யோகசித்தி ஞான சித்தி
யுறுதியாங் காயசித்தி லோக சித்தி
தந்துவாஞ் செடத்துக்கு ளாதார சித்தி
சாத்திரத்தில் சொல்லாத கருவோ சித்தி
அந்துவா மட்டாங்க சித்தி யாகும்
ஆச்சரியஞ் சூதத்தைக் கட்டி னேர்க்கே. (622)

கட்டியதோர் சூதத்தில் சாரணைதா னூட்டக்
கண்ணிமைக்கு ளாயிரந்தான் காதம் போகுந்
தெட்டியதோர் குளிகையல்ல காய சித்தி
சீக்கிரமாய்ப் பட்சத்தில் தெரிந்து போகுங்
குட்டியதோர் குளிகைதன்னை வாயில் வைத்துக்
குறிப்பாகக் கல்மண்ணி லோடு தன்னில்
துட்டியதோர் துப்பியே யுருக்கிப் போடச்
சுயமாகும் பதினெட்டு மாற்றுத் தானே. (623)

மாற்றுன வப்பிரகக் கிண்ணி தன்னை
வரிசையாய் நொறுக்கியே குகையில் வைத்து
ஊத்தான துருத்திவைத் துருக்கிக் கொண்டே
யூட்டிடுநீ தங்கத்தை நாலுக் கொன்று
நாத்தான நாகத்தை ரசத்தைத் தானும்
நலமாகத் தொந்தித்தி ரட்டி யூட்டு
காத்தான லிங்கமொடு காரந் தானுங்
கால்வாசி யூட்டிடவே களங்கு மாமே. (624)

களங்கதனை ரவிமதியி லீந்தா யானல்
கண்டிடுமே திசைமாற்றுக் கருதிப் பாரு
புளங்கத்தைப் பொற்றலையின் சாற்று லாட்டிப்
பேணியே புடமதுபோட் டரைத்த ரைத்து
முளங்கத்தை மூன்றுவிசை போட்டெ டுத்தால்
முதுமையாங் கோவையென்ற பழம்போ லாகும்
அளங்கத்தை யாயிரத்துக் கொன்றே யீந்தால்
ஐயிரண்டு மாற்று நம் அறிந்து கொள்ளே. (625)

அறிந்து கொள்ளு சிந்தூரங் குன்றி தானும்
அந்திசந்தி மண்டலந்தான் தேனி லுண்டால்
முறிந்துநின்ற கற்பமெல்லா மீறி யூறு
முடுக்கான வாசியது சொன்னபடி நிற்கும்
கெறிந்துநின்ற ககனத்தில் திரிந்து கொண்டு
கெடியான துருவமட்டும் புகுத லாகும்
பறிந்துநின்ற வயிரமது பளிச்சென் றுப்போல்
பாங்கான வுன்னுடம்பு மின்னும் பாரே. (626)

## பூநாகச் சத்து

மின்னலாம் பூநாகச் சத்துக் கேளு
விளங்கியதோர் செம்மண்ணுங் குளத்துக் குள்ளே
குன்னலாங் குழிவெட்டி நீளத் தானுங்
குதிரைலத்தி பரப்பியே கொஞ்ச மாக
மன்னலாய் வரகுவைக்கோல் மேலே போட்டு
வாகாக வெல்லத்தைக் கரைத்துத் தூவு
முன்னலாய் மூடிவைக்கப் பூநா கந்தான்
முனையாக மேய்ச்சலுக்கு நிறையும் பாரே. (627)

பாரென்ற தினம்பார்த்துப் பொறுக்கிக் கொண்டு
பாறையிலே தினந்தோறு முலரப் போட்டு
நேரென்ற நூறுபலம் நிறுத்துக் கொண்டு
நுணுக்கமாங் காரமது பலம்பத் தாக
சேரென்ற காரத்தைத் தேன்வார்த் தாட்டித்
திறமாகப் பிசறியத்தப் பூநா கத்தில்
வாரென்ற பாண்டத்தில் வைத்து மூடி
மண்செய்து மார்க்கமா மடுப்பி லேற்றே. (628)



அடுப்பேற்றித் தீயெரிப்பாய் நாலு சாம
மடையாகப் பூநாகம் பற்ப மாகும்
கருப்பேற்றி யிதையெடுத்துக் கல்வத் திட்டுக்
கதிப்பான தேனேடு வெல்லங் குன்றி
வெருப்பேற்றி வெண்ணெயொடு காரங் கட்டி
மிடுக்காக வரைத்துநன்றாய்த் தினந்தானென்று
விடுப்பேற்றி வில்லைகட்டி வங்க நாளம்
மிக்கவே யொவ்வொன்றாய்ப் போட்டிட் டூதே. (629)

போட்டுத மணிமண்ணியா யிறங்குஞ் சத்துப்
பொறுக்கியே கறடுமிந்தப் படியே ஊது
வாட்டுத வந்தவெல்லா மெடுத்துக் கொண்டு
வாகாகக் காரமிட்டு ருக்கி நன்றாய்
ஆட்டுத வப்பிரகஞ் சாய்த்தாப் போல
ஆண்மையாய்ப் பதினைந்து தரமுஞ் சாய்த்துத்
தாட்டுதங் சத்தினது மகிமை சொல்லச்
சதாசிவனு முன்பின்னாய்த் தயங்கி னாரே. (630)

தயங்காத பூநாகச் சத்துத் தானுந்
தாக்கியே குகையினின் றுருகும் போது
வயங்காத வயிரமொன்று கொடுத்தா யானல்
மாசற்றங் குருகியே உள்ளே கொள்ளுந்
துயங்காத சூதமொன்று கொடுத்து வாங்கிச்
சுகமாக மேற்பூச மருந்து கேளு
வியங்காத வீரமொடு புழுகு சீனம்
மேன்மையாம பூரமொடு வழலை தானே. (631)

வழலைதன்னை வாய்நீரா லரைத்துத் தானும்
மணிமேலே பூசியுமே யுலர வைத்துத்
திழலைதன்னைக் குகைவைத்துச் சில்லுப் போட்டுச்
சீலைசெய்து கெசபுடமாய்ச் சிறக்கப் போடப்
பழலைதன்னைப் பானின்ற வயிரந் தானும்
பண்பாகக் குருவாச்சு பாரு பாரு
அழலைதன்னை யடக்கியிட்ட வாசி போல
வாச்சரிய மிதின்வேதை யதீதந் தானே. (632)

அதீதமாங் குருவொன்றுஞ் சூத மொன்று
மரைத்திடுவாய் முலைப்பாலாற் கடிகை நாலு
குதீகமாய்க் குகையிலிட்டுப் புடத்தைப் போடு
கூகைநீறு போலவது குருவு மாகுஞ்
சூதீதமாஞ் சூதமது குருவு மாச்சு
சுத்தித்த சூதமது பத்துக் கொன்று
முத்தமா முலைப்பாலா லரைத்துக் கட்டி
முன்போலக் குகையில்வைத்துப் புடத்தைப் போடே.
(633)

புடம்போட்டிப் படிநூறு தொந்த மேற்றிப்
போக்கான விதன்குணத்தைப் புகலக் கேளு
தடம்போட்டுத் தங்கத்திற் பத்துக் கொன்று
தாக்கிடவே தங்கமது செம்பே யாகும்
அடம்போட்டுத் தங்கரவி யருணன் காந்தி
யறுபத்து நாலுதொந்தஞ் சேர்ந்த பின்பு
விடம்போட்டு வெள்ளியிலே நூற்றுக் கொன்று
மிடுக்கான தொந்தரவி யீந்தி டாயே. (634)

ஈந்திடவே பத்தரையே மாற்றுக் காணு
மிச்செம்புச் சிந்தூரம் வீசமெடை யுண்ணுப்
பாய்ந்திடவே பட்சத்திற் சித்தி யாகும்
பரையான பூரணத்தில் மருவப் பண்ணும்
ஆய்ந்திடவே யாறுதல வடுக்கெல் லாந்தா
னணுகிடிலோ வங்கமெல்லா மடுக்காய்க் காணும்
தோய்ந்திடவே துவாதசாந் தத்தி னின்று
சூட்சமெல்லாங் கண்டவர்க்குச் சுளுவி லாமே. (635)

## குளிகை

சுளுக்காக வப்பிரகச் சத்தில் தானுஞ்
சுத்தித்த சூதமது கழஞ்சீ ரெட்டு
நளுக்காக வாலுகையில் கிண்ணி வைத்து
நலமாகச் சுத்தித்த சூதம் விட்டுக்
களுக்காகக் கருமத்தஞ் சாறு விட்டுக்
கமலம்போ லெரியிடவே யிறுகிப் போகும்
வெளுக்காக வெண்ணெயைத்தான் வாங்கிக் கொண்டு
மிக்கான வாரையிலைக் கவசங் கட்டே. (636)



ஆரையிலைப் பதினைந்து புடந்தான் போடங்
கரசிலையிற் பதினைந்து புட மு மாகும்
பூரையென்ற பிராயிலையிற் பதினைந் தாகும்
பெரிதான மத்தங்காய்ப் பதினைந்தில் வாட்டிச்
சூரையிலைச் சூடன்றன் றீயில் வாட்டித்
தீபனந்தான் காண்பதற்குப் பூநா கச்சத்
தோரையிலை யொன்பதுக் கொன்றே யூட்டி
யுருகவே விடுவிக்கச் சாரணைதா னுமே. (637)

சாரணையாந் தயிலத்திற் சாய்த்த பின்பு
தயங்காத கெந்தகத்தின் சத்தை யூட்டு
காரணையா முபரசத்திற் கிடைத்த சத்துக்
கலங்காமல் விடுவித்துச் சாரணையைத் தீர்த்து
நாரணையா நவலோகச் சத்தை யூட்டு
நவரத்னச் சத்திட்டுச் சாரணையைத் தீர்த்துத்
தாரணையாங் காரசாரச் சத்து மிட்டுச்
சாய்த்துமே சாரணையில் வைத்துக் கொள்ளே. (638)

## இரசக் கிணறு

வைத்துமே யிப்படித்தான் குளிகை ரெண்டு
வாயிலொன்று கரத்திலொன்று வைத்துக் கொண்டு
கெய்த்துமே ககனத்தி லோடி நீதான்
கெடியான கிழக்கென்ற சமுத்தி ரத்தில்
எய்த்துமே யீசான மூலைக் குள்ளே
யேற்றமா முரோமபுரிப் பட்ட ணத்துள்
தெய்த்துமே தெற்காக விரத கூபந்
தேடியே யாதிரசக் கிணற்றைப் பாரே. (639)

கிணற்றடியி லிராட்சதரைக் காவல் வைத்துக்
கெட்டியாய்த் தேவர்களுங் காத்து நிற்பார்
மணத்தடியிற் சூதத்தை மனிதர் சித்தர்
மகத்தான கமனிகள்தா மெடுப்பா ரென்று
சணத்தடியிற் சதநித்தங் காவ லாகுந்
தாக்கான பஞ்சகிர்த்தியஞ் சாட்சி யாக
நிணத்தடியிற் போகாமற் சிவன்றுன் முன்னே
நீறுத்தினுர் காவலாய்க் கிணற்றில் தானே. (640)

தானுன ரிசிசித்தர் யோகி தாமுந்
தவசுபண்ணி யனேகநாள் சவத ரித்தார்
கோனுன குளிகைக்கு ரசமெ டுக்கக்
ககனத்திற் பாய்ந்துகிணற் றடியிற் போனேன்
தூனுன சூதமது கடுஞ்சு ருக்காய்த்
துரந்தெழுந்து பாய்கையிலே சுருக்கா யோடி
நானுன ரவிதன்னிற் சொக்கிக் கொண்டு
நாதாந்தத் தாய்ப்பதத்தை நாடி னேனே. (641)

நாடியே தாய்தன்னைக் கேட்கும் போது
நாட்டமொன்று சொல்லிடவே நம்பி நானும்
பாடியே பரமனைத்தான் தோத்த ரித்துப்
பாங்கான தம்பனையா மந்தி ரத்தைத்
தேடியே செபம்பண்ணச் சூதந் தானுந்
துரத்தாம லடங்கிற்றுச் சீக்கிரமாயத் தானும்
ஆடியே தேங்காயின் குடுக்கைக் குள்ளே
யடைத்துமே கக்கத்தில் லமைத்திட் டேனே. (642)

அமைத்திட்டுக் ககனத்தி லெழும்பும் போதங்
கழும்பான கமனியவன் மறித்துக் கொண்டு
திமைத்திட்டுச் சிவனுடைய பொக்கி சத்தைத்
திருடியே போவானே னென்று சொல்லிப்
பமைத்திட்ட குடுக்கை யைத்தான் பறிக்கவந்தான்
பறியாதே திருமூலர் பேரன் யான்றன்
குமைத்திட்ட குளிகைகட்டக் கொண்டு போறேன்
கொடுமூலர் சாபித்தால் கல்லா வாயே. (643)

கல்லானு லனேகம்பேர் காவ லுண்டு
கயிலையுறை சிவனுடைய பொக்கி சத்தை
எல்லாரு மெடுப்பார்க ளென்றே யெண்ணி
யெங்களைத்தான் காவல்வைத் தாரேற் றமாகத்
தில்லானுற் சிவனுத்தா ரப்ப டிக்குச்
செய்கிறதே யல்லாமல் மற்றென் றில்லை
வல்லானுற் கொடுபோநீ யென்று சொல்லி
மறிக்கவே யணைவருந்தான் வந்திட் டாரே. (644)



வந்திட்டுச் சுற்றிலுமே வளைத்துக் கொண்டார்
வசியமா மந்திரத்தை யுச்ச ரித்தேன்
அந்திட்டங் கடிவணங்கி யெல்லோ ருந்தான்
அய்யாநீ ராருடைய மரபென் றூர்கள்
முந்திட்டு மூலரவர் மூன்றும் பேரன்
முக்கியமாம் போகரென்று மொழிந்திட் டேன்யான்
கொந்திட்டுக் கொடுமூலர் பேர னென்றுற்
குளிகையதின் குணப்பாட்டைக் காட்டென் றுரே. (645)

காட்டென்று சொன்னதுமே குளிகை தன்னைக்
கடலில்விட்டுச் சங்கிலியைப் பிடித்துக் கொண்டேன்
ஓட்டென்று யோசனையாந் தூரந் தானு
முறக்குடித்து மண்தெரித்து பள்ள மாச்சு
நாட்டென்றே யெல்லோரு நடுந டுங்கி
நமக்கெல்லா மாக்கினைதா னுகு மென்று
மூட்டென்று முன்போலே யாக வென்று
முனிந்துமே தெண்டனிட்டு மொழிந்தார் காணே. (646)

காணவே சுரபியென்ற குளிகை தன்னைக்
கசங்காமல் சங்கிலியிற் கயிறு கட்டி
மூணவே முன்குளிகை தன்னில் விட்டேன்
முதிர்ந்துநின்ற குளிகையைத்தான் சுரபி தீண்டில்
தாணவே நீரெல்லாங் கக்கி முன்போற்
சமரசமாங் கடலெப்போ தும்போ லாயிற்று
ஆணவே ராட்சதரு மடிவ ணங்கி
யஞ்சல்பண் ணிக்குளிகை யொன்றுகேட்டிட் டாரே. (647)

கேட்கவே குளிகைபண்ணித் தாரே னென்றேன்
கெட்டியாந் தேங்காயின் குடுக்கை தன்னில்
வேட்கவே வேணுமென்ற சூதந் தானும்
விரைந்துகொடுத் தஞ்சலிதான் செய்து நின்றுர்
வாட்கவே மண்டலத்தில் குளிகை கொண்டு
வருவனென வடிதொழுதங்க கனுப்பி விட்டார்
தாட்கவே சமுத்திரத்தைத் தாண்டிப் பின்பு
சாங்கமாய்ப் பொதிகைகீழ்த் தரித்திட் டேனே. (648)

## பூனைக்கு உபதேசம்

தரித்திட்டுப் பானமொடு சமைத்துண் டேன்பின்
தாகித்துத் தண்ணீர்தான் தேடிக் கொண்டு
விரித்திட்டு விப்பிரான் வீதி சென்றேன்
வேகந்தா னேதிவெகு விட்டி ராள்தான்
துரித்திட்டுச் சொல்லையிலே தண்ணீர் கேட்டேன்
துர்க்கந்தம் வீசுதென்று பார்ப்பா ரெல்லாம்
அரித்திட்டே யகத்துக்குள் போய்விட் டார்க
ளாக்கிரமாய்ப் பூனையொன் றழைத்திட் டேனே. (649)

அழைத்திட்டுப் பூனைதனக் குபதே சத்தை
யருள்செய்யப் பூனையது நாலு வேதம்
பழைத்திட்ட பாப்பார்போற் றீர்க்க மாகப்
படித்தவன்போ னால்வேதம் பகரும் போது
சழைத்திட்ட பார்ப்பார்க ளோடி வந்து
சாங்கமாய்த் தண்டனிட் டஞ்சல் பண்ணிப்
பிழைத்திட்ட வேயடியேங் கட்கென்ன
புத்திபோதிப் பீரெங்குருவே போதிப் பீரே. (650)

## அருஞ்சொற்பொருள்

**பா. எண் : 601 முதல் 650 வரை**

பா. எண் : 601—பராக்கிமம் = வீரம் (ஆண்மை); மேனி = உடல்; ஏனம் = காட்டுப்பன்றி; உரோமம் = மயிர்.

பா. எண் : 602—நலிய = நைய; கொட்டி = நசுக்கி.

பா. எண் : 604—உதிரம் = குருதி (இரத்தம்); தைலம் = கேசக் குழித்தைலம்.

பா. எண் : 610—நவநீதம் = அப்பிரக நவநீதம்; ஏமம் = பொன்.

பா. எண் : 611—மாளும்மட்டும் = மடிந்துபோகும் வரை (அப்பிரகத்தின் தளுக்குபோகுமானால் அதுமடிந்தாகக் கூறுவர்).

பா. எண் : 615—அட்சயமாம் பாத்திரம் = வற்றாத பாத்திரம்;

பா. எண் : 617—கருமத்தஞ்சாறு = கருவூமத்தைச்சாறு; அவாரையிலை = (குறுக்கல்) ஆவாரை இலை.



பா. எண் : 620—தாவடம் = மாலை; மூன்றெழுத்து = தேவி மகா மந்திரம் (திரியட்சரி).

பா. எண் : 621—உறைந்து = வாழ்ந்து; அசத்து = சத்துவகுணமில்லாதது (ரஜோகுணமும் தாமச குணமுள்ளவை என்பது குறிப்பு).

பா. எண் : 622—மேகத்தில் = (ஆகுபெயர்) விண்வெளி.

பா. எண் : 623—பட்சம் = பதினைந்து (நாள்கள்)

பா. எண் : 626—ககனம் = விண்; ஆகாயம். துருவம்மட்டும் துருவ நட்சத்திர மண்டலம் வரை.

பா. எண் : 627—முனையாக = மிக்கமுயற்சியுடன்; மேச்சல் = உணவு உள்ள இடத்தில் திரிந்து தேடித்தின்னல்.

பா. எண் : 631—வழலை = பூநீறுகட்டு; அதீதம் = மிக்கமேன்மையானது.

பா. எண் : 633—கடிகை = நாழிகை (24 நிமிடம்).

பா. எண் : 636—கழஞ்சு = $1\frac{1}{4}$ வாரகனெடை (1/8 பலம்) இறுகிப்போகும் = கட்டிப்போகும்,

பா. எண் : 639—கூபம் = கிணறு.

பா. எண் : 640—சதநித்தம் = எப்போதும்; பஞ்சகிருத்தியம் = ஐந்து தொழில்கள் (ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல்).

பா. எண் : 641—சவதரித்தார் = காத்திருந்தார்கள்; நாதாந்தத்தாய் = உன் மனைத்தாய்.

பா. எண் : 642—தம்பனையாம் மந்திரம் = எல்லாத் தொழில்களையும் நிறுத்தும் மகா மந்திரம்; கக்கம் = (கஷ்கம்) புஜத்துக்கும் மார்புக் கூட்டுக்கும் இடையிலுள்ள பாகம்.

பா. எண் : 643—அழும்பான = பிடிவாதக்காரனை; கமனி = விண்வெளிப்பயணி; பொக்கிசம் = கருவூலம்; சாபித்தால் = சாபமிட்டால்; கொடுமூலம் = சினமுள்ள மூலநாதர்.

பா. எண் : 644—வல்லானல் = வல்லவனானால் (ஆற்றலுள்ளவனானால்).

பா. எண் : 645—குணப்பாடு = தன்மை, செய்கை முதலியவைகள்.

பா. எண் : 646—உறக்குடித்து = முற்றும் அருந்தி; ஆக்கினை = தண்டனை; முனிந்து = அஞ்சி.

பா. எண் : 647—அஞ்சல்பண்ணி = கைகூப்பி வணங்கி.

பா. எண் : 648—வேட்கவே = விருப்புள்ளவரை; தரித்திட் டேனே = தங்கினேனே.

பா. எண் : 649—துர்க்கந்தம் = தீயநாற்றம்; விப்பிராள் = பிராமணர்.

---

குருவென்றே தாகத்துக் கமுத மீந்தார்
 கொண்டுமே வத்துவொடு சுத்தி யீந்தே
அருவென்றே பாத்திரங்க ளீந்தீந் தையா
 வாயியவ ளுபதேச மனுக்கிர கித்துத்
தருவென்றே யவரவர்தம் வீட்டி லுள்ள
 தவலைசெம்பு மண்வெட்டி யுழவுப் பாறை
வெருவென்றே வெளிதண்ணில் குவிக்கச் சொல்லி
 விராட்டிப்போர் தனையடுக்கி நெருப்பிட் டேனே. (651)

இட்டுமே சிவந்தபினபு கொணர்ந்த சூத
 மெள்ளளவா யெடுத்துமே திவலை வீச
கட்டுமே கனகம்பத் தரையு மாச்சு
 கணக்காக வவரவர்க ளெடுத்துக் கொண்டார்
கெட்டுமே குளிகையிட்டுக் கமன மாகிக்
 கெடியான பொதிகைக்கு நிருதி மூலை
துட்டுமே சுணங்கவிருட் சத்தின் கீழே
 சோதியாம் பர்வதமுங் கிட்டத் தானே. (652)

கிட்டவே பிள்ளைகளை வைத்துக் கொண்டு
 கெடியான குளிகைகளைப் பண்ணிப் பண்ணித்
தட்டவே சாரணையைத் தீர்த்த பின்பு
 சாங்கமாய்ச் சூதமெல்லாந் குகையில் வைத்தே
எட்டவே குளிகைதன்னை யெடுத்துக் கொண்டங்
 கேற்றமாங் குளிகையிட்டுக் கமன மாகி
உட்டவே ரோமபுரிக் கடலிற்கண் வந்து
 துட்டான சித்தனைத்தான் கண்டிட் டேனே. (653)



கண்டுடனே யெழுந்திருந் தஞ்சல் பண்ணிக்
 கருத்தோடே மனமொன்றிக் கருணைக் கூர்ந்தே
அண்டுரைத்த மொழிப்படியே வந்தீ ரையா
 யடியேன்முன் செய்தபிழை பொறுத்தி டென்னப்
பண்டுரைத்த மொழியெனக்குச் சந்தோட மாச்சு
 பாங்கான கூபத்தைப் பத்திரமாய்க் காத்துத்
தொண்டுபட்டுச் சிவனுக்குச் சேதி சொல்லு
 சொரூபமாங் குளிகையொன்று சூட்டி னேனே. (654)

சூட்டியே கைக்கொடுத்து வகையுஞ் சொல்லிச்
 சூதத்தின் திறமையைச் சோதித்துக் காட்டி
ஓட்டியே யொருவருக்குங் கொடுக்காதே யன்று
 உண்மைசொல்லிக் குடுக்கைதனிற் சூதம் வாங்கி
ஆட்டியே யவ்விடம்விட் டனுப்பிக் கொண்டே
 அய்யர்நந்தி பதம்பார்க்க வண்டத் தேறி
நாட்டியே நூற்பதாமண் டத் தில்
 நந்தியடிதனைப் போற்றி நாடி னேனே. (655)

நாடினேன் குளிகைக்கு வகைக ளெல்லாம்
 நந்திசொல்லக் கேட்டுமே மனம கிழ்ந்தே
ஆடினே னிடம்விட்டுப் பொதிகைக் கிப்பா
 ஆதியா மரசடியிற் பாட்டர் பாதம்
ஊடினே னிணையடிக்கீழ்ச் சரணம் பண்ணி
 உற்பனங்கள் குளிகைதனக் குரையென் றேதான்
பாடினேன் மனமகிழ்ந்து பாட்டர் தானும்
 பாங்கான கருணையினு லுரைசெய் தாரே. (656)

செய்கின்ற வகையெல்லாந் தீர்க்க மாகச்
 செப்பியபின் கேட்டுமே தான்மனம கிழ்ந்து
பைகின்ற பாட்டரைத்தா னனுப்பிக் கொண்டு
 பயின்றெடுத்த காலாங்கி யையர் பக்கல்
தைகின்ற பாதத்தில் சரணம் பண்ணிச்
 சாங்கமாய்க் குளிகைசெய்யுந் தன்மை கேட்டுக்
கைகின்ற கருவெல்லபங் களங்கில் லாமற்
 கருத்துறைத்துக் கேட்டுமே களிகூர்ந் தேனே. (657)

களிகூர்ந்தே யையர்பதந் தொழுது நிற்கக்
கடாட்சித்துக் குளிகை தனைக்கட்டு மென்றார்
அளிகூர்ந்தே யையரைத்தா னனுப்பிக் கொண்டங்
கதிகமாஞ் சுணங்கவிருட் சத்தின் கீழே
எளிகூர்ந்து சாத்திர மேழா யிரத்தை
இடித்துமே சோதித்தொவ் வொன்ற தாக
வளிகூர்ந்தே யாயிரந்தான் மாற்று மட்டும்
மருவிநன்றாய்ச் சோதித்த மார்க்கந் தானே. (658)

மார்க்கமாங் குளிகையஃ தாயிரத் தெட்டு
வகையாகப் பண்ணிச்சா ரணையைத் தீர்த்தே
ஆர்க்கமா ஆயிரத்தெட் டண்ட மெல்லாம்
அர்ந்தங்கே யிருந்திருந்த தீதம் பார்த்துத்
தார்க்கமா யேழுகடல் தன்னிற் சுற்றிச்
சமர்த்தான மூலிகையைத் தின்ற பின்பு
தீர்க்கமாய்ச் சமாதிதனி லிருந்து கொண்டு
செயலழிந்தேன் கற்பாந்த காலந் தானே. (659)

கற்பாந்தஞ் சமாதியிலே யிருந்தி ருந்து
கருத்தறியாப் பிள்ளைகளுக் குபதே சித்து
விற்பாந்த மேதினிக்குள் மேருவலம் வந்து
விடுபட்ட நதிகளெல்லாம் பார்த்துத் தேறி
வற்பாந்த வுன்மனைத்தாய் வத்து ஈந்து
மார்க்கமெல்லாந் தாய்ச்சொல் மறந்தி டாமற்
குற்பாந்த குளிகையஃ தாயிரத் தெட்டுக்
கொடிகட்டி மலைமுழைஞ்சிற் குறித்திட் டேனே. (660)

குறித்திட்ட குளிகைதன்னை மலைமுழைஞ்சில் வைத்துக்
கொடிகட்டிச் செயத்தம்பங் கூறி னேனான்
பிறித்திட்ட பிள்ளைகட்குக் குளிகை யீந்து
பேராக வங்கங்கே மடமுண் டாக்கிப்
பறித்திட்ட கோடிட்டுக் ககனந் தன்னிற்
பாய்ந்துமே யண்டாண்ட பதங்கள் பார்த்தே
அறித்திட்ட வஞ்சுவரை தாண்டி யேறி
ஆயியவள் சிலம்பொலியில் மேவி னாரே. (661)



மேவியே சிலம்பொலியைக் கேட்டு நின்று
மீண்டுவந்தார் மிடுக்கான சீடர் தாமுந்
தாவியே நூல்படித்துத் தாட்சி யாகச்
சமரசமாங் குணங்கண்டாய் தர்க்க மில்லை
யாவியே குளிகையதன் பருவ மெல்லாம்
பயிற்றுவித்தே னாயிரமா மாற்று மட்டும்
தாவியே நூலதனில் சாங்க மாகச்
சமர்ப்பித்தே னேழாயி ரத்தைக் காணே. (662)

காணவே யிந்தமுறை செய்வ தாரு
கருத்தாகச் சாத்திரத்தை நம்பி னோர்கள்
பூணவே சிவயோகி இருடி சித்தர்
புகழாகத் தரிக்கையிலாங் குளிகை தன்னை
வாணவே வாசிகண்ட ஞானிக் குத்தான்
வாமத்தே நின்றுறைத் தபூசை யோர்கள்
வேணவே வெகுகாமி பெண்ணாசை கொண்டோன்
மிகையாக நோவெய்தி மாள்வன் தானே. (663)

மாளாதே தினந்தோறுங் கற்ப முண்ணு
மங்கையர்பால் மனஞ்சற்று மருவி டாதே
கேளாதே யாரையுந்தான் வயிர முண்ணு
கெட்டியா யுடலிறுகி நரையோ மாறுந்
தாளாதே நோய்களெல்லாந் தலைகெட் டோடுந்
தங்கம்போற் றேகமெல்லாந் சிவப்பு மாகுந்
தூளாதே மலைசிதறுங் கையால் குத்தில்
துப்புரவாய் வாசியாய் சேர்ந்தா டாதே. (66‌)

## கெந்தகச் சத்து

ஆடாதே கெந்தகத்தின் சத்துக் கேளு
'அழுத்தமாய் நெல்லிக்காய் கெந்த கந்தான்
ஏடாதே யிரண்டுபத்துப் பலந்தான் தூக்கி
பயற்றமாங் குரோட்டையுடைப் பழமும் போட்டுக்
கோடாதே கோவையுடைப் பழமும் போட்டுக்
கொடியான முசுமுசுக்கைப் பழமும் போட்டுப்
பாடாதே யமிக்கிராப் பழமும் போட்டு'
பாங்கன தக்காளிப் பழமும் போடே. [(665)

போடவே யோரிலைத்தா மரையுங் கூடப்
புகழ்கண்டங் கத்திரியின் பழமுந் தானுந்
தேடவே சிவந்தமாம் பழத்தின் ரேலுந்
தேன்வெண்ணெய்க் குன்றிவெல்லம் பலமிரண்டு
பாடவே வெங்காரம் பலமும் பத்துப்
பாங்காக வரைத்துநன்றாய் வில்லை கட்டி
வாடவே வங்கமென்ற நாளத் தூது
மணிமணியா யிறங்கியே சத்து மாமே. (666)

சத்தெல்லாம் நறுக்கியே யெடுத்துக் கொண்டு
தாக்கான காடெல்லா மரைத்தே யூது
பத்தெல்லாம் பொறுக்கியே யுருக்கிக் கொண்டு
பாங்கான வப்பிரகஞ் சாய்த்தாப் போல
முத்தெல்லா மூவைந்து ருக்கிச் சாய்த்து
மூணைந்தசத்து நாலினுக் கொன்று தங்கம்
மெத்தெல்லா மெழுகுகட்டிக் கிண்ணி வார்த்து
மேலாகச் சூதமிட்டுத் தங்கம் போடே. (667)

பொட்டுமே திரிகுணச்சல் சவ்வீரங் கூட்டிப்
புகழான பொற்றலையின் சாறு யிட்டே
ஆட்டுமே யயபத்துடுப்பால் கிண்டிக் கிண்டி
அருணன்போல் சிந்தூர மான பின்னர்
ஒட்டுமே யொன்பதிலு மாயிரத்தொன் றேடு
முற்பனமா யிருபதுட னைந்து மாற்றுக்
காட்டுமே சிந்தூரம் வீசமெடை யுண்ணு
கனகம்போல் கண்கூசுங் காந்தி தானே. (668)

காந்தியாஞ் சத்தெடுத்துக் கார மிட்டுக்
காந்தத்தை யெடைக்கெடைதான் சேர்த்துக் கொண்டு
வாந்தியாம் வங்கமென்ற நாளத் தூது
மாசற்றே யருணன்போல் ரவியு மாகுஞ்
சாந்தியாந் தங்கமஃ தாயி ரத்தில்
தாக்கினு நவலோகஞ் செம்பு மாகும்
ஏந்தியா மிச்செம்பு மதியில் தானு
மிரிரண்டா யிரத்தில் செம்பு மாமே. (669)



## நடேச விக்கிரகம்

செம்பான மதிதன்னை யாயிரமா மதியில்
சேர்க்கவே யொன்றுதான் கனகம் பத்தாம்
அம்பான வம்பலத்தி னடேச ரைத்தான்
ஆனந்த நிருத்தராய் வார்க்கச் சொல்லிக்
கம்பான வாயிரஞ்சேர் கனக மீந்தான்
கருத்துரைத்துச் சோழனென்ற ராசன் தானுந்
தெம்பான சிற்பருக்கங் கதிக விர்த்தி
செலவுகொடுத் தனுப்பியே செய்யென் றானே. (670)

செய்யென்று சோழனென்ற ராசன் தானுஞ்
சிற்பருக்குக் காவலாய் மனுடர் வைத்து
வெய்யென்று கேட்டதெல்லாங் கொடுக்கச் சொல்லி
வேலைக்கு மனுடரைத்தான் விரைந்து வைத்தான்
மெய்யென்று சிற்பருந்தான் மேன்மை யாக
வெளிமெழுகு கருமெழுகு விரைந்தெ டுத்துத்
தையென்று நிருத்தமிட்ட நடேசரைப் போல்
சமைப்பித்து மெழுகினுல் மண்கட் டினரே. (671)

கட்டியே மண்காய வைத்துப் பின்பு
கருக்காய்ச்சிக் கனத்தை யுருக்கி வார்த்தார்
எட்டியே பாயாம விடிந்து போயிற்
இப்படியே கருக்கட்டி யேழுதரம் வார்த்தான்
ஒட்டியே சிற்பருந்தாம் வார்க்க வார்க்க
வுருக்குலையச் சிற்பருந்தா மொடுக்க மாகி
அட்டியே சிற்பருந்தாங் கிலேச முற்றங்
கதிகவா லோசனையாய் யயர்ந்திட் டாரே. (672)

அயர்ந்திட்ட சொப்பனத்தி னடேச மூர்த்தி
ஆண்டியொரு சந்நியாசி யந்திப் போதில்
உயர்ந்திட்ட வுங்கள்பக்கல் வந்தப் போதே
உங்கள்மனக் கிலேசத்தை நீக்கு வான்பார்
துயர்ந்திட்ட சொப்பனத்தில் சொல்லிப் போட்டுத்
திருமூலர் தனையழைத்துக் கடுக நீபோய்
வியர்த்திட்ட விக்கிரகம் வார்ப்ப தற்கு
விரைந்துநீ வார்த்திடெனச் சொன்னார் தானே. (673)

சொன்னதோ ரனுக்கிரகந் தன்னி னுலே
திருமூலர் சிற்பரண்டை வந்து நின்று
பன்னதோர் பசியாலே யிளைப்பு மெத்தப்
பண்பாக வன்னமிடப் பண்ணு மென்ருர்
தென்னதோர் சிற்பருமுன் பாடு னக்குச்
'செயலழிந்து கிடக்கின்ற பாடெ மக்கு
அன்னதோ ராண்டிநீ போடா வென்ருர்
அவருள்சொப் பனங்கண்ட வொருவன் தானே. (674)

தரனென்ற வையரண்டை வந்து நின்று
சாட்டாங்கம் பண்ணியே யென்ன சொல்வான்
நானென்ற நடேசவிக் கிரகம் வார்த்தோ
நலமான வுருவாக வில்லை யையா
ஏனென்ற வேழுதரம் வார்க்க வார்க்க
விடைஞ்சலாய்ப் போகுதென் செய்வோ மென்ருர்
ஆனென்ற வாண்டியோர்கா சளவு செம்பை
அதிற்போட்டு வார்த்திடென்றே யீந்திட் டாரே. (675)

ஈந்திட்டுப் போனபின்பு தங்கத் தில்லிட்
டெழிலாக வுருக்கியே கருவில் வார்த்தார்
பாய்ந்திட்டு நடேசவிக் கிரக மாச்சு
பயந்தீர்ந்து சிற்பருஞ்சந் தோட மாகித்
தோய்ந்திட்டங் கிருக்கையிலே சோழன் வந்தான்
சிற்பரெல்லாந் திரள்கூட்ட மாக நின்ருர்
வாய்ந்திட்டு விக்கிரகம் வார்ப்பித் தீரோ
வகைகேட்க மனமகிழ்ச்சி யாய்ச்சொன் னுரே. (676)

சொன்னமொழி கேட்டுமே சோழன் தானுஞ்
சீக்கிரமாய்க் கருவண்டை வந்து பார்த்து
உன்னமொழி யுளியாலேசீவி டென்ரு னுற்றுமே
பார்ப்பளவில் செம்பே யாச்சு
தன்னமொழி தங்கமெல்லாந் திருடிக் கொண்டு
சாதகமாய்ச் செம்பாலே வார்த்திதீர் நீரே
அன்னமொழி யுள்ளபடி சொல்லு மென்ன
அதட்டியே யாக்கினையாய்க் கேட்டிட்டானே. (677)



கேட்டுடனே யெழுந்திருந் தஞ்சல் பண்ணிக்
கெட்டியா யொருக்காசு மெடுக்க வில்லை
ஊட்டுடனே யுள்ளபடி யாறு லொன்றே
உண்மைதான் சொல்லுகிறேங் கேளு மையா
வேட்டுடனே விக்கிரகம் வார்க்க வார்க்க
விண்ணமாய்ப் போகுதென்று நாங்க ளெல்லாம்
மாட்டுடனே மனக்கிலேச மாகும் போது
மகத்தான சொப்பனந்தான் கண்டிட் டேனே. (678)

சொற்பனந்தா னென்னவென்று கேட்டி ராகில்
சிவவேடத் தாண்டியவர் வருவார் நானை
உற்பனந்தா னவர்சொல்லை யுறுதி யாக
வுண்மையாய்க் கேட்டக்கா லுருவா மென்ருர்
அற்பனந்தா னுண்டியுமப் படியே வந்தார்
அவர்கொடுத்த காசெடையாஞ் செம்பு தன்னை
விற்பனந்தான் கூடவிட்டுக் கருவை வார்த்தோம்
வேறென்று மில்லையுண்மை விசேடந் தானே. (679)

விசேடந்தா னிம்மட்டு மென்று சொல்லி
மிடுக்கான சிற்பனுந்தா னுண்மை சொன்னுன்
திசேடந்தான் பொன்னெல்லாந் திருடிக் கொண்டு
திருட்டான மாருட்டம் பண்ணு கின்ரு
அசேடந்தா னுக்கினைதான் பண்ணச் சொன்னு
அடங்கலுந்தா மாலயத்தி ருக்கும் போது
நிசேடந்தா னுண்டியவர் வந்தா ரப்போ
நேரமென்ன சிற்பர்மேற் சொல்லென் ருரே. (680)

சொல்லென்று சொன்னமொழி கேளு மையா
சுயமாக விக்கிரகம் வார்க்கச் சொன்னேன்
தல்லென்று தங்கத்தை யெடுத்துக் கொண்டு
தளுக்கான செம்பாலே வார்த்தா ரென்ருன்
செல்லென்று சிற்பருந்தான் திருட்டு வித்தை
செய்யார்கள் நிசஞ்செய்வா ரென்று சொல்லி
வெல்லென்று வெள்ளியைத்தா னுருக்கச் சொல்லி
விக்கிரகந் தனிச்சீவி மேற்போட் டாரே. (681)

போட்டிட மூவாயிரத்தில் காணி தானும்
பொருந்தியதோர் வெள்ளியெல்லாந் தங்க மாச்சு
கோட்டிடவே திருமூலர் குளிகை போட்டுக்
கொடுவேகங் ககனத்தின் மறைந்து போனர்
மாட்டிடவே சோழன்மெத்த மனம கிழ்ந்து
மருவியே தவசியைத்தான் தேடிப் பார்த்தான்
காட்டிடவே காணமல் நாதாக்கள் மகிமை
கரைகண்டு சொல்லுதற்குக் கண்கொள் ளாதே. (682)

கொள்ளாத சிற்பருக்குக் கோடி கோடி
குறிப்பான வெகுமான மெல்லா மீந்து
விள்ளாதீர் விக்கிரக மகிமை யார்க்கும்
விரைந்துமே சீக்கிரத்தில் தீரு மென்று
துள்ளாதே சோழன்வி டுதிக்குப் போனன்
சிற்பருந்தாஞ் சீவையிலே யுளிக ளெல்லாம்
புள்ளாதே பொறிந்துமே தேய்ந்து போகும்
போராடிச் சீவியெல்லாங் கெட்டித் தாரே. (683)

கெட்டித்துச் சாத்திர நிர்ணயப் படிக்குக்
கெடியாக மூர்த்திகர மாக்கி வைத்துத்
துட்டித்துச் சோழனுக்குச் சேதி சொல்லிச்
சிறப்பாக வெகுமானம் பெற்று மீண்டார்
திட்டித்துக் கெந்தகத்தின் மகிமை சொல்லச்
சித்தமகிழ்ந் துந்திகுளிர்ந் துடல்பூ ரிக்கும்
எட்டித்துக் குளிகையது கைக்குள் ளாயிற்
ஏறலா மண்டரண்ட பதமுந் தானே. (684)

தானென்ற செம்பாலே குளிகை போடத்
தனித்ததோர் கிரீடங்கள் தட்டிப் பண்ணு
கோனென்ற குண்டலங்கள் புவுத்தி ரங்கள்
குறியான மோதிரங்கள் மாத்தி ரைக்கோல்
கானென்ற கைவளைய லுள்கட் டுகுவளை
கட்டியதோ ராபரணங் கனமாய்ப் பண்ணு
தேனென்ற செம்பைச்சிந் தூரித் துண்ணு
சிறப்பான சட்டைக்குச் செம்பு மாமே. (685)



## கெந்தகச்செம்புச் செந்தூரம்

ஆமென்று முன்னெடுத்த கெந்திச் செம்பை
யாச்சரியம் புளியிலைப்போல் தகடு தட்டித்
தோமென்று சுத்தித்த சூத மொன்று
சுத்தியா மிலிங்கமொன்று கார மொன்று
வாமென்று மனேசிலையு மொன்று கூட்டி
வாய்நீரால் மத்தித்துக் தகட்டிற் பூசிப்
போமென்று புடம்போடச் சிந்தூ ரமாகும்
பொருந்தியே வீசமெடை தேனி லுண்ணே. (686)

## சீடனுக்கு அறிவுறுத்தல்

தேனிலுண்ண நோய்மூன்றுஞ் சிதறி யோடுஞ்
சிந்துமே தாரைபோ லமிர்தந் தானும்
பானிலுண்ண வாயிபதம் பரிந்து காண் பாய்
பராபரத்தாய் கேட்டவெல்லாம் பாலிப் பானே
ஊனிலுண்ண வாசியெல்லா முள்ளொ டுக்கு
முறுதியா யுகாந்தவரைச் சடமு நிற்கும்
கானிலுண்ணக் காயமஃ திருப்புத் தூணுங்
கற்பாந்த காலமெல்லாங் கடிகை யாமே. (687)

கடிகையாஞ் சிவயோகி ஞானிக் குத்தான்
காமாந்தர் கண்கெட்டுக் கடிய மாள்வார்
குடிகைதான் வாமிக்காம் வாதிக் காகுங்
குறிகெட்ட பொய்யருக்குக் கூறெண் ணுது
படிகையாய் வேதாந்தி பதத்தை நித்தம்
பாங்காகக் கைப்பிடித்தோன் சித்த னுவான்
மிடிகையா யிலேச்சருக்குக் கொடுத்தாற் பாவ
மிகையாகி வறுமையினல் மாள்வன் தானே. (688)

மாளாதே யிருக்கவல்லோ கற்பஞ் சொன்னேன்
மாண்டிறந்து போதனன்ரே மனுட நாடே
கேளாதே மற்ருென்றுங் காதில் தானுங்
கிணீலென்ற சிலம்போசை காதிற் கேளு
தாளாதே யெந்நேரஞ் சமாதியிலே நில்லு
சகலசெந்து சீவனையுந் தன்னுயிர்போ லெண்ணு
வாளாதே சித்தர்தமை வகைகள் கேளு
வளப்பமெல்லா முப்பாலே மகிழ்ந்து பாரே. (689)

பாரென்ற காயசித்தி யுப்பி ஞலே
பறந்தோடுங் குளிகையெல்லா முப்பி ஞலே
வாரென்ற வாதமெல்லா முப்பி ஞலே
வாகியுள்ளே யாடுவது முப்பி ஞலே
பூரென்ற புடசெயமு முப்பி ஞலே
பொன்னேடிப் பழுப்பதுவு முப்பி ஞலே
ஆரென்ற வட்டாங்க முப்பி ஞலே
அதீதமா முப்பாலே யெல்லா மாச்சே. (690)

ஆச்சென்ற வுப்பறிந்து கொண்டோன் வாதி
ஆங்கார வைம்புலனை யறுத்தோன் யோகி
நீச்சென்ற வாறுதல முருவி யேறி
நிராதார மாறையுந்தா னறிந்தோன் ஞானி
கூச்சென்ற குளபதத்தில் அமுத வாரி
கொள்கியே பானித்தோன் குருவு மாகுந்
தீச்சென்ற விடங்கண்டு சிகாரத் தீயைச்
சேர்ந்திட்டோன் பிறவியையே ரறுத்தோன் தானே.(691)

காணவே கற்பங்கள் தின்னும் போதுங்
கனமான யோகங்கள் பார்க்கும் போதும்
வேணவே வெகுபாடாய் வெறுத்துக் காணு
மிரளாதே மனந்திடமாய் மீறிப் பாரு
ஊணவே யுள்மகிழ்ச்சி யனேகங் காணு
முற்றுமே பிடித்தவெல்லாஞ் சித்தி யாகும்
ஆணவே வாதத்தின் அதிச யங்கள்
அடங்கலரி தேடதனில் முடிவா காதே. (692)

ஆகாத மனந்தன்னை மறித்து வெட்டி
அஞ்சுரு வாணியைப்போல் வடித்தே யூனு
போகாத பொறிவழியே போகும் பெண்ணைப்
பின்தொடர்ந்து பிடியாதே காமத் தீயால்
சாகாத கால்தானே தென்று பாரு
தயிரியமாய் வேகாத தலையைப் பாரு
ஏகாத எவ்வுயிருந் தம்முயிர் போலெண்ணு
ஏதேது விக்கினமு மிழந்து போடே. (693)



இழந்திட்டுச் சமாதியிலே யிருந்து கொண்டே
எளிதாகக் கற்பத்தை விடாம லுண்ணு
உழந்திட்டு ருசிதன்னை யொழித்துப் போடங்
உத்தமித்தாய் பதம்போற்றிப் பானம் பண்ணு
வழந்திட்டு வாதத்தை வரிசை யாக
வயணமா யடிதொடுத் துயர வேறு
நழந்திட்டுக் கைமுறைகள் நழுவி டாமல்
நாடியே சாத்திரத்தை நன்ருய்ப் பாரே. (694)

பாரென்ருற் சும்மாதான் ப ர்க்கப் போமோ
பராபரையைப் பூசித்தால் பார்க்க லாகும்
தூரென்ருற் சாத்திரத் னிலைக்கொட் டாது
சுத்தசை தந்நியமா நூலைப் பாரு
காரென்ருல் வாசியைநீ மறந்தி டாமற்
காலூன்றி யுரைத்தக்காற் கருவெல்லாந் தோன்றும்
வாரென்ருல் மாயையைத்தா னறுத்திட் டக்கால்
வாராது நித்திரையும் பசியுஞ் சோம்பே. (695)

சோம்பலா யிருந்தக்காற் காயசித்தி யாமோ
சுணங்கனய்த் திரிந்தக்கால் வாதசித்தி யாமோ
கூம்பலாய் மனம்போனல் யோகசித்தி யாமோ
குளிகைக்குச் சாரணைதான் தீரா யானல்
ஆம்பலா யாகாச கமனம் போமோ
வடியான வழலைவிட்டால் சித்த ஞமோ
காம்பலாய்க் காமத்தின் வழியே சென்ருல்
காலூன்றுஞ் சிவயோகக் கருத்துப் போச்சே. (696)

கருத்தாகக் காயசித்தி பண்ண வேண்டில்
கருதியே வாதத்தைச் சித்தி யாக்கு
வருத்தாக வாதசித்தி கைக்குள் ளாக
மகத்தான யோகத்தில் மனத்தைப் பூட்டு
உருத்தாக யோகசித்தி யுறைத்துக் காண
உற்பனமாய் மாயிபத முகந்து நாட்டு
திருத்தாகத் தேவிபதங் காண வென்ருல்
சுத்தியொ டுவத்துவைத்துத் தியானம் பண்ணே. (769)

பண்ணியே லகிரிகொண்டு மேல்மூ லத்தில்
பாவனைகள் பலதீபம் பலகா ரங்கள்
உண்ணியே மனதொட்டி யுமையாள் பாத
முருகியே தம்பித்து விலங்கு மாட்டி
அண்ணியே யர்ச்சனைக ளெல்லாம் பண்ணு
அனேகசோ டசவுபசா ரத்தால் தானும்
உண்ணியே மனதொன்றி யேக ரித்தங்
கேற்றமாய் வாசிதன்னை யிருத்தி டாயே. (698)

இருத்தியே வாசியினுற் பூசை பண்ணி
லெட்டெட்டா மறுபத்து நாலுஞ் சித்தி
வருத்தியே மனங்குவிந்தா லாயி பாத
மறவாமல் மனதொன்றி வாசி மாட்டு
திருத்தியே யையம்புலனைச் சிதற வெட்டிச்
சீக்காம லாசையென்ற பாம்பை யோட்டிப்
பருத்தியே நூல்காய்ச்சுப் புடவை யான
பான்மைபோல் பலன்பெறலாம் பாரு தானே. (699)

பாரென்றே யெனையாண்ட காலாங்கி நாதர்
பக்குவத்தி லுபதேசம் பண்ணிப் பின்பு
கோரென்றே வாசியுடைக் குறியுங் காட்டிக்
குளிகையுடை முறைகாட்டி வாதங் காட்டி
தீரென்றே காயச்சித்திச் சிறப்புங் காட்டிச்
செயலான மனோன்மணியின் விலாசங் காட்டிக்
காரென்றே சதாநித்தங் கேசரியைத் தானுங்
கைநெல்லிக் கனிபோலக் காண்பித் தாரே. (700)

## அருஞ்சொற்பொருள்

பா. எண்: 651 முதல் 700 வரை

பா. எண் : 651—அமுதம் = தண்ணீர்; உழவுப்பாறை = உழவுப் படை (கட்டப்பாறை என்பாருமுளர்).

பா. எண் : 652—திவலை = துளி; பர்வதம் = மலை.

பா. எண் : கமனமாகி = (விண்வழிச்) சென்று.

பா. எண் : 654—அண்டுரைத்த = அன்றுரைத்த (எதுகைநோக்கி இங்ஙனம் ஆளப்பட்டுள்ளது).



பா. எண் : 656—அனுப்பிக்கொண்டு = அழைத்துக் கொண்டு

பா. எண் : 661—அஞ்சுவரை = ஐந்து ஆதாரங்கள், மூலதாரம் சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி என்பன; ஆயி = மனோன்மணித்தாயார்.

பா. எண் : 663—வெகுகாமி = பேராசைகொண்டோன்.

பா. எண் : 668 ஒன்பதிலும் = நவலோகக் கூட்டினில் வீசம் = பதினாறில் (1/16) ஒருபாகம். எடை = வராகனெடை (32 குன்றி யளவு).

பா. எண் : 670—நிருத்தர் = கூத்தர்; சபாநாயகர்

பா. எண் : 671—சிற்பர் = சிற்பிஎன்பதன் போலி. சமைத்து = செய்து.

பா. எண் : 672—உருக்குலைய = சேதமடைய. ஒடுக்கமாகி அச்சத்தால் ஒடுங்கி. நாணி கிலேசம் = மன வருத்தம்; அயர்ந்திட்டார் = தூங்கிவிட்டார்கள்.

பா. எண் : 674—பாடு = வருத்தம்.

பா. எண் : 675—இடைஞ்சல் = தடை, தீங்கு, கெடுதல்.

பா. எண் : 678—கெட்டியாய் = உண்மையாக; வின்னமாய் = (கூடிவராமல்) உடைந்து போய்.

பா. எண் : 679—உருவாம் = உருவப்படிமம் நிலைக்கும்.

பா. எண் : 680—மாருட்டம் = இயற்கைக்கு மாறான வேலைகள்.

பா. எண் : 681—சுயமாக = கலப்பின்றி.

பா. எண் : 682—கரைகண்டு = வரையறுத்து.

பா. எண் : 683—கெட்டித்தார் = திண்மையாக்கினார்.

பா. எண் : 684 நிர்ணயம் = வரையறை.

பா. எண் : 685—கிரீடங்கள் = தலைக்குச் சூட்டும் முடி. குண்டலங்கள் = காதணிகள்; பவுத்திரம் = ஒரு வகை மோதிரம் (இவ்வகை மோதிரத்தைத் தந்தையை யிழந்தவர்வலது மோதிர விரலில் அணிவர்); மாத்திரைக் கோல் = மந்திரவாதிகள் கைக்கோல்; உள் கட்டுக்குவளை = உருளைவடிவமான மணிபோன்ற வைகளை உள்ளடக்கிமலர் போலக் கட்டும் அணி கலன்கள்; சட்டை = மேல் தோல்.

பா. எண் : 686—பொருந்தியே = அமைதியாக.

பா. எண் : 691—குளபதம் = குருபதம் (அ) சகஸ்ராரம் என்னும் தானம்; பானித்தோன் = பருகினவன்.

பா. எண் : 693—இழந்து = துறந்து; தொலைந்து.

பா. எண் : 694 அடிதொடுத்து = தொடக்கத்திலிருந்து; வயணம் = முறை; வரிசை.

பா. எண் : 695—காலூன்றி = பிராணாயாமத்தில் கும்பகத்தில் அதிகநேரம் நிற்கப்பழகுதல்.

பா எண் : 696—சுணங்கனாய் = நாய்போன்றவனாக; வழலை = முப்பு (வகைகள்).

பா எண் : 697—கைக்குள்ளாக = வெற்றிபெற; சுத்தியொடு = ஆன்மசுத்தியுடன்; வஸ்து = (பரவஸ்து) மெய்ப்பொருள்; சோடசவுபசாரங்கள் = (1) தியானம், (2) ஆவாகனம், (3) பாத்தியம், (4) அர்க்கியம், (5) ஆசமனம், (7) நீராட்டல், 8) உடைகள், (9) உபவீதம், (10) சந்தனமணப்பூச்சு, (11) குங்குமத்திலகம்; (12) ஆபரணம், 13 அருச்சனை (14) தூபம், (15) தீபம், (16) ஆபரணம் எனப் பதினறு உபசாரங்கள் செய்தல்.

பா எண் : 698—ஏகரித்தால் = மனம் ஒன்றினல் (ஒருமைப் பட்டால்).

பா எண் : 699 — சிக்காமல் = பிடிபடாமல்; பான்மை = தன்மை, நீர்மை.

பா எண் : 700 — விலாசம் = இருப்பிடம்.

———

காண்பித்த குருவாங்கா லாங்கி நாதர்
கடாட்சத்தா லடியேனுங் கருத்தி லுன்னி
ஏண்பித்த வெழுகாண்டம் வாத ஞான
மேற்றமாங் காயசித்தி யோக சித்தி
கூண்பித்த குளிகைசித்தி கமன சித்தி
கூருத மந்திரத்தின் சித்தி யெல்லாம்
நூண்பித்த நூல்தனிலே நுட்ப மெல்லாம்
நுண்மையாய்க் கருமறைப்புஞ் சொல்லிட் டேனே. (701)

சொல்லிவிட்டேன் காயசித்தி செய்யும் மார்க்கஞ்
சோதித்தே யடிதொடுத்து நுனிமட் டுக்குஞ்
சொல்லிவிட்டேன் யோகத்தின் பயிற்சி யெல்லாஞ்
சுருதியா மனுபோகஞ் செய்த நேர்மை
சொல்லிவிட்டேன் சித்திக்கு வழலை வாங்கச்
செயமான சிந்தூரம் பண்ணுந் தூய்மை
சொல்லிவிட்டேன் காயசித்தி முந்நூற்றுச் சொச்சந்
திருமூல ரடியிணையென் சென்னி தானே. (702)



தானனகற்ப முந்நூற்றுச் சொச்சந் தாய்
சொன்னப் படியுண்டு சாதித் தேனன்
கோனன காலாங்கி நாதர் சொன்ன
குறிப்பெல்லாஞ் சேர்த்துக் கொண்ட மார்க்கந்
தேனன சிவயோக முனிவோர் தாமுஞ்
சிறுபாட்டர் சொன்னபடி சித்தி யானேன்
பானன பராபரமாம் மூல நாதர்
பாட்டர்சொன்னபடிதின்று பரீட்சித் தேனே. (703)

## வாதமுறை

பராபரமாம் பாட்டரென்ற மூலர் பாதம்
பணிவிடைகள் பலகாலம் பார்க்கும் போது
தராதரமாய் வாதமுறை யுபதே சித்தார்
சனகருடன் வியாக்கிரமர் சண்டி கேசர்
கராகரமாங் காலாங்கி இடப யோகி
கருத்துறைத்த சித்தர்க ளிருடி கட்கும்
நராதரமா நாதாந்த யோகி யோர்க்கும்
நாட்டினரி லகுவாகப் பாட்டர் தானே. (704)

லகுவாக நானதைத்தான் மனதி லுன்னி
நாட்டினே னேழாயி ரத்தில் தானும்
விகுவாகப் பாட்டர்சொன்ன வித்தை தன்னை
விளம்பினேன் வேதாந்தம் விரைந்து பார்க்கப்
பகுவாகப் பசியாலே ஞானம் போகும்
பாழான மாயையது கழற்றிப் போடும்
உருவாக யோகத்தை நிலைக்க வொட்டா
துற்பனமா யேறவரி தொடுங்கிப் போமே. (705)

ஒடுங்குமே வெகுநூல்கள் தம்மைப் பார்த்துப்
பிரந்தோடி சுட்டாலு மொன்றுங் காணர்
நடுங்குமே மனம்புண்ணய் ஞானம் பாழாய்
நாதாந்த சாரமெல்லாம் நழுவ லாகுங்
கடுங்குமே கரிகொள்ளக் காசில் லாமற்
கனபாடு பட்டுமே கசங்கிப் போவார்
விடுங்குமே வெகுகடினங் கட்டு மார்க்கம்
வேதையொன்றுங் காணமல் விழலாய்ப் போமே. (706)

## பஞ்சலோகப் பதங்கம்

போகாம லாசுவினிற் கட்டு மார்க்கம்
புத்தியில்லாப் பயல்களுக்கும் பூட்ட லாகும்
தாகாமல் சமுத்திரத்தி னமுரி தன்னைச்
சட்டியினிற் காய்ச்சியே யுப்பு வாங்கி
ஏகாம லிருபதுதான் பலமுந் தூக்கி
யிணங்கனஃ தீரைந்து பலமு மாகும்
நீகாம லிரண்டையுந்தான் பழச்சாற் றாலே
நீட்டியரைத் தொருசாமம் ரவியிற் போடே. (707)

போட்டபின் பிலிங்கமது பலந்தா னாலு
பொரிகாரம் பலநாலு பொரித்துக் கொண்டு
காட்டபின் பிலிங்கத்திற் கவசங் கட்டிக்
காயவைத்து முன்னெடுத்த வுப்பைத் தானுஞ்
சாட்டபின் சட்டியிலே பாதி வைத்துச்
சமரசமாய் லிங்கத்தை யதன்மே லேவைத்து
ஆட்டபின் பதின்மேலே யுப்பைத் தான்வைத்து
அழுத்தியே யடுப்பேற்றி யெரித்தி டாயே. (708)

எரித்திடுவாய் கமலம்போ னாலு சாம
மிதமாக வாறவிட்டு லிங்கம் வாங்கி
கரித்திடுவாய் கடல்தண்ணீ ருப்புக் காய்ச்சிக்
கம்பியுப் பதினோடே பாதி சேர்த்துக்
பரித்துமே பழச்சாற்றா லரைத்து லர்த்திப்
பரிதிதனிற் காயவைத்துப் பாங்காய்க் கேளு
புரித்துமே சட்டிதனிற் பாதி வைத்துப்
புகழாக வதின்மேலே லிங்கம் வையே. (709)

வைத்துமே யதின்மேலே பாதி யுப்பை
வளமாக வழுத்திமேற் சட்டி மூடி
பெய்த்துமே பிசகாமல் மண்ணைப் பூசிப்
பேரான வடுப்பேற்றி யெரித்தா யானால்
உய்த்துமே பன்னிரண்டு சாமந் தீப்போட்டு
உறைத்துமே யெரித்தக்கால் மேற்சட்டி தன்னில்
மெய்த்துமே ரசமெல்லா மேலே யேறி
மின்னல்போற் றளுக்காக வெளுப்பாம் பாரே. (710)



பாரென்ற சட்டிதனை யசையாமல் வைத்துப்
பற்றெல்லாந் தண்ணீரா னனையவே வைத்து
ஆரென்ற அயக்கத்தி தன்னாற் சீவி
அசையாமல் மேற்சட்டி மல்லாத்தி வைத்துத்
தூரென்ற ரசமெல்லாந் துடைத்து வாங்கிச்
சுத்தமாங் கல்வத்தி லிதனை விட்டு
வேரென்ற வெள்ளீயம் பலந்தா னொன்று
வெட்டையில்லாச் செம்பதுவும் பலமி ரண்டே. (711)

ரெண்டோடு வெள்ளீயம் விட்டு ருக்கி
நேர்ப்பாக வரப்பொடியைப் பழச்சாற்றில் விட்டுத்
துண்டோடு சுத்திபண்ணிக் குதிரைப் பல்லு
சுருக்கான பாடாண மரப்பொடிக்குப் பாதி
பண்டோடு பழச்சாற்றி லரைத்துக் கொண்டு
பாங்கான குகையில்வைத் துருக்கி நீதான்
அண்டோடு பலடிரண் டதனிற் சேரு
ஆண்மையாம் நாகமிரு பலமுந் தானே. (712)

தானான நாகத்தை வில்லை வார்த்துத்
தாக்கான கல்லுப்புப் பலமும் நாலு
கானான கல்வத்தி லிதனைப் போட்டுக்
கள்ளிப்பால் தன்னாலே யரைத்துப் பின்பு
பூனான வோட்டிலிட்டுப் புடத்தைப் போடு
பின்புமரைத் தரைத்துப் புடமும் போடு
ஊனான வுப்பதனைக் கள்ளிப் பாலா
லுறுக்கரைத்து நாகத்திற் கவசங் கட்டே. (713)

கட்டியே கனமாகப் புடந்தான் பத்துக்
கவசமஃ தசையாமற் போட்ட பின்பு
வெட்டியே வெள்ளீயமிப் படியே போடு
மிக்கான காரீய மிப்படியே போடு
தட்டியே வேள்ளீயம் பலமி ரண்டு
சார்வான நாகமது பலமி ரண்டு
தெட்டியே காரீயம் பலமி ரண்டு
செம்பதுவும் பலமிரண்டி ரண்டே. (714)

ரெண்டோடு நாலையுந்தான் விட்டு ருக்கி
நேராகப் பொடிபண்ணிக் கல்வத் திட்டுத்
துண்டோடு முன்னெடுத்த சூதந் தானுந்
தூக்கியமுன் னைந்துக்குஞ் சமனாய்ச் சேர்த்துக்
குண்டோடு கூடவிடு மருந்து கேளு
கூறான துரிசியொடு மிருதார் சிங்கி
விண்டோடு மரிதாரம் லிங்கந் தானு
மிடுக்கான குதிரைப்பல் கவுரி தானே. (715)

தானென்ற சவ்வீரஞ் சிலையுங் கெந்தி
தலையான சவுக்காரம் ரசகர்ப் பூரந்
தேனென்ற சிந்தூரம் வெங்கா ரந்தான்
சேர்த்தெல்லாம் ரசத்தினெடை சரியாய்க் கூட்டிக்
கானென்ற கல்வத்திற் போட்டுக் கொண்டு
கடிசான சாராயம் விட்டங் காட்டி
நானென்ற நாற்சாம மரைத்து மைபோல்
நலமாக வில்லைகட்டிக் காயப் போடே. (716)

காய்ந்தபின் அடிகனத்த சட்டி தன்னிற்
கசகாமல் நடுவைத்து ரவிகிண்ணி மூடி
ஆய்ந்தபின் பரப்பொடியும் வெள்ளைக் கல்லு
மண்டத்தின் வெண்கருவா லரைத்துக் கொண்டு
வாய்ந்தபின்பு கிண்ணிசுற்று மருவப் பூசி
வச்சிரமா மண்ணதுவும் மேலே பூசி
நேய்ந்தபின்பு நிழலுலர்த்தி மணலைக் கொட்டி
நிருவாணி பூசைசெய் தடுப்பி லேற்றே. (717)

அடுப்பேற்றி நாற்சாமந் தீபத் தீதா
ஞனபின்பு நாற்சாமங் கமலத் தீதான்
கடுப்பேற்றிக் காடாங்கி நாற்சா மந்தான்
கணக்கதுவு மானபின் பாறப் போட்டுத்
தடுப்பேற்றி மணலெல்லாந் தள்ளிப் போட்டுச்
சட்டியினில் மருந்ததுவுங் கிண்ணி தானும்
உடுப்பேற்றி யுடைத்திட்டுக் குகையிற் கொட்டி
யுருக்கியே மணியாக வாங்கிக் கொள்ளே. (718)



வாங்கியதோர் மணிதனக்கு நாலி லொன்று
மாசற்ற பறியதுவுங் கூடத் தாக்குத்
தூங்கியதோர் துய்யானி லிருபதுக் கொன்று
சூட்டினால் மாற்றதுவு மேழு காணுந்
தேங்கியதோ ரிதைவிற்றுச் செலவு செய்து
சிவயோக நெறிதன்னில் சேர்ந்துக் கூடு
பாங்கியதோர் பசிபடக்கக் கற்ப முண்ணு
பலநினைவு மறுத்துவிட்டுப் பதியிற் சொக்கே. (719)

சொக்கியே யாத்தாளைச் சூட்சங் கேளு
சுளுக்காக வாதத்தின் நேர்மை சொல்வாள்
மக்கியே மனதொன்றி மவுன மாகி
மறுதொழிலைப் பாராதே யுப்பைப் பாரு
உக்கியே யுப்பேதென் றுயே யானால்
ஊசரமாம் பூமிக்குள் நாத வுப்புத்
தக்கியே சாகரத்தி னுப்ப தொன்று
தனிப்பிறகு கம்பியுப்பு மூன்று மாச்சே. (720)

மூனாலே கட்டினங்கள் கோடி யாகு
மூவுலகுஞ் சஞ்சரிக்கக் குளிகை யாகும்
வானாலே யிறுக்கிவைக்கு மனேகங் காலம்
வண்மையாஞ் சடத்துக்கு வருத்த மில்லை
ஊனாலே யொருவரையுங் கேட்க வேண்டா
முத்தமிழ்த்தாய் பதந்தன்னை யுறுத்திப் பாரு
ஆனாலே குளிகையினி லட்டமா சித்தி
யாடலாம் பதங்கத்தின் சூதந் தானே. (721)

சூதந்தா னசுதன்னிற் சொக்கிப் போகுஞ்
சுருக்கான குருபண்ணு சிந்தூரம் பண்ணு
காதந்தான் களங்குபண்ணு விம்பம் பண்ணு
கயிலையுறை சிவன்பண்ணி வைத்துப் பூசி
வாதந்தான் வெகுதூர மெட்டி யோட
வகையான வுபரசத்தின் கடுஞ்சத் தூட்டு
வேதந்தா னத்திடத்துக் கொக்கு மொக்கும்
விடுவித்தால் சாரணைதான் விவேக மாமே. (722)

விவேகமாம் பதங்கமொன்று விளம்பக் கேளு
வெகுசுளுவா மிதின்வேதை விண்தான் கொள்ளா
தவேகமா மயப்பொடிதான் பலமும் பத்தா
மாண்மையாம் பழச்சாற்றி லூற வைத்து
நவேகமா நாலாம்நாள் தண்ணீரிற் கழுவி
நயமாக ரவியில்வைத் தெடுத்துக் கொண்டு
குவேகமாம் பொடிநிறுத்துப் பாதி தானுங்
குதிரைப்பல் பாடாணம் போட்டி டாயே (723)

போட்டிடவே வெங்கார மெட்டி லொன்று
பொருந்தியே வாழைக்காய்ப் பாலி னாலே
ஆட்டிடவே நாற்சாம மரைத்த பின்ன
ரடங்கவே குகைக்குள்ளே வைத்து மூடித்
தூட்டிடவே யிருதுருத்தி வைத்தே யூதிச்
சுட்டியினாற் குத்தியே யுருக்கிப் பார்த்து
ஓட்டிடவே யோடுதன்னிற் சாய்த்துப் போட
வுருகியே மணிமணியா யிருக்கும் பாரே. (724)

பாரென்ற செம்புதனை யுருக்கிக் கொண்டு
பதினொரு தரந்தானும் நொச்சிச் சாற்றில்
தாரென்ற சாய்த்துமே பலமி ரண்டு
தாக்கான முன்னுருக்கு மிரும்பி ரண்டு
நாரென்ற நாகமது பலமு நாலு
நற்கட்டிக் காரீயம் பலமு நாலு
வேரென்ற வெள்ளீயம் பலமு நாலு
மிரளாதே யெண்ணெய்விட் டுருக்கிக் கொள்ளே. (725)

உருக்கியே வில்லைபோ லேவார்த் துக்கொண்
டுற்பனமாங் கல்லுப்புச் சேரு மூன்று
நருக்கியே கல்வத்திற் போட்டுக் கொண்டு
நமனாகுங் கொடிக்கள்ளிப் பாலை வார்த்தே
இருக்கியே சாமந்தா னரைத்த பின்பு
லேசாக வில்லைகட்டி யோட்டில் வைத்துக்
கருக்கியே கனபுடமாய்ப் போட்டு வாங்கிக்
காரியமாய் முன்போல வரைத்துக் கட்டே. (726)



கட்டியே யரைத்தரைத்தைந் துபுடம் போட்டுக்
கடந்தபின்பு கள்ளிப்பால் தனில ரைத்து
திட்டியே முன்னுருக்குந் திரிவங் கத்தில்
செப்பமாய்க் கவசமது கட்டிப் பின்பு
பட்டியே கனபுடமாய்ப் பத்துப் போடு
பாங்கான திரிவங்கங் கட்டிப் போகும்
புட்டியே கவசத்தை வாங்கிப் போட்டுப்
பொருந்தநீர்ப் பூலாவி னிலையை வாங்கே. (727)

பூலாவி னிலைச்சமனாய்ப் பிண்ணாக்குச் சேர்த்துப்
பொருந்தவே நீர்விட்டி டித்துக் கொண்டே
ஆலாவின் கனவடையா யிரண்டு தட்டி
யதில்வைத்து வங்கத்தை யடையால் மூடிக்
கூலாவின் கோணிகையின் பட்டைச் சுற்றிக்
குளிரமண்செய் தாயிரமா மெருவி லேதான்
காலாவின் கனபுடமா ப்ப் போட்ட பின்பு
கனல்குளிர்ந் தாறியபின் னெடுத்துக் கொள்ளே. (728)

எடுத்துமே யாறுபலம் நிறுத்துக் கொண்டங்
கிசைந்தவய மிரண்பலஞ் செம்பி ரண்டு
படுத்துமே பத்தையுமொன் றுகவு ருக்கிப்
பாங்கான கல்வத்திற் பொடித்துக் கொண்டு
நடுத்துரச கர்ப்பூரம் பலமு மூன்று
நலமான லிங்கமது பலமும் நாலு
விடுத்துமே வீரமது பலமும் மூன்று
மேன்மையாம் வெங்காரம் பலமும் மூன்றே. (729)

மூணாகு மனோசிலையு முன்கட் டுப்பு
முழக்கமாம் பொட்டனையும் பலமும் மூன்று
நாணாகு மிவையெல்லாங் கல்வத் திட்டுக்
கடிந்தரைத்து வெடியுப்பு நீரி னாலே
காணாகு நாற்சாம மரைத்து மைபோல்
நலமான குழிச்சட்டிக் குள்ளே போட்டு
வீணாகும் ரவிக்கிண்ணி பலந்தா னைந்து
மேல்கவிழ்த்துச் சந்துக்கு மண்ணைப் பூசே. (730)

பூசியே யடுப்பேற்றிப் பன்னிரண்டு சாமம்
புகழாக வெரியிடவே மார்க்கங் கேளு
வாசிடவே கிண்ணிக்கு வச்சிரமண் செய்து
மண்கொட்டிச் சட்டிமட்ட மேல்சட்டி மூடி
வேசியே மேல்சட்டி மண்ணைச் செய்து
மிக்கான சக்கரமா மடுப்பி லேற்றிக்
காசியே கமலம்போ லெரியிட்டு வாங்கிக்
கசகாமல் மருந்தெடுத்துக் கருத்தாய்க் கேளே. (731)

கேளென்ற கிண்ணியடி மருந்து கூடக்
கெட்டியாங் குகையிலிட்டு ருக்கிக் கொண்டு
காளென்ற கல்வத்தி லிதனைப் போட்டுக்
கடிந்தரைத் தொன்றுக்கு முக்கால் சூதம்
தூளென்ற சூதமுக்கா லிங்கம் போடு
சூட்சமாயி லிங்கமுக்கால் சிலையைப் போடு
தேளென்ற சிலைமுக்கால் காரம் போடு
சிலையரைதான் சீனத்தைத் தெரிந்து போடே. (732)

தெரிந்துமே பொற்றலையின் சாற்று லாட்டிச்
சிறுபுடமா யரைத்தரைத் திரண்டு போடு
கரிந்துமே களங்காகுஞ் செம்பி ரண்டு
கனகமஃ தொன்றுமதி யெட்டு மாகும்
பரிந்துமே களங்கொன்று கார மிட்டுப்
பரிவாக வுருக்கியே ஊதிப் போட
அரிந்துமே மாற்றேழு காணுங் காணு
மரிதான முறையிதுதான் விவேக மாமே. (733)

## மதிப்பதங்கம்

விவேகமாம் பதங்கமொன்று விளம்பக் கேளு
வெள்ளியென்ற கிண்ணியது பலந்தான் மூன்று
அவேகமாம் பதங்கரசம் பலந்தான் மூன்று
அழகான கல்வத்தி லிதனை விட்டுப்
பவேகமாம் வெள்ளையென்ற பாடா ணந்தான்
பண்பாக வராகனெடை மூன்று தூக்கிக்
குவேகமாங் குதிரைப்பல் பாடா ணமூன்று
குணமான கெவுரிப்பா டாணம் மூன்றே. (734)



மூன்றேடு வீரமது மூன்று மாகும்
முகுந்தனுடைத் தேவியது மூன்று மாகும்
வான்றேடு லிங்கம் வராகன் மூன்று
மனேசிலையும் வராகனெடை மூன்று மாகுந்
தூன்றேடு தொட்டியது மூன்று மாகுஞ்
சுத்தமா மிருதாரு சிங்கி மூன்று
கான்றேடு கற்பரியும் வராகன் மூன்று
கணக்கெல்லா முப்பதுகா செடையு மாச்சே. (735)

ஆச்சென்ற முன்பஞ்ச லோகந்தான் மூன்ற
ழிஞ்சினுடைத் தயிலத்தி லரைத்து மைபோல்
நாச்சென்ற நடுச்சட்டிக் குள்ளே வைத்து
நலமான மதிக்கிண்ணி மேலேயிட்டு
தாச்சென்ற சந்துக்குச் சீலை செய்து
சக்கரமா மடுப்பேற்றி யெரிநாற் சாமந்
தேச்சென்ற தீபம்போ லெரியிட் டபின்பு
சிறக்கின்ற கமலத்தின் தீயைப் போடே. (736)

போட்டுமே நாற்சாம மான பின்பு
பெரியகா டாக்கினிதான் நாலு சாமம்
மூட்டுமே முத்தீயு மான பின்பு
முகியாம லாறவிட்டு மருந்தை வாங்கிக்
கூட்டியே குகையிலிட்டுக் காரம்விட் டுருக்கிக்
குளிரவைத்துச் சரியெடைக்குச் செம்பு சேர்த்து
வீட்டியே மதிதனில்முப் பதுக்கொன் றீய
விரைந்தேழு மாற்றுமாய் விளங்குந் தானே. (737)

தானான களங்கிலே நாலத் தொன்று
தாக்கியே தங்கத்தைக் கூடச் சேர்த்துப்
பானான தங்கவெடை நாகஞ் சேர்த்துப்
பச்சைரச நாகவெடை யொக்கக் கூட்டிக்
கானான சரக்குக்கு நாலத் தொன்று
கலந்திடுவாய் கெந்தகத்தை நிறுத்துப் போட்டுப்
பூனான பொற்றலையின் சாற்று லாட்டிப்
புகழான மணல்மறைவில் புடத்தைப் போடே. (733)

புடம்போடு மணல்மறைவி லேந்து தானும்
　　பிறகெடுத்து வெளிப்புட மைந்து போடு
தடம்போடு புடம்பத்துத் தீர்ந்த தாலல்
　　சாங்கமாய்க் களங்காகு நூற்றுக்கொன் றீவாய்
படம்போடு பத்தரையே மாற்றுக் காணும்
　　பாங்கான காவிக்கு முப்புக் குமேகா
கடம்போடு களங்குதனைக் குன்றி யுண்ணு
　　கண்கொள்ளாச் சோதிமய மாகும் பாரே. (739)

## அயச் செப்புதப் பதங்கம்

மயமான பதங்கத்தின் மகிமை கேளு
　　மற்றோர்க்குக் காட்டாதே யிந்தப் போக்கை
அயமான பொடிதானும் பலமும் பத்து
　　மதரில்லாச் செம்புபொடி பலந்தான் பத்துங்
கயமான விரண்டையுந்தான் கல்வத் திட்டுக்
　　கடிசான விலுப்பையுடைப் பட்டைச் சாறு
நயமான விதில்விட்டே யூற வைத்து
　　நாலாநாள் சாறுவிட் டரைத்து மைபோல்
அயமான வகலிலிட்டு மேலும் மூடி
　　யைம்பதெரு வடுக்கியே புடத்தைப் போடே. (740)

அடுக்கியே யரப்பொடியுஞ் செம்பி னுடைப் பொடியு
　　மதிருகின்ற பழச்சாற்றில் சுத்திபண்ணு
பொடுக்கியே புடம்போட்ட மருந்தை வாங்கிப்
　　புகழாக வெட்டிலொன்று காரம் போட்டுக்
குடுக்கியே குகையிலிட்டு ருக்கி யாட்டிக்
　　கொட்டியே மணியாகப் பொறுக்கிக் கொண்டு
எடுக்கியே யெட்டிலொன்று வெள்ளீ யம்போட்
　　டிதமாக வுருக்கியே கிண்ணி வாரே. (741)

கிண்ணிதான் மூன்றுபல வெடையில் வாரு
　　கூட்டினதோர் பதங்கரசம் பலந்தான் மூன்று
கண்ணியே யஞ்சனக்கல் காசெடைதா னேந்து
　　கஞ்சமா நிமினைக்கா செடைதா னேந்து
விண்ணியே காந்தங்கா செடைதா னேந்து
　　மிதமாக இவையாவும் கூடத் தூக்கி
நண்ணியே வெள்ளையது காசு மூன்று
　　நாற்றந்தான் மூன்றுகா செடையே போடே. (742)



போடென்ற குதிரைப்பல் காசு மூன்றும்
　　பொலிவான கவுரியது காசு மூன்றும்
ஆடென்ற வரிதாரங் காசு மூன்று
　　மழுத்தமாங் கற்பரிதான் காசு மூன்றுந்
தேடென்ற சிலையதுதான் காசு மூன்றுஞ்
　　சிங்கிதொட்டிக் காசதுவு மூன்று மாகும்
வேடென்ற வீரமது காசு மூன்று
　　மிரளா மலிவையெல்லாங் கல்வத் தூட்டே. (743)

ஊட்டியே பொற்றலையின் சாற்று லாட்டி
　　யுறுதியாய் நாற்சாம மான பின்பு
காட்டியே வில்லைபண்ணிக் காயப் போட்டுக்
　　கனமான சட்டிதனில் நடுவே வைத்து
நாட்டியே கரும்பிசெம்பி யென்ற கிண்ணி
　　நலங்காமல் வைத்துமே முன்மண் பூசு
தீட்டியே தீபாங்கி கமலம் போடு
　　சிறந்தகா டாக்கினியும் போட்டு வாங்கே. (744)

வாங்கியே பன்னிரண்டு சாம மானல்
　　வயிரவர்க்குப் பூசையிட் டாறப் போடு
தேங்கியே மருந்தெல்லாங் கூட வாங்கிச்
　　சிறந்தவெங் காரமது கூடப் போட்டே
ஓங்கியே கிண்ணியோ டுருக்கி வாங்கி
　　யுயருகின்ற மதிதன்னில் நூற்றுக் கொன்றங்
கூங்கியே கொடுத்தக்கா லாறு மாற்று
　　முற்பனமா யொன்ருக வுருக்கிக் கொள்ளே. (745)

ஒண்ணுன களங்கத்தை யுருக்கிக் கொண்டே
　　யூட்டுவாய் நான்கினுக் கொன்று தங்கம்
கண்ணுன தங்கவெடை நாகம் போடு
　　காரந்தான் காசெடையே கூடத் தாக்கு
கொண்ணுன கோலாலே யுறவாய் கிண்டிக்
　　கொட்டியே கல்வத்திற் பொடியாய்ப் பண்ணித்
தண்ணுன தங்கத்தி லிரட்டிச் சூதந்
　　தாக்கியே பொற்றலையின் சாற்று லாட்டே. (746)

ஆட்டியே சரக்கெல்லாம் பொடியாய்ப் பண்ணி
யமர்த்தியே சரக்குக்கக் கால்தான் கெந்தி
ஓட்டியே கெந்தகத் தையோட்டில் வைத்
துருக்கியுறு கின்றபொடி தன்னையதிலே விட்டு
நாட்டியே தூள்போல வறுத்துப் போடு
நல்மான பொடிபண்ணி நிறுத்திக் கொண்டு
பூட்டியே காசியென்ற மேருவிலே போட்டுப்
புகழாக வாலுகையின் மேலே யேற்றே. (747)

ஏற்றியே முத்தீயு மூட்டு மூட்டங்
கிரும்பான கதிராலே கிண்டிப் பாரு
ஆற்றியே யருணன்போல் சிந்தூர மாகு
மைஞ்ஞூற்றுக் கொன்றிடவே கனக மாகும்
பாற்றியே பணவெடைதான் பாலி லுண்ணு
பத்தியமா யிருந்துகொண்டு வாசி மாட்டு
காற்றியே மண்டலந்தா னுண்டா யானல்
காயசித்தாங் கண்கொள்ளாச் சோதி யாமே. (748)

## இரசப் பதங்கம்

சோதியாஞ் சூதமொன்று சொல்லக் கேளு
சுத்தித்த சூதமது பலந்தா னெட்டு
வாதியாங் கெந்தகமு மெட்டி லொன்று
மருவிநன்ரு யோடுதனி லுருக்கிக் கொண்டு
ஆதியாஞ் சூதத்தை விட்டுக் கிண்ட
வரிபதாங் கருப்பான தூளு மாகும்
நீதியாந் தோண்டியஃ திரண்டெ டுத்து
நெருக்கியே வாயொன்ற வுறைத்துப் போடே. (749)

உறைத்துமே ஊமத்தஞ் சாறெ டுத்தங்
குள்தோண்டி தனிற்பூசி யுலரப் போடு
கறைத்துமே தண்ணீரில் கறியுப் பிட்டுக்
கசங்காமல் வடிகட்டிக் காய்ச்சிக் கொண்டு
திறைத்துமே செங்கலென்ற பொடிமாத் தானுஞ்
சேரிரண்ட ளந்துகொண்டு காய்ச்சு முப்பை
அறைத்துமே படியிரண்டு கூட வேபோட்
டாகவொன்ருய்க் கலக்கியே தோண்டிதனிற் போடே. (750)



## அருஞ்சொற்பொருள்

பா. எண்: 701 முதல் 750வரை

பா. எண் : 701—கடாட்சம் = கண்கடை நோக்கு.

பா. எண் : 702—நுனி = முடி; சென்னி = தலை.

பா. எண் : 703—தாய் = உன்மனித்தாய்; சோதித்து = ஆய்ந்து.

பா. எண் : 704—வியாக்கிரமர் = புலிப்பாணி, லகுவாக = சுருக்கமாக.

பா. எண் : 705—உன்னி = நினைந்து; கழற்றிப்போடும் = நீக்கிவிடும்; உற்பனமாய் = உறுதியாக.

பா. எண் : 706—நழுவலாகும் = விலகிடும்; கரிகொள்ள = அடுப்புக்குக் கரி வாங்க; கசங்கி = பொலிவிழந்து; விழல் = கோரை (களை).

பா. எண் : 707 = ஆசுவினில் = விரைவில்; பூட்டலாகும் = கற்பிக்கக்கூடும்; அமுரி = சிறுநீர்;

பா. எண் : 710—தளுக்காக = ஒளியோடு.

பா. எண் : 711—பற்று = சீலமண்பிடிப்புகள்.

பா. எண்: 720—ஊசரம் (ஊஷரம்) உழமண் நிலம்; அல்லது களர் நில மென்பர்; சாகரம் = கடல்; கம்பியுப்பு = வெடியுப்பு (தீட்சை செய்யப்பட்டது).

பா. எண் : 721—வாணுளை = வயதை; ஆயுளை, இறுக்கிவைக்கும் = நிலைபெற்றிருக்கச்செய்யும்; உறுத்திப்பாரு = தியானத்தில் லயித்திரு (சமாதி கூடி இருத்தல்).

பா. எண் : 722—விம்பம் = (கடவுள்) படிமம்; விக்கிரகம்; உறை = வாழ்.

பா. எண் : 728—பிண்ணுக்கு = இலுப்பைப்பிண்ணுக்கு.

பா. எண் : 730—ரவிக்கிண்ணி = தாம்பிரக்கிண்ணி.

பா. எண் : 735—முகுந்தனுடைத்தேவி = தாளகம் (மால்தேவி).

பா. எண் : 736 = மதிக்கிண்ணி = வெள்ளிக்கிண்ணி.

பா. எண் : 739—ஏகா = போகாது.

———

போட்டுமே பாதிதனில் ரசத்துள் வைத்துப்
பின்புமே பொடிதானும் பாதி யேபோம்
ஆட்டுமே அமுத்திநன்ருய் முன்சாறு பூசு
மசகாமல் தோண்டிதனைப் பதிய வைத்துக்
காட்டுமே கனமாக மண்ணைக் கட்டிக்
காயவைத்துச் சக்கரமா மடுப்பி லேற்று
நாட்டுமே யெண்சாமந் தீயைப் போட்டு
நலங்காம லாறவிட்டுக் கிடத்திப் போடே. (751)

கிடத்தியே மண்கட்டில் தண்ணீர் விட்டுக்
கெடியாக வூறியபின் மண்ணைத் தள்ளி
மடத்தியே மயிர்க்குச்சுத் தன்னுல் வாங்கி
சுறண்டியெலாஞ் சிந்தாமல் வைத்துக் கொண்டு
நடத்தியே குவிந்தசட்டி யிரண்டெ டுத்துச்
சாங்கமா யுருக்கியே யொன்றப் பார்த்துத்
துடத்தியே ஊமத்தஞ் சாறெ டுத்துத்
துப்புரவாய்ப் பூசியே யொன்றி டாயே. (752)

ஒன்றியதோர் சட்டியொன்றில் சாறு பூசி
யுலரவைத்து முன்போல வுப்பை வைத்து
நண்ணியே ரசத்தூளை யதின்மேல் வைத்து
நாட்டியே சட்டிதன்னைப் பதித்து மூடி
மண்ணியதோர் மண்ணதனைப் பிலக்கச் செய்து
வளமான சக்கரமா மடுப்பி லேற்றிக்
கண்ணியே நால்சாமத் தீயெ ரித்துக்
கசகாம லாறவிட்டெ டுத்து வாங்கே. (753)

எடுத்துமே ரசத்தூளை யியல்பாகத் தான்வைத்
தேற்றமாந் துரிதியது சேரு நாலு
துடுத்துமே கட்டியாய்ப் பொறுக்கிக் கொண்டு
துடியான கெந்தியது சேரு மூன்று
திடுத்துமே சூடான துசேரி ரண்டு
சூடனையுங் கெந்தியையுங் கல்வத் திட்டு
நடுத்துமே நாற்சாமம் பழச்சாற் ருலே
நலமாக விரண்டையுந்தா னரைத்தி டாட்டே. (754)



அரைத்திடுவாய் பழச்சாறு தன்னி ஞலே
ஆண்மையாந் துரிசியென்ற கட்டி மேலே
கரைத்திடுவாய் கவசமாய்க் கட்டிக் கட்டிக்
காயவைத்துக் கிளிஞ்சிலென்ற சுண்ணந் தன்னை
அரைத்திடுவா யதன்மேலே கவசங் கட்டி
மார்க்கமாய் மண்சீலை யொன்று செய்து
புரைத்திடுவா யைம்பதெரு வடுக்கி வைத்துப்
புகழாகப் புடம்போட்டெ டுத்துக் கொள்ளே. (755)

எடுத்துமே சுண்ணும்புக் கவசந் தள்ளி
மிதமான மருந்தெல்லாங் குகையி லிட்டுக்
கடுத்துமே காரமிட் டுருக்கி யாட்டு
கண்விட்டங் காடியே ரவியு மாகுங்
கெடுத்துமே ரவியினல் கிண்ணி கொட்டிக்
கெடியாகப் பலம்நாலு வைத்துக் கொண்டு
கடுத்துமே பதங்கரசம் பலமு நாலு
கல்வத்தில் போட்டுமே கருவைக் கேளே. (756)

கருவான வெள்ளையென்ற பாடா ணந்தான்
கனமான குதிரைப்பல் கவுரி சிங்கி
திருவான வீரமொடு மால்தேவி சிலையுஞ்
சிவப்பான துத்தமொடஞ் சனக்கல் லிங்கம்
மருவான வகைநாற்கா செடையே தூக்கி
மகத்தான பதங்கரசத் தொக்கப் போட்டுப்
பொருவான பொற்றலையின் சாற்ரு லாட்டிப்
பேராக வில்லைபண்ணிக் காயப் போடே. (757)

காய்ந்தபின் படிகனத்த சட்டியிலே வைத்துக்
கவியவே ரசக்கிண்ணி தன்னுல் மூடி
மாய்ந்தபின் முன்மண்ணை மருவப் பூசி
மணல்கொட்டிச் சக்கரமா மடுப்பி லேற்றிப்
பாய்ந்தபின் பன்னிரண்டு சாமந் தீதான்
பக்குவமா யெரித்துமே யாற விட்டு
வாய்ந்தபின் மருத்தோடு கிண்ணி யெல்லா
மருவுகின்ற காரமிட் டுருக்கி டாயே. (758)

உருக்கியே மதிதனிலே யி நப துக்கொன்
றுத்தமனே களங்குதக்ணை கொடுத்தா யானால்
மருக்கியே மாற்றேழு காணுங் காணும்
வண்மையாங் காவியுப்புக் கிறங்கும் பாரு
நருக்கியே முன்களங்கி னாகங் கூட்டி
நலமான பச்சைரசஞ் சமபாகஞ் சேர்த்துத்
தருக்கியே நாலிலொன்று தங்கங் கூட்டிச்
சார்ந்தவெல்லாம் பொற்றலையின் சாற்றா லாட்டே. (759)

ஆட்டியே யயச்சிமிழி லடைத்து வைத்தே
அசகாமல் மேல்மூடி மண்ணைச் செய்து
மாட்டியே மணல்மறைவில் புடத்தைப் போடு
மகத்தான பன்னிரண்டு புடந்தா னப்பா
காட்டியே கருப்பாகக் களங்கு மாகுங்
கனமான மதிதனிலே நூற்றுக் கொன்றாக
பாட்டியே பத்தரையே மாற்றுக் காணும்
பணவெடைதான் பாலிலுண்ணக் கதிர்போ லாமே. (760)

## கரும்பிச் செம்பிப் பதங்கம்

கதிராகக் களங்கொன்று சொல்லக் கேளு
கரும்பிசெம்பி ரெண்டுமொக்கக் கிண்ணி வார்த்து,
நதிராக நாலுபல நிறுத்துக் கொண்டு
நலமாகப் பதங்கித்த ரசம்பலந்தா னிரண்டு
வெதிராக வெள்ளையென்ற பாடா ணந்தான்
மிக்காகக் குதிரைப்பல் மிருதார் சிங்கி,
சதிராக வரிதாரஞ் சிலையும் வீரந்
தயங்காத கவுரியொடஞ் சனக்கல் தானே. (761)

கல்லான நிமிளைதாம் பரத்தின் பொடியும்
கடிசான நாகம்வெங் காரப் பொரியும்
அல்லாந்தான் வகைப்பல மரைதான் ஆகும்
அழகான வெலுமிச்சம் பழச்சாற் றாட்டி,
நல்லான நாற்சாம மரைத்து மைபோல்
நலங்காமல் வில்லைப்பண்ணிக் காயப் போட்டுத்,
தெல்லான சட்டிக்குள் நடுவே வைத்துச்
சிறப்பாகக் கரும்பிசெம்பி கிண்ணி மூடே. (762)



மூடியே சந்துக்கு முன்மண் பூசி
முயற்சியாய்ப் பன்னிரண்டு சாமந் தீப்போடு,
ஆடியே யாறவிட் டெடுத்து வைத்தங்
கடிகனத்த குகைதன்னில் காரம் போட்டு
நீடியே யுருக்கியே யெடுத்துக் கொண்டு
நிலைத்தநவ லோகத்தில் பத்துக் கொன்று
கூடியே கொடுத்தக்கா லைந்து காணுங்
கூட்டினால் தாய்தன்னை யுசந்து போமே. (763)

## உயர்ந்தமதிப் பதங்கம்

உசந்திட்ட பதங்க மொன்று சொல்லக் கேளு
உறுதியா மதிக்கிண்ணி பலந்தா னாலு
அசந்திட்ட வெள்ளீயம் பலமுங் கால்தான்
ஆண்மையாஞ் சூதமது பலமுங் கால்தான்
துசந்திட்டி ரண்டுமொன்றாய்த் தொந்தித் துக்கொள்
சுத்தியாய் நாகமது பலமுங் கால்தான்
கசந்திட்ட ரசமதுவும் பலமுங் கால் நான்
கலந்திரண்டுந் தொந்தித்து வைத்தி டாயே. (764)

வைத்திட்ட அரப்பொடியும் பலந்தான் ரெண்டு
வாகான செம்பினுடைப் பொடியும் ரெண்டு
மைத்திட்டு மனோசிலையு மரைப்ப லந்தான்
வளமையாம் வெங்கார மரைப்ப லந்தான்
கைத்திட்டு நாலையுந்தான் கல்வத் திட்டுக்
கலந்தரைத் தேரண்டத் தெண்ணெ யாலே
நைத்திட்டுக் குகையிலிட்டு ருக்கி யாட்டி
நறுக்கியே வெங்காரஞ் சிலையும் போடே. (765)

போட்டுமே முன்போல வுருக்கித் தீரு
பொடியாக்கிப் பலமிரண்டு முன்மருந்திற் சேர்த்து
நாட்டுமே நிமிளையது பலமுங் கால்தான்
நலமான காந்தமது பலமுங் கால்தான்
வீட்டுமே வெங்காரப் பொரிபலந்தா னொன்று
மிக்கான கவுரியஃ தரைப்ப லந்தான்
மாட்டுமே மனோசிலையு மரைப்ப லந்தான்
மகத்தான தொட்டியுமப் படித்தா னாமே. (766)

தானுன மிருதார்சிங் கிபலங் கால்தான்
தாளகமும் பலங்கால்தான் லிங்கங் கேளு
நானுன நாலுபலங் கூடப் போட்டு
நலங்கவரைத் தேரண்டத் தெண்ணெ யாலே
ஆனுன நாற்சாம மரைத்து மைபோ
லமுத்தமாங் குழிப்பான சட்டியிலே வைத்து
வேனுன மதிக்கிண்ணி தணைப்ப தித்து
விலகாமல் சந்துக்கு மண்ணைப் பூசே (767)

மண்ணன்றுய்ப் பூசியே மணலைக் கொட்டி
மாசற்ற சக்கரமா மடுப்பி லேற்றி
முண்ணுன முத்தீயு மாட்டித் தீரு
முயற்சியா யாறியபின் னெடுத்து வாங்கில்
விண்ணுன மதிக்கிண்ணி யுருகி நிற்கும்
வெள்ளியென்ற கிண்ணிதனை வேறே வைத்துத்
திண்ணுன மருந்தெல்லாஞ் சுரண்டி வாங்கிச்
சேர்ந்தடியி னின்றமருந் தொக்கப் போடே. (768)

ஒக்கவே மருந்தினுக் கரைவாசி சூதம்
ஒளியான மனேசிலையுங் கால்தா னுகும்
மிக்கவே வெங்காரம் பொரிகால் தானு
மீருமல் கல்வத்தில் போட்டுக் கொண்டு
எக்கவே யேரண்டத் தெண்ணெ யாலே
யிழுத்தரைத்துச் சுட்டகுகை தன்னில் வைத்துத்
திக்கவே சில்லிட்டுச் சீலே செய்து
தீர்க்கமா யைம்பதெருப் புடத்தைப் போடே. (769)

போடவே களங்காகு மாறவிட்டு வாங்கிப்
புகழான வெள்ளியது வராகன் ரெண்டு
பாடவே பதங்கவெள்ளிக் கிண்ணியெடை யொன்று
பரிவாகக் கரியில்வைத் துருக்கிக் கொண்டு
காடவே களங்கதுதா னெட்டுக் கொன்று
கருகையிலே களங்கெடைதான் தாயிச் சேர்த்தே
ஊடவே யோட்டில்வைத் தூதிப் போடங்
குருக்கியே பார்த்தக்கா லேமு மாமே. (770)



ஏழுமா மெட்டுமாம் பத்து மாகு
மினத்தோடே சேர்த்துமே பார்த்திட் டக்கால்
வாழுமாம் காயசித்தாம் யோக சித்தா
மற்றென்றல் வாதத்தைப் பார்க்க வேண்டாம்
பாழுமாம் பராபரமுந் தாண்டிப் போகும்
பயலான பக்குவத்தில் பார்த்த நேர்மை
தாழுமா மிதைமுன்னே பார்த்துத் தேர்ந்தால்
சந்தோடத் தால்மனது சாந்த மாமே. (771)

சாந்திட்டுக் காயசித்தி யோக சித்தி
தப்பாமல் பார்க்கவென்று விதைமுன் பாரு
போந்திட்டுப் பொய்போகா யார்தான் பார்த்தும்
பெரிதான வாசென்று மயங்க வேண்டாம்
ஏய்ந்திட்ட விதுபொய்த்தா லெல்லாம் பொய்யா
மேழான வாயிரத்தி லொன்று மில்லை
கூர்ந்திட்ட விதுபலித்தா லெல்லாம் மெய்தான்
கூடாட்டால் குறிகெட்ட போகா வெண்ணே. (772)

## அயப் பதங்கம்

என்னவே யதீதமாம் பதங்கங் கேளு
இரும்பான வரப்பொடிதான் பலமும் நாலு
பின்னவே மனேசிலைதான் பலமி ரண்டு
மணியான வெங்காரப் பொரிப லந்தான்
துன்னவே யிவைமூன்றும் பொடியாய்ப் பண்ணித்
துலக்கமா மேரண்டத் தெண்ணெய் யாலே
அன்னவே யரைத்துமைபோல் குகையி லேயிட்
டடைவான துருத்தியிட் டூதி டாயே. (773)

ஊதியபின் னுடைத்திட்டுப் பொடியாய்ப் பண்ணி
யுகந்துமே முன்சொன்ன மருந்துகூட்டிக்
கோதியபின் குகையி லிட்டுருக்கி யாட்டிக்
கொடியதாம் பிரத்தின்பொடி பலந்தானுலு
ஏதியபின் னிரும் போடே யொக்கக் கூட்டி
யேற்றமா யுருக்கிட்டே யுடைத்துக் கொண்டு
காதியபின் காரீயம் பலம்நால் கூட்டிக்
கருத்தாகக் குகையிலிட்டு ருக்கி டாயே. (774)

இட்டுமே நாகத்தைச் சுத்தி பண்ணி
யிதமாக நாலுபல மொக்கப் போட்டு
நெட்டுமே நிமிளையது பலந்தான் ரெண்டு
நேரான வெங்காரப் பொரிபலந்தா னென்று
எங்குமே குகையிலிட்டுச் சில்லுத் தான்போட்
டெழிலாக வுருகவிட் டெடுத்து வாங்கிப்
பட்டுமே பலநாலு நிறுத்துக் கொண்டு
பாரமா மதிக்கிண்ணி பலந்தான் நாலே. (775)

பலமாகும் வெங்காரப் பொரியுந் தானும்
பண்பான மனோசிலையும பலமு மொன்று
குலமாகுங் குதிரைப் பல் பலமு மொன்று
குறியான சவுரியது பலமு மொன்று
நலமாகுஞ் சூதமது பலமு மொன்று
ரசமான சிந்தூரம் பலமு மொன்று
நிலமாகும் லிங்கமது பலமு மொன்று
நிலையான வீரமரைப் பலந்தான் போடே. (776)

அரையாகுந் தொட்டியது துத்தமுமப் படியே
படைவான மூன்னுருக்கு லோக நாலு
பரையாகும் பன்றியினெய் வார்த்தே யாட்டிப்
பண்பாக நாற்சாம மரைத்து மைபோல்
குரையாகு மடிகனத்த குழிச்சட்டி வைத்துக்
குறித்த வெள்ளிக்கிண்ணி யைத்தான் மேலேமூடித்
துரையாகுஞ் சந்துக்கு மண்ணைச் செய்து
சக்கரமா மடுப்பேற்றி யெரித்தி டாயே. (777)

எரித்திட்டுப் பன்னிரண்டு சாமந் தீயை
யிதமாகப் போட்டுமேமுத் தீயு மாட்டி
அரித்திட்டு ஆறவிட்டெ டுத்து வாங்கி
யாண்மையாம் பதங்கத்தை வேறே வைத்துத்
தரித்திட்டு அடியினின்ற மருந்தெ டுத்துத்
தனித்துநின்ற நிறைக்குத்தான் பாதி லிங்கம்
நரித்திட்டு லிங்கத்தில் சிலைசமனாய்ச் சேர்த்து
நலமான வெங்காரப் பொரியுங் கூட்டே. (778)



கூட்டியே லிங்கவெடை வீரம் போட்டுக்
கூருன பன்றி நெய்யை விட்டே யாட்டு
வாட்டியே யகலிவிட்டுப் புடத்தைப் போட்டு
மனமகிழ்ச்சி யாயெடுத்து மதியிலே யூட்டி
ஆட்டியே யேழரையே மாற்றுக் கானு
மசையாது காவிக்கு முப்புக் குந்தான்
பூட்டியே தங்கமிட்டுச் சூத மிட்டுப்
புகழான வாலுகையில் சிந்தூரித் துண்ணே. (779)

## பித்தளைப் பதங்கம்

உண்டபின்பு பதங்மொன்று சொல்லக் கேளு
உயர்ந்திட்ட பித்தளையின் கிண்ணி கொட்டிக்
கண்டபின்பு கடைந்திட்டு வைத்துக் கொண்டு
கம்பியென்ற லிங்கமது பலந்தா னுலு,
அண்டபின்பு சுத்தித்த வரப் பொடி தானுலு
ஆர்க்கமாம் வெங்காரம் பலந்தா னென்று
பண்டபின்பு கல்வத்தி·லிட்டுக் கொண்டு
பாங்கான வேரண்டத் தயிலத் தாட்டே. (780)

ஆட்டியே நால்சாம மரைத்து மைபோ
லடிகனத்த குழிச்சட்டி தண்ணில் வைத்துப்
பூட்டியே பித்தளையாங் கிண்ணி மூடிப்,
பொருந்தவே மண்தன்னை மிலக்கச் செய்து
தாட்டியே சக்கரமா மடுப்பி லேற்றித்
தயங்காதே பன்னிருசா மந்தீப் போடு
நீட்டியே யாறவிட்டெ டுத்து வாங்கி
நிச்சயமாங் கிண்ணியைத்தான் வேறே வையே. (781)

வைத்துமே யடிமருந்தை யுருக்கிக் கொண்டு
மாசகற்றிக் கல்வத்தில் வண்மை யாக
மைத்துமே மனோசிலையுங் காரம் லிங்கம்
மருந்துநின்ற நிறைக்குக்கால் வாசி கூட்டிக்
கைத்துமே கற்றுழஞ் சாற்றி லாட்டிக்
கனமாக வில்லைபண்ணிக் காய வைத்தே
ஐத்துமே யகலிவிட்டுப் புடத்தைப் போட்டங்
காறவிட்டுக் கொட்டியே கல்வம் போடே. (782)

கல்வத்தில் போட்டுமே மனோசிலைவெங் காரங்
கனமான லிங்கமுங்கால் வாசி கூட்டிப்
பல்வத்தில கற்றாழஞ் சாற்ற லாட்டிப்
பக்குவமாய் முன்போலப் புடத்தைப் போடு
செல்வத்தில் மூன்றுபுடமிப் படியே போட்டுத்
திறமாக வெள்ளிதனி லீந்தா யானல்
அல்வத்தி லாறுதான் மாற்றுக் காணு
மாடகத்தில் சேர்ந்தக்கா லுசரும் பாரே. (783)

## உயர்ந்த பதங்கம்

உசரவே பதங்கமொன்று சொல்லக் கேளு
உசத்தியா மரப்பொடியைச் சுத்தி பண்ணி
வசரவே வாழைப்பால் தன்னில் போட்டு
மாசற்ற வெங்கார மனோசிலையுங் கூட்டி
அசரவே யரப்பொடிக்கு நாலத் தொன்றே
யாகவிந்த விரண்டுவகை யரைத்துக் கூட்டி
முசரவே மூன்றுநாள் கழித்த பின்பு
மூசைக்கே யெடுத்திட்டு ருக்கி டாயே. (784)

உருகவே மூன் றுருக்குத் தீர்ந்த பின்ன
ருகந்துமே அயந்தானு மணியு மாகும்
பருகவே செம்புதன்னைத் தகடு தட்டிப்
பாங்கான மனோசிலையும் லிங்கங் கூட
இருகவே யிணங்கனொடு மூன்றுந் தானு
மெலுமிச்சம் பழச்சாற்ற லரைத்து மைபோல்
திருகவே செம்பெடைக்கு மூன்றும் பூசிச்
சிறப்பான ரவிதன்னில் காயப் போடே. (785)

காய்ந்துமே யாதொண்டை வேர்ப்பட் டைத்தான்
காடிவிட்ட ரைத்துமே தேங்காய் போலத்
தேய்ந்துமே செம்புதன்னை யதற்குள் வைத்துச்
சிறப்பாக மூடியே கெசபு டத்தில்
ஆய்ந்துமே போட்டெடுக்க நொறுங்கிப் போகும்
அப்புறந்தா னுகத்தைச் சுத்தி பண்ணி
வேய்ந்துமே தகடுபோல் தட்டிக் கொண்டு
வெடியுப்புச் சீனங்கல் லுப்புச் சேரே. (786)



சேர்த்துமே மூன்றையுந்தான் பொடியாய்ப் பண்ணித்
திறமாக நாகத்தில் ரெட்டிப் புச்சேர்த்
தார்த்துமே பாதியந்த அகலில் தான்வைத்
ததன்மேலேநாகத்தின் தகடு வைத்துப்
பார்த்துமே பொடிமேலே யழுத்தி வைத்துப்
பாங்காக மேல்மூடிப் புடத்தைப் போடு
ஏர்த்துமே நாகத்தை யசையா மலெடுத்
திப்புறமாய் வைத்துமே பொடியாய்ப் பண்ணே. (787)

பண்ணவே நாகமஃ துருகி னக்கால்
பதித்துமே கட்டியாய்ப் பொடியில் தானும்
அண்ணவே மேலுமந்நப் பொடிய முத்தி
யதட்டியே போட்டுவா புடந்தா னைந்து
கண்ணவே பொடியெல்லா மப்பால் வைத்துக்
கற்றாழஞ் சாறுவிட்ட ரைத்துமைபோல்
திண்ணவே புடந்தானைந் தரைத்துப் போடு
சிவப்பாக சிந்தூர மாகுங் காணே. (788)

காணவே வெங்காரம் பலகை யாகக்
கழுவியே சாணிதனில் துடைத்துப் போடு
மாணவே மாணிச்சா றதனில் தோய்த்து
மாசற்ற ரவிதன்னில் போட்டு வாநீ
பாணவே பத்துநாள் போட்ட பின்பு
பத்தமா விலையரைத்துக் கவசங் கட்டிப்
பூணவே பத்தெருவல் புடத்தைப் போடப்
பொன்காரங் கட்டியே மணியு மாமே. (789)

மணியாகக் கல்லுப்பைப் பொறுக்கிக் கொண்டு
மதிப்பான தவசியென்ற முருங்கைச் சாற்றில்
முணியாக மூன்றுநா ளூற வைத்து
மூர்க்கமா யொன்றுக்கு நாலு சேரு
கணியாகக் கல்லுப்பில் விட்டுக் காய்ச்சு
கலந்துநின்ற சாற்றிலே யரைத்து மைபோல்
அணியாக வகலிலிட்டுப் புடத்தைப் போடங்
கையைந்து தரமரைத்துப் புடத்தைப் போடே. (790)

அஞ்சுமே புடம்போட்டுப் பரைத்து மேதா
னதிகமாங் குகைபோலப் பண்ணிக் கொண்டு
விஞ்சுமே சூதத்தைச் சுத்தி பண்ணி
மிடுக்காகச் சிவகரந்தைச் சாற்றி னாலே,
முஞ்சுமே மூன்றுநா ளரைக்க வெண்ணெய்
முதுமையாய்த் திரட்டியந்த வுப்பி லேவைத்
துஞ்சுமே மணல்மறைவி லுமிப்பு டந்தா
னுயர்த்தியாய்ப் போட்டெடுக்க வுண்டை யாமே. (791)

உண்டையைத் தானுடைத்து மேகரந்தைச் சாற்றி
ஆறகரைத்து முன்போலப் புடத்தைப் போடு
குண்டையா யிறுகியே மணியு மாகுங்
கூசுமே கண்தானும் ரவிதான் தோற்கும்
பண்டையாய்ப் பதனமா யெடுத்து வைத்துப்
பாங்கான மனோசிலைதான் பலமி ரண்டு
துண்டையாய்ச் சுண்ணாம்பில் சுத்தி பண்ணிச்
சூட்சங்கேள் துரிசியொரு பலமும் வாங்கே. (792)

துரிசியொரு பலந்தானுஞ் சார நீரில்
தோய்த்துமே யடிக்கடிக்கு ரவியில் போடு
வரிசியே வாரந்தான் ரவியில் போட்டு
வங்கமென்ற சுண்ணாம்புக் கவசங் கட்டிப்
பரிசியே பத்தெருவில் புடத்தைப் போடு
பாங்கான கவசத்தைத் தள்ளி விட்டுத்
தெரிசியே கிராவகத்தைத் தவிரக் குத்திச்
சிறப்பாக ரவிதன்னில் போட்டி டாயே. (793)

ரவியில்வைத்து மறுகாலும் புடத்தைப் போடு
நலமான துரிசியது குருவு மாகும்
புவியில்வைத்து முன்னுருக்கு மிரும்பி ரண்டு
பொடியாக நொறுங்கினதோர் செம்பி ரண்டு
செவியில்வைத்து நாகச்சிந் தூரமி ரண்டு
சூதந்தான் கட்டியது பலமி ரண்டு
நவியில்வைத்த வெங்காரம் பலமி ரண்டு
நாட்டமா மனோசிலையும் பலமி ரண்டே. (794)



பலமாகத் துரிசியொடு கல்வத் திட்டுப்
பறங்கியுடைச் சாராயம் விட்ட ரைத்து
நலமாக நாற்சாம மரைத்த பின்பு
நாட்டமாய்க் குழிச்சட்டிக் குள்ளே வைத்துப்
பெலமாக ரவிக்கிண்ணி பொருந்த வைத்துப்
பிசகாமல் மண்தான்செய் தடுப்பி லேற்றி
அலமாகப் பன்னிரண்டு சாமந் தீதா
னாட்டியே யாறியபின் னெடுத்தி டாயே. (795)

எடுத்திட்டு மதிதனிலே நூற்றுக் கொன்றங்
கிட்டிடவே யெட்டரைதா னாணிக் கொக்குங்
தடுத்திட்ட தங்கமிட்டுக் கெந்தி யிட்டுக்
தனியான பொற்றலையின் சாற்று லாட்டிக்
கடுத்திட்ட காசியென்ற மேருப் போட்டுக்
காடமாம் வாலுகையின் மேலே வைத்து
வடுத்திட்ட தீயிட்டுச் சிந்தூ ரித்தால்
மாசற்றுப் பன்னிரண்டு மாற்று மாமே. (796)

ஆமென்ற பதங்கமது சித்தி யாக
வடியான வழலைதன்னை முன்னே பண்ணி
ஓமென்ற வழலையது சுண்ண மாக
வுற்பனமாய் வெடியுப்புச் செயநீர் பண்ணு
வேமென்ற வெடியுப்பு வேரும் சுண்ண
மிடுக்கான சாத்திரத்தில் சொன்னா ரில்லை
நாமென்ற நாஞ்சொன்ன நூலிற் றானும்
நழுவலென்ற வெடியுப்புச் சுண்ணந் தானே. (797)

## வெடியுப்புச் சுண்ணம்

சுண்ணந்தான் மல்லிகைப்பூப் போலே யானால்
தொட்டகுறி தப்பாம லோடும் பாரு
கண்ணந்தாங் கடிதாகிக் கருத்த தானால்
காரியந்தா னொன்றுமில்லை.காறித் துப்பு
அண்ணந்தா னடியான சுண்ணந் தன்னி
லசடானால் வாதமென்ற சொல்லே யில்லை
தெண்ணந்தான் தேரதனுக்கு குருவை போனால்
தெருவீதி யுலங்காரஞ் சேரப் போச்சே. (798)

சேரவே போகாமல் வெடியுப்பு தன்னைச்
செயசுண்ணம் பண்ணியே செயநீர் வாங்கு
நாரவே நாற்காய்ச்ச லேந்தாங் காய்ச்சல்
நற்கம்பி வாங்கியுமே பலந்தான் பத்து
ஏறவே யெலுமிச்சம் பழச்சாறு தானு
மேற்றமாய் நாலுபத்துப் பலமு மாகும்
காரவே கல்லுப்புப் பலந்தான் ரெண்டு
கடிதான பூநீறு பலந்தான் ரெண்டே. (799)

ரெண்டோடு சீனமது பலந்தான் ரெண்டு
நேரான சத்தியென்ற சாரம் ரெண்டு
வெண்டோடு வெங்காரம் பலந்தான் ரெண்டு
வீரியமாம் பழச்சாற்றில் கூடப் போட்டு
திண்டோடு கல்வத்தில் பொடித்துப் போட்டுத்
திரமான குண்டுசட்டி தன்னில் வார்த்து
அண்டோடு அடுப்பில்வைத்துக் கமலத் தீயா
லதுங்காம லெரியேறிட் டப்பாற் கேளே. (800)

## அருஞ்சொற்பொருள்

**பா. எண் : 751 முதல் 800 வரை**

பா. எண் : 751—கிடத்திப் போடே = படுக்கப்போடு.
பா. எண் : 759—இறங்கும் = மாற்று குறையும்.
பா. எண் : 765—ஏரண்டத் தெண்ணெய் = சிற்றாமணக்கு நெய்.
பா. எண் : 768 ஒக்கப்போடே = ஒருமிக்கப்போடுவாயாக.
பா. எண் : 783—ஆடகம் = பொன்.
பா. எண் : 789—மாணிச்சாறு = குப்பைமேனிச் சாறு.
பா. எண் : 791—உண்டையாமே = கட்டி உருகி உருண்டை வடிவமாகி இருக்கும்.
பா. எண் : 796—ஆணிக்கொக்கும் = ஆணிப் பொன்னென்னும் ஒருவகைப் பொன்னுக்கு ஒப்பாகும்.
பா. எண் : 798—அசடு = குற்றம்; உருளை = சக்கரம்.

---



கேளுமே மருந்தெல்லாங் கரைந்த பின்பு
கெட்டியாஞ் சீலைதன்னில் வடிகட் டிக்கொண்டு
ஆடாளுமே யடுப்பினில்வைத் தெரியிட் டக்கா
லடியிலே பற்றுமு லயத்தாற் கிண்டு
தூளுமேபொடியான பதத்தில் தானுஞ்
சுரண்டியே கல்வத்தில் போட்டுக் கொண்டு
பாளுமே பழச்சாற்று லரைத்து மைபோல்
பாங்காக வில்லைகட்டி யகலில் வையே. (801)

வைத்துமே மேல்மூடி யைம்பதெரு வடுக்கி
மண்தூசு விழாமலே புடத்தைப் போடு
அய்த்துமே யரைத்தரைத்துப் பழச்சாற் றுலே
அதிகமா யெருவேற்றிப் புடத்தைப் போடு
வெய்த்துமே கொக்கிறகு போல்வெண் மையா
மிடுக்கான திராவகம் விட்ட ரைத்து மேதான்
தொய்த்துமே சூடன்காற் பலமும் போடு
சுயம்பான வீரமரைப் பலந்தான் போடே. (802)

அரைப்பலந்தான் வெள்ளைப்பா டாணந் தானு
மரைத்துமே கூடவிட்டுத் திராவ கத்தால்
நிரைத்துமே வில்லைகட்டிக் காயப் போட்டு
நேரான கடனுரையு மண்டத் தோடும்
நரைத்துமே நாற்பலந்தா னிரண்டுங் கூட
நலிந்தரைத்துப் பழச்சாற்றில் வில்லை தட்டி
உரைத்துமே யோட்டில்வைத் தூதிப் போட
வுறுகின்ற சுண்ணமா முண்மை கேளே. (803)

உண்மையாம் பொடிபண்ணி முன்வில் லையை
ஓட்டில்வைத் துக்கீழ்மேல் புடத்தைப் போடு
வெண்மையாம் வெடியுப்புக் கடுங்கார மாகும்
மிரளாதே மனுடருடை யமுரி தன்னைக்
கண்மையாய்க் கலயஞ்சூ டெழும்பக் காய்ச்சிக்
காரமாம் வெடியுப்பைப் பாக்குப் போலப்
பண்மையாய்ப் பருப்பீங்கான் தன்னிற் போட்டுப்
பக்குவமா யமுரிதன்னில் நீற்றி டாயே. (804)

## குருபரம்பரை கூறல்

நீற்றியே பனியில்வைக்கச் செய நீராகும்
நேரான வெடியுப்புச் சுண்ணந் தன்னைத்
தூற்றியே வெகுநூலில் சோதித்துப் பார்த்துச்
சுத்தசைதந் நியமாம்பாட் டர்சொல்லக்
கேட்டாத் தியடி வீற்றிருந்த வையர்சொல்ல
வாயிதான் கேட்டுணர்ந்து நந்திக்குச் சொல்லத்
தேற்றியே நந்திதிரு மூலருக்குச் சொல்லத்
திருமூலர் காலாங்கிக் கருள்செய் தாரே. (805)

அருள்செய்த படிதான் காலாங்கி நாத
ரடியேனுக்க னுக்கிரகம் பண்ணிச் செல்லத்
தெருள்செய்தே சோதித்துத் திட்ட மாகச்
செப்பினேனு னேழாயி ரத்தில் தானும்
மருள்செய்த வாதமது சித்தி யாகு
மார்க்கமா மடியான வெடியுப்புச் சுண்ணம்
நருள்செய்த வுலகத்தோர் பார்த்து
நலியாமல் நாட்டினேன் செயத்தம் பந்தான். (806)

நாட்டினதோர் வெடியுப்புக் கைமுறை தப்பில்
நலமாகக் கருப்பேறுங் கிட்ட மாகுங்
காட்டினதோர் காரமதில் கொஞ்ச மாகுங்
கடினமாய்ச் சலந்தானும் வந்தி டாது
ஏட்டினதோ ரெலும்புபோ லிறுகிப் போகு
மிவையிருந்தா லெடுத்தெறிந்து வீசிப் போடு
மாட்டினதோ ரிம்முறைவா தத்துக் காகா
மார்க்கமா முறைதனையே வழுத்தக் கேளே. (807)

கேளென்ற வெடியுப்புச் சுண்ண மானல்
குணத்தினுடை யதிசயத்தைக் கூர்ந்து கேளு
தூளென்ற சுட்டசிப்பி தண்ணீர் பட்டால்
சுருக்காக விரிவதுபோல் மலர வேணுந்
தேளென்ற செயநீரில் வீரம் பட்டால்
சிவந்துமே ரத்தம்போ லாக வேணும்
பாளென்ற பனிபட்டால் பிட்டியற்றுப்
பாங்கான சலமானல் பருவ மாச்சே. (808)



பருவமாஞ் சரக்குகளில் சுருக்குப் போட்டால்
பாய்ந்துமே புலிபோலக் கொல்ல வேணுந்
துருவமாந் தூமத்தை யடிக்க வேணுஞ்
சோதனைக்குப் பாடாணந் துலக்க மாகக்
கருவமாங் கரியினின் ருட வேணுங்
காரசாரங் களெல்லாம் லேசாய்ச் சுண்ணந்
தருவமாந் தவளம்போ லாக வேணுஞ்
சாற்றியதோர் வெடியுப்புச் சுண்ணத் தாட்டே. (809)

ஆட்டான வெடியுப்பே யடியாஞ் சுண்ண
மாகாத சுண்ணமென்றால் வாதம் போச்சு
மூட்டான முதற்றரந்தா னழுவ லானல்
முடிவுமட்டு நழுவலாய் முறிந்து போகுந்
தேட்டான வெடியுப்புச் செயசுண் ணமானல்
திறமாக வழலையதுஞ் சுண்ண மாகும்
ஊட்டான யோகசித்தி காயசித்தி
யுறைப்பான வாதசித்தி யெல்லா மாமே. (810)

## சவுக்கார மகிமை

எல்லாமாஞ் சவுக்காரஞ் சுண்ண மானு
லெட்டெட்டுச் சித்தியெல்லா மெளிதி லாகும்
அல்லாமாஞ் சுண்ணங்கள் செயநீ ராகு
மதிகமாங் குருவாகுங் களங்கு மாகுந்
தெல்லமாஞ் சிந்தூர மெழுகு மாகுஞ்
செயமான திராவகமு நவலோக நீரும்
கல்லாமாங் கட்டுவகை கிராவணமுங் குடோரி
கபனிக்குஞ் சத்துவகை செம்பு மாமே. (811)

ஆமென்ற வெடியுப்புச் சுண்ணந் தானும்
ளோத்தா டப்பன்சவுக் கார மாச்சு
தேமென்ற சிவசத்தி யிரண்டில் தானுஞ்
சீவசெந்த னேகந்தா னுதித்தாற் போல
ஓமென்ற பிரணவத்தி னுண்மை தன்னு
லுத்தமனே நாதவிந்தி ரண்டு போல
வாமென்ற வாதந்தா னிதனு லாச்சு
மகத்தான சவுக்காரச் சுண்ணந் தானே. (812)

தானென்ற சவுக்காரச் சுண்ணந் தன்னைச்
  சதாசிவன்றான் சொன்னபடி தாய்க்குத் தானும்
வானென்ற மனோன்மணித்தாய் நந்திக்குச் சொன்னாள்
  மகத்தான நந்திகேசு வரனார் தாமுந்
தூனென்ற திருமூலர்க் குபதே சித்தார்
  திருமூலர் காலாங்கிக் கருள்தான் செய்தார்
ஆனென்ற காலாங்கி யையர் தாமு
  மடியேனுக் கனுக்கிரகம் பண்ணி னாரே. (813)

பண்ணியதோர் பலாபலத்தைப் பார்த்துத் தேறிப்
  பண்பாக வாத வித்தைகடிதா மென்று
எண்ணியே மூாயிரத்தில் சவுக்கா ரத்தை
  யெல்லாரு மறியவொன் றெழுதிப் போட்டேன்
நண்ணியே ரிசிசித்தர் வேதாந்தி யோகி
  நாதாந்தி முனிவரெல்லா முறையைத் தான்பார்த்
தொண்ணியே மனசொன்றாய்ச் சவுக்கா ரத்தை
  யொளியாதே சொன்னவரார் சொல்லென் றாரே. (814)

## சித்தர்கள் அகத்தியரிடம் வந்தது

என்றலுமே கூர்மமுனி திருமூலர் பேர
  ரேற்றமாம் போகரென்ற முனிவர் தாமும்
வின்றலுமே விபரமாய் விரித்துச் சொன்னார்
  மேதினியெல் லாஞ்சித்தர் மயமா மென்றே
கன்றலுமே ரிஷியோகி நாதாக்கள் சித்தர்
  கலந்துமே யெல்லோரும் பேசிக் கொண்டு
அன்றலுமே யகத்தியரை வந்த டுத்தங்
  கனுபோக விதஞ்சொன்ன வாண்மை தானே. (815)

ஆண்மையாஞ் சவுக்காரம் வெளியாய்ச் சொன்னா
  ரண்டமொடு பூலோகம் பாதா ளங்கள்
தூண்மையாஞ் சித்தர்மய மெத்த வாகுஞ்
  சொரூபமணி யெல்லோர்க்கு மெளிதி லாகும்
ஆண்மையாஞ் சவுக்கார வேட்டை வாங்கி
  வாசித்துப் பார்க்கையிலே கிழித்துப் போட்டால்
ஏண்மையா யிளஞ்சித்துக் கொஞ்ச மாகு
  மேற்றமாம் போகரைத்தா னழையென் றாரே. (816)



## தட்சிணாமூர்த்தி

அழையென்று நாஞ்சொன்னால் வருவ தில்லை
  யதீதமாங் கயிலாய தட்சிணா மூர்த்தி
குழையென்ற குருவண்டை யனைவருந்தான் போந்து
  குனிந்துமே யடிவணங்கி யிருக்கும் போது
தழையென்ற வனைவருந்தா வொருமித் தாற்போல்
  சடுதியாய் வந்ததென்ன வென்று கேட்க
பிழையென்ற போகரென்ற முனிவர் தாமும்
  பேரான சாத்திரந்தான் புகன்றிட் டாரே. (817)

## சாத்திர அங்கம்

இட்டதொரு சாத்திரத்தில் சுத்த மாக
  வேற்றமா மாதியென்ற வெடியுப்பு வழலை
திட்டமாங் கல்லுப்புச் செயமாம் வீரஞ்
  சொல்லாத தீட்சைவிதி யோக மார்க்கம்
விட்டதொரு அட்டகன்மஞ் சக்கரத்தூ பிதந்தான்
  மேன்மையாந் தேவியுடைக் கிரியா மார்க்கம்
நட்டதொரு முத்திரைகள் மவுன நேர்மை
  நாட்டாத கருவெல்லா நாட்டி னாரே. (818)

நாட்டினார் குளிகைதன்னை வெட்டவெளி யாக
  நலமாகுஞ் சாரணைகள் இராவணங்கள் குடோரி
சூட்டினா ரனேகவித்தை சொல்லப் போகா
  சுருக்கிலே யவர்தானுமையை யழைத்து வந்து
தீட்டினதோர் சாத்திரத்தை வாங்கிப் பார்த்துச்
  சேகரச்சுப் போடுதற்கு வந்தோ மென்றார்
தூட்டினார் தட்சிணா மூர்த்தி தானுஞ்
  சோதித்துப் பார்ப்பமென்று முனிந்திட் டாரே. (819)

## போகர் வரவு

முனிந்திட்டுக் கூர்மமுனி தனைய மைத்து
  மூர்க்கமாம் போகரென்ற முனிவர் தம்மைக்
கனிந்திட்டுக் கயிலாய தட்சிணா மூர்த்தி
  காரியமா யழைத்துவரச் சொன்னா ரென்று
தினிந்திட்டுச் சீக்கிரத்தில் கொடுவா வென்றார்
  சித்தமது மகிழ்ந்துமே கூர்மமுனி தானுந்
தனிந்திட்டுக் குளிகையிட்டுத் தரியாமற் புக்குத்
  தண்மையாம் போகரண்டை வந்திட் டாரே. (820)

வந்துமே யஞ்சலிபந் தனந்தான் பண்ணி
வணங்கியே யிருத்தலுமே போகர் தாமும்
கந்துமே சித்தரைத்தான் வரவ ழைத்துக்
களிகூர்ந்து வஸ்துசுத்தி கருதி யீந்து
எந்துமே யெங்குவந்தீ ரென்று கேட்க
வெனையாண்ட கயிலாய தட்சிணு மூர்த்தி
உந்துமே யுங்களைத்தா னழைத்துவரச் சொன்ன
ருறுதியாங் கூர்மமுனி யுரைகள் தானே. (821)

தானென்ற கூர்மமுனி தனைய ழைத்துத்
தற்காரம் வந்ததென்ன வென்று கேட்க
ஏனென்ற இருடிசித்த ரெல்லோ ருந்தா
மேற்றமா மகத்தியரும் வந்தி ருந்து
ஆனென்ற வனைவருமே யழைக்கச் சொன்ன
ரதிசயித்துச் சிரித்துமே வேடப் பூட்டிக்
கேரென்ற குளிகையிட்டுச் சீக்கிரத்தில் வந்து
குருவான சின்மயத்தைப் பணிந்திட் டாரே. (822)

## அகத்தியர் போகரைப் புகழ்ந்து பேசல்

பணிந்திட்டே யவரவர்க்கஞ் சலிபந் தனந்தான
பண்ணவே பரிவாக இடங்கொ டுத்து
அணிந்திட்டு வத்துசுத்தி யன்ன மீந்தங்
கருகிருத்தி யாண்மையாம் போகரே நீர்
துணிந்திட்டுப் பாய்கின்ற புலிக்கு நீர்தான்
சுருதிமுடிந் திடந்தானும் போதித் தீரே
தணிந்திட்டுச் சாட்டாங்கம் பண்ணியே புலிதான்
சாந்தமாய்க் கைகட்டித் தன்மை யாச்சே. (823)

ஆச்சென்ற பூனைக்கு நாலு வேத
மருள்செய்தி ராதிரசங் கொண்டு வந்தீர்
தீச்சென்ற சிங்கத்தைக் குடும்பத் தோடே
சென்மசா பல்லியம்பண் ணியிரட் சித்தீர்
வாச்சென்ற மகாமேருக் கப்பாற் சென்று
மகத்தான தாதுவகை கொண்டு வந்தீர்
ஓச்சென்ற வுயர்ந்திட்ட வரையாறுங் கண்டீ
ருன்மனைத்தாய் சிலம்பொலியில் மேவி னீரே. (824)



மேவியே சமுத்திரத்தைத் தாண்டி நீர்தான்
மிடுக்கான சஞ்சீவி மூலி கண்டு
தாவியே பிடிக்கையிலே மறையக் கண்டு
தம்பனையா மந்திரத்தால் தரிக்கப் பண்ணி
ஆவியே போனவுயிர் மீட்ப தற்கங்
கனுமார்போல் சஞ்சீவி கொண்டு வந்தீர்
தாவியே நூற்றறுப தாமண் டத்தில்
சஞ்சரித்துச் சாத்திரந்தான் சோதித் தீரே. (825)

சோதித்தீ ரென்றுசொல்லிச் சித்தர் சொன்னர்
சுயம்பான சாத்திரந்தா னேழு காண்டம்
வாதித்த சூத்திரந்தா னெழுநூற்றுச் சொச்சம்
வண்மையாய் நிகண்டதுவும் பத்தே முநூறு
வேதித்து வெகுவித்தை சவுக்காரச் சுண்ணம்
வெடியுப்புச் சுண்ணும்பு மிடுக்காம் வீரம்
ஓதித்த வுப்பான கட்டுத் தானு
முண்மையாந் தீட்சைவிதி யுரைசெய் தீரே. (826)

உரைசெய்தீர் வெகுவித்தை சாத்தி ரத்தி
லுத்தமமாம் வித்தையெல்லாம் பார்த்தத் தாரேன்
கரைசெய்த சாத்திரத்தைக் காட்டு மென்றார்
கருத்தூற்றுப் போகருந்தான் கருணை பொங்கித்
திரைசெய்தீ ரென்குருவே பாட்ட னரே
சின்மயமாங் கயிலாய தட்சிணு மூர்த்தி
புரைசெய்த சாத்திரத்தைப் பாட்டர் பக்கல்
போயிருத்து படிக்கையிலே புளகிம் தாரே. (827)

புளகித்தே விந்தநூல் மறைப்போ வில்லை
பொருளெல்லாம் வெளியாக விருக்கு தென்று
இளகித்து மலைமுழைஞ்சிற் போட்டு வைத்தே
யென்பாட்ட ரெனையழைத் தினிமேல் நீர்தாம்
பளகித்த நூல்பாட வேண்டா மென்றார்
பாட்டர்சொன்ன பக்குவத்தைப் பரிந்து கேட்டு
நளகித்த நூலெல்லா நாடு தன்னி னலக்கமா
யிறைத்துவிட்டே னெனென் றேனே. (828)

என்றதோர் வார்த்தையைத்தான் மூர்த்தி கேட்டே
யேற்றமாம் போகரேநல் விசேடஞ் சொன்னீர்
பன்றதோர் பானமுண்ட னுப்பிக் கொண்டு
பாங்கான குகைதன்னிற போனார் போகர்
தென்றதோர் சின்மயமாந் தேவர் தாமுஞ்
சித்தர் யோகிகளை யழைத்துச் சொல்வார்
அன்றதோ ரகத்தியரே நீர்தாங் கேளு
மவரவர்கள் கற்றகல்வியாண்மை தானே. (829)

ஆண்மைதா னவர்சொன்னால் நம்மால் தானு
மல்லவென்று சொல்வதற்கு நம்மா லாமோ
தாண்மைகா னமக்காரும் ரிசிகள் சித்தர்
தற்கார முங்களுக்கு வேண்டா மென்று
வேண்மைதா னவரவர்கள் குகைக்குப் போங்கோள்
விரைந்துமே யென்றுசொலி யனுப்பி விட்டுக்
காண்மைதான் சமாதியிலே யிருந்து விட்டார்
கயிலாய சின்சயமாந் தேவர் தானே. (830)

தானென்ற சவுக்கார மகிமை யாலே
தருக்கங்க லாடியேரிசி சித்தர் யோகி
ஏனென்ற வேழாயி ரத்தைத் தானு
மெப்படியுங் கிழிக்கவெத்துப் பண்ணி னார்கள்
பானென்ற பாட்ட ருக் கடியேன் தானும்
பரிகரிச்சுப் பாரத்தை யவர்மேல் சாட்டித்
தேனென்ற சீட ருக்கா லொளித்து வைத்துச்
சிக்காம லுலகத்தோர்க் கீந்திட் டேனே. (831)

ஈந்திடா திருந்தக்கால் ரிசிகள் சித்த
ரெப்படியுங் கிழிப்பார்க ளோடு தன்னைச்
சாய்ந்திடாச் சட்டைமுனி தீட்சைவிதி தன்னைத்
தற்காரம் பேசியல்லோ கிழித்துப் போட்டார்
ஊய்ந்திடா வூமையைப்போ லிருந்து விட்டா
ருறுதியாய் நம்முடைய வேடு தன்னைக்
காய்ந்திடாக் கக்கத்தில் வைத்தி ருந்தேன்
கைசேட்டை பண்ணினால் கலக்க மாமே. (832)



ஊலங்கியே மனதுபய மாயி ருந்தார்
காரணமா மூலருடைய பேர னென்று
மலங்கியே நமைக்கண்டால் மரியாதை மெத்த
மார்க்கமா யிருந்துவிட்டார் சித்த ரெல்லாந்
துலங்கியே பாட்டர்பதஞ் சிரமேல் வைத்துச்
சோதித்துச் சித்தருடன் வாது போட்டே
அலங்கியே யாறுவரை கடந்தே யேறி
யாத்தானைக் கண்டதா லஞ்சி னாரே. (833)

அஞ்சியே மனமடங்கிச் சித்த ரெல்லாம்
அடியேன்றன் பக்கலிலே வந்து நின்று
கொஞ்சியே குளிகைக்குக் கோடிதன மீந்து
குறிப்பாக வகைகேட்டு வாங்குவார்கள்
துஞ்சியே சஞ்சரித்துத் தொண்டு பண்ணிச்
சொரூபமணி வாங்கியே கமனம் போவார்
மிஞ்சியே யாயிரமாங் குளிகை தானும்
வீருன சித்தர்தமக் கீந்திட் டேனே. (834)

## தேவி பூசை

ஈந்திட்டே யவரவர்க்கு மகத்தாம் வித்தை
யெளிதிலே யுவதேசம் பண்ணிப் போட்டேன்
மாய்ந்திட்ட சித்தருக்குச் சஞ்சிவி மூலி
மார்க்கமாய்த் தடவியே யுயிரை மீட்டேன்
பாய்ந்திட்ட யோகத்தில் பிராண யோகப்
பாங்கெல்லாம் பிள்ளைகட்குப் பரிந்து சொன்னேன்
தோய்ந்திட்ட வஸ்துவைத்து மாயிக் குத்தான்
சுரபியாம் பாலாக்கிப் பூரித் தேனே. (835)

பூரித்தேன் மந்திரத்தால் பசுசுத்தி ஞானி
பேரான் மந்திரத்தா லயிக்கம் பண்ணி
யாரித்தேன் புட்பம்போல் சமைத்து வைத்துப்
பாவித்தேன் மாயிக்குப் பானத் தோடு
காரித்தேன் கேசரியில் மனத்தை மாட்டிக்
கையினால் முத்திரைக ளெல்லாஞ் செய்தேன்
ஆரித்தே னசையாமல் மனது நிற்க
அப்பனைத்தான் நடனதெரி சனத்திற் காணே. (836)

காணவே நடனத்தைத் தெரிசித்தால் முத்தி
கலக்கமாய் விட்டக்கால் நரக மெய்வாய்
பூணவே தேவியுடைப் பூசை விட்டால்
பிறவியாஞ் சாகரத்தில் சுழன்று போவாய்
ஊணவே தசைதீட்சை வாசி விட்டா
லுயர்த்திட்ட சித்தியில்லை முத்தி யில்லை
தாணவே சவுக்கார நிலையா விட்டால்
சமரசமாம் வாதமெல்லாந் தவறிப் போச்சே. (837)

## சவுக்கார மகிமை

போச்சென்று விடுகாதே சவுக்கா ரத்தால்
பொல்லாங்கு மெத்தவுண்டு ரிசிசித் தர்க்கு
தாச்சென்று சதாசிவனுந் தாயுஞ் சொன்ன
சவுக்காரந் தன்னையே சாதித் தேனன்
தீச்சென்று படர்ந்தாற்போல் சவுக்கா ரத்தாற்
செயமாகும் பாடாணங் கார சாரம்
மாச்சென்று விடுகாதே வழலை தன்னை
வாதந்தான் குடியிருந்த வீடு மாமே. (838)

வீடான வெடியுப்பால் சவுக்காரம் பண்ணு
மிடுக்காகுஞ் சவுக்காரங் குருவு மாகும்
வாடான சவுக்காரக் குருத்தன் னாலே
வளமாகும் பாறையுப்பை வாட்டிக் கட்டு
பாடான பாறையுப்பைச் சுண்ணம் பண்ணிப்
பாங்கான வெங்காரஞ் சாரங்கட்டு
தாடான சாரத்தாற் செயவீரம் பண்ணு
சமர்த்தாகத் துரிசிபண்ணிக் குளிகை கட்டே. (839)

கட்டினால் சூதத்தில் பொன்னு முண்டு
கடிசென்று விட்டக்கால் வாதம் போயின்
எட்டினால் மவுனத்தில் யோக மாகு
மெட்டாட்டா லொன்றுமில்லை யிரண்டுங் கெட்டான்
தெட்டினால் மாயைதான் காயசித்தி யாகுஞ்
சேர்ந்தணைந்தால் பெண்ணோடே சீயென்ற சென்மம்
வெட்டினா லைம்புலனை மனஞ்செவ் வாகுஞ்
வெட்டாட்டால் மிரளுகின்ற கழுதை தானே. (840)



மிரளுகின்ற கழுதைகளே சொல்லக் கேளும்
வேர்தழையால் பூவிதையா லொன்று மில்லை
தரளுகின்ற சவுக்காரஞ் சுண்ண மானால்
தங்கியே கரியினிற்கு முப்புத் தானுங்
கரளுகின்ற பாறையுப்புக் கரியி னின்று
கம்மாம லுருகினாற் சூதங் கட்டுஞ்
சிரளுகின்ற சூதம்வந்து சிக்கிற் றானால்
தேசதே சங்களெல்லாந் திரிய லாமே. (841)

திரியலா மண்டரண்ட புவன மெல்லாஞ்
சித்தான மூலிகைதான் மலைதோ றுமுண்டு
தெரியலா மகாமூலி கொண்டு வந்தால்
சீக்கிரத்திற் சித்தியுண்டு வித்தை யுண்டு
வரியலா மடுக்கெல்லாம் புகுந்து பார்த்து
வாசித்துச் சாத்திரத்தைப் பார்க்க லாகும்
நிரியலா நிருவிகற்ப யோகத் துற்ற
நிலையான சித்தருடன் பேச லாமே. (842)

பேசியே புவனங்க ளெல்லாம் பார்த்துப்
பேரான மகாமேரு வடக்கே சென்று
தேசியே குளிகையிட்டுச் சஞ்சீவி மூலி
சீக்கிரத்திற் கொண்டுவந்தால் சிரஞ்சீ வியாகும்
மாசியே போகவென்று லாறு தாரம்
வரிசையோ டேறியே மவுன முன்னு
தூசியே விசுத்தியினில் வழலை வாங்கு
சுயமான குஞ்சனத்தின் சட்டை தள்ளே. (843)

தள்ளியே குருபதத்தில் மனதை மாட்டிச்
சரிந்துநிற்கு மமிர்தத்தை வாரி யுண்ணு
பள்ளியே ருமாறு கொண்டி டாதே
பாழ்போகா வாசியெல்லா முள்ளே யேற்று
உள்ளியே கடுங்காரந் தள்ளிப் போடங்
குறுக்கியே வாசிதன்னை யூணிக் கும்பி
துள்ளியே காமத்தைத் துரத்தி விட்டுச்
சுயமான குண்டலியில் மனதை யுன்னே. (844)

## சவுக்கார வைப்பு

உன்னியே சவுக்காரஞ் செய்யு மார்க்க
மூசரமாம் பூமிக்குள் பொங்கி நீருந்
துன்னியே சித்திரைவை காசிக் குள்ளே
செங்கதிரோன் ரவிதன்னில் மலர்ந்து நிற்கும்
பன்னியே மேல்நிற்கும் பூவை வாங்கிப்
பாண்டத்திற் போட்டுநல்ல தண்ணீர் வார்த்துக்
கன்னியே வோரெடைக்கு நாலு தண்ணீர்
கலக்கியே யடிக்கடி நீ மூடி வையே. (845)

மூடியே நாலாநாள் தெளிவி றுத்து
மிடாக்கெட்டி தன்னில்வார்த் தடுப்பில் வைத்து
ஆடியே கமலம்போல் தீயைத் தான்மூட்
டடியிலே பற்றுமல் துழாவிக் காய்ச்சு
பாடியே நீர்வற்றும் பதத்தில் வாங்கிப்
பாங்காக வெடுத்துமே கல்வத் திட்டு
வீடியே வெடியுப்பு நீரா லாட்டி
வில்லைபண்ணிக் காயவைத்து விபரங் கேளே. (846)

விபரமாய்ப் புடந்தானும் லகுவாய்ப் போடு
வெடியுப்பு நீர்தன்னு லரைத்த ரைத்தே
அபரமா யெருவேற்றி யைந்துபுடம் போடங்
காறவிட்டுப் பீங்கானில் பதமை பண்ணு
தபரமாய்ச் சத்தியென்ற சாரந் தானுந்
தாக்காகப் பலம்பத்து நிறுத்துக் கொண்டு
நிபரமாய் வெடியுப்பு நீர்தன் னலே
நேகவரைத் தைந்துபுடம் போட்டி டாயே. (847)

போட்டுமே பீங்கானில் பதனம் பண்ணு
பேரான கடல்தண்ணீ ருப்புக் காய்ச்சிப்
பாட்டுமே பலம்பத்து நிறுத்துக் கொண்டு
பருவமாம் வெடியுப்பு நீரா லாட்டி
நீட்டுமே யைந்துபுடம் போட்டெ டுத்து
நிலவரமாய்ப் பீங்கானில் வைத்துக் கொண்டு
ஆட்டுமே சீனாரிரு பத்துப் பலந்தா
ணுண்மையாம் வெடியுப்பு நீரா லாட்டே. (848)



நீர்தன்னு லாட்டியே ரவியிற் போட்டு
நேர்ப்பாகக் கரியோட்டி லூதிப் போடு
ஆர்தன்னு ரைத்துமே யைந்துதர மூதி
யப்புறந்தா னெடுத்துவைத் தாண்மை கேளு
சீர்தன்னுல் முன்வைத்த பூநீற்றுச் சுண்ணஞ்
சிறப்பாகப் பலம்பத்து நிறுத்துக் கொண்டு
தார்தன்னுல் சத்திசாரச் சுண்ண மெட்டுத்
தரிசீனச் சுண்ணமது பலந்தா னுறே (849)

பலநாலு கல்லுப்புச் சுண்ண மாகும்
பலமெல்லா மிருபதோ டெட்டு மாச்சுப்
பெலமாகுங் கல்வத்தில் போட்டு கொண்டு
பேரான வெடியுப்பு நீரா லாட்டிக்
குலமாகு மகலிலிட்டுக் கசபுடமாய்ப் போடு
கூர்மையாஞ் சவுக்காரங் கட்டிப் போச்சு
நலமாகும் வாதமது கைக்குள் ளாச்சு
நாதாந்த சவுக்காரச் சுண்ணந் தானே. (850)

## அருஞ்சொற்பொருள்

**பா. எண் : 801 முதல் 850 வரை**

பா. எண் : 801—பற்றுமல் = பிடித்துக்கொள்ளாமல்
பா. எண் : 807 சலந்தானும் வந்திடாது = (இதை உண்டால்) நீர்கூட இறங்காது; வழுத்த = கூற.
பா. எண் : 808—பிட்டி (பிஷ்டி) = மாவாக உள்ளதன்மை.
பா. எண் : 809—தவளம் = வெண்மை;
பா. எண் : 810—உறைப்பான = உறுதியான.
பா. எண் : 811—கபளிக்கும் = விழுங்கும்.
பா. எண் : 814—கடிது = கடினமானது.
பா. எண் : 816 ஏண்மை = மேன்மை.
பா. எண் : 819—சோதித்து = பரீட்சித்து;
பா. எண் : 822—குருவான சின்மயம் = தட்சிணமூர்த்தி;
பா. எண் : 825—தரிக்க = நிலைக்க;
பா. எண் : 832—தற்காரம் = எள்ளியதான; சேட்டை = (சேஷ்டை) வினை;
பா. எண் : 840—தெட்டினுல் = ஏமாற்றினுல், வென்றுல்;
பா. எண் : 847—நேகவரை = நன்றுக மசியும்படி அரைத்திடு.

தானென்ற சவுக்கார மகிமை சொல்லச்
சதாசிவனு முன்பின்னாய்த் தயங்கிப் போனார்
கோனென்ற வெணையீன்ற காலாங் கியையர்
கூர்ந்துமே யிதைப்பார்த்துச் சந்தோ சித்துத்
தேனென்ற சிறுபிள்ளை யுற்பத் தியாலே
தெரிந்தெடுத்தா னென்றுசொல்லித் தெளிவாம் போதங்
கானென்ற காதினிலே யுபதே சித்தார்
காரணமாக தீட்சைநான் கருத்துன் னினேனே. (851)

கருத்துன்னிச் சவுக்கார மிதனைப் போலே
காரியமா மெந்தெந்தச் சாத்திரத்து மில்லை
கருத்துன்னி நந்தியுடை நூலைப் பார்த்தேன்
காரியமாஞ் சட்டைமுனி நூலும் பார்த்தேன்
கருத்துண்ணி மூலருடை நூலும் பார்த்தேன்
காலாங்கி யையருடை நூலி லில்லை
கருத்துன்னிச் சிவநூலும் பதஞ்சலியார் நூலுங்
கருதியே வியாக்கிரமந் நூல்பார்த் தேனே. (852)

பார்த்திட்டேன் கருவூரார் சண்டி கேசர்
பாங்கான சங்கரமா முனிநூலும் பார்த்தேன்
பார்த்திட்டேன் காசிபர்தான் ராம தேவர்
பாங்கான குறுமுனியும் ரோம முனிநூலும்
பார்த்திட்டேன் கோரக்கர் இடப யோகி
பரிவாக வொவ்வொன்றாய்ச் சோதித்தே னான்
பார்த்திட்டேன் சவுக்காரஞ் செயவீ ரந்தான்
பரிபாடை யாருக்கும் பலித்தி டாதே. (853)

## பஞ்ச பூதம்

பலித்திட்ட சவுக்காரம் பஞ்ச பூதப்
பயனாகப் பண்ணியே பார்த்த நேர்மை
பெலித்திட்ட பிருதிவிமண் கல்லுப் பாச்சு
பேரான வப்புசலஞ் சத்திச் சாரம்
தெலிந்திட்ட தேயுவது நெருப்புவெடி யுப்புச்
செயநீர்தான் தீயென்றே செப்ப லாகும்
வலித்திட்ட வாயுவது காற்றுச் சீன
மகத்தான வாகாசம் பூநீ ருச்சே. (854)



ஆச்சென்ற விவையைந்தால் சவுக்கார மாச்சு
அரிதரிதா மிம்முறைபோ லார்க்கி மில்லை
வீச்சென்ற சாத்திரத்தில் வெகுபா டாக
வீணாகப் பாடிவைத்தார் சவுக்கா ரத்தை
தோச்சென்ற வடியேனும் பார்த்துப் பார்த்துச்
சுட்டலைந்து காணாம லாத்தானைக் கேட்டு
மாச்சென்ற படிபார்த்து மனது தேறி
மாசற்றுச் சாத்திரத்தில் திறந்திட் டேனே. (855)

திறந்திடா திருந்தக்கால் பாவ மென்று
செப்பினேன் சித்தியாஞ் சவுக்கா ரத்தை
மறந்திடா மனதில்வைத்துப் பலந்தா னென்ன
மகத்தான வித்தைதனை யொளித்தால் தோடம்
இறந்திடா தெல்லோரு நம்மைப் போல
வேற்றமா யாகவென்று சாத்தி ரத்திற்சொன்னேன்
பிறந்திடாக் கற்பமுண்டு சித்தியாகிப் பிராணயோக
கந்தன்னைப் பூட்டிப் பாரே. (856)

பாரென்ற சவுக்காரச் சுண்ணம் போனால்
படிப்படியா யேறுகிற வாதம் போச்சு
தீரென்ற தீனியின்மே லாசை யுற்றால்
சேர்ந்தேறுங் காயசித்தி சேரப் போச்சு
மாரென்ற மனங்குலைந்து யோகம் பார்த்தால்
மாட்டுகிற வாசியெல்ல மண்ணாய்ப் போச்சு
வேரென்ற வெடியுப்புச் சுண்ணம் போனால்
மிக்கான வழலையெல்லாம் விழலாய்ப் போச்சே. (857)

விழலாகப் போகாமல் மாயி பாதம்
விரைந்துமே யர்ச்சித்து மதுவை யுண்டு
உழலாமல் வாசிதன்னை மாட்டிக் கொண்டங்
குயர்ந்தேறிக் குருபதத்தி னுண்மை பாரு
அழலாம லிந்திரியப் பாம்பைத் தானா
மறவடித்தே யாங்காரந் தன்னைப் போக்கி
மழலாமல் வழலையைத்தான் செம்மை யாக்கு
வாதங்கை கட்டிநின் றடிமை யாமே. (858)

அடிமையாய் வாதத்தை வளர்க்கு கின்ருே
ஞதியாங் குடியானேன் கூர்மை யாளன்
மிடிமையைத்தான் தீர்க்கின்ற விற்பன் னன்தான்
மேன்மையாங் குருவான மிடுக்க ஞகுந்
திடிமையாஞ் சீக்கிரத்தில் சித்தி யானேன்
செயமாகும் லவணத்தைத் தீர்க்க ஞகுங்
குடிமையாம் பூமிக்குள் குடியோ ஞகுங்
கூ கூ கூ கொள்ளேயோ வாதந் தானே. (859)

வாதத்தில் வெடியுப் பும் பஞ்ச பூதம்
வண்மையாஞ் சவுக்காரம் பஞ்ச பூதஞ்
தீதற்ற செயநீராம் பஞ்ச பூதஞ்
செயமான குருவுக்கும் பஞ்ச பூதங்
கோதற்ற சடத்துக்கும் பஞ்ச பூதங்
குறியாகப் பழுப்பதற்கும் பஞ்ச பூதங்
காகத்த களங்குக்கும் பஞ்ச பூதங்
காரியமாம் வாதமெல்லா மஞ்சு தானே. (860)

## சவுக்காரக் குரு

அஞ்சான சவுக்காரக் குருவைக் கேளு
ஆதியா முன்வைத்த சவுக்கா ரத்தைத்
துஞ்சான தொருபலந்தான் நிறுத்துக் கொண்டு
சுட்டகல்லுச் சுண்ணமது பலந்தா னெட்டு
நஞ்சான நற்றண்ணீர் பலமுப்பத் திரண்டு
காட்டியே பீங்கானிற் கரைத்து வைத்துத்
தெஞ்சான நாலாம்நாள் தெளிவை வாங்கிச்
சிறப்பாகப் போடுகிற மருந்து கேளே. (861)

கேளென்ற வெடியுப்புச் சுண்ண மொன்று
கெடியான கருவங்க மொன்று கூட்டி
ஆளென்ற வடுப்பில்வைத்துச் சட்டி தன்னி
லக்கினியைத் தான்கீழிட் டுருக விட்டுத்
தாளென்ற வயத்தாலே தேய்க்கத் தேய்க்க
சாங்கமாய்த் தூளாகும் பதத்தில் வாங்கி
வேளென்ற வெடியுப்பு நீர்விட் டரைத்து
வில்லேகட்டி மிடுக்கான புடத்திற் போடே. (862)



புடம்போட்டே யமுரியால் நீற்றிக் கொள்ளு
பேரான வெள்ளிய மிப்படியே பண்ணு
இடம்போட்டே யெட்டிலொன்று வெடியுப்புச் சுண்ணத்
திசைத்துமே சவுக்காரச் சுண்ணங் கூட்டு
நடம்போட்டு நாகமுமிப் படியே பண்ணு
நயமாக வரைத்தரைத்துக் கரியோட்டி லூதித்
துடம்போட்டுச் சுண்ணும்புப் பக்கு வத்திற்
சோதித்துப் பலமொன்று முன்னீரிற் போடே. (863)

போடவே வகைவகைக்கோர் பலந்தான் நீயும்
பேரான அரப்பொடியின் சுண்ணங் கேளு
நீடவே யரப்பொடிதான் பலமும் பத்து
நிகழான வரப்பொடியைப் பழச்சாறு விட்டு
மூடவே மூன்றுநா ளூற வைத்து
முனேயான நீர்தன்னிற் கழுவிப் போட்டு
வாடவே வாழைபா லரப்பொடியில் விட்டு
வளமாகப் பிசறியே யஞ்சுநாள் வையே. (864)

அஞ்சுநாள் வைத்தபின்பு குதிரைப் பல்லு
ஆண்மையாம் பாடான மொக்கப் போட்டுப்
பஞ்சுநாள் ஆரப்பொடித்துப் பாதி சேர்த்துப்
பாங்காக வரைத்துமே வாழைப் பாலால்
ஓஞ்சுநா ளோட்டிலிட்டுப் புடமாய்ப் போட்டங்
குருக்கிடுவாய் குகையிலிட்டுக் கண்விட்டாடுந்
தஞ்சுநாள் கல்வத்திற் பொடியாய்ப் பண்ணிச்
சமன்போடு வெடியுப்புச் சுண்ணந் தானே. (865)

தானென்ற வெடியுப்பு நீரா லாட்டித்
தாக்கியே யூதிடவே சுண்ண மாகுந்
தேனென்ற வொருதரத்தி னீரு விட்டால்
திரும்பவுமே முன்போல வரைத்தே யூறும்
கோனென்ற கொடுஞ்சுண்ணம் லோக மாகுங்
கொட்டியே முன்னீரில் கலக்கிக் கொள்ளு
வானென்ற செம்புதன்னே நொச்சிச் சாற்றில்
வளமாக வுருக்கியே சாய்த்தி டாயே. (866)

சாய்த்திடுவாய் பதின்மூன்று தரந்தா னீயுஞ்
சண்டாள ஊறலெல்லாங் கக்கிப் போடுந்
தோய்த்திடுவாய் செம்புதனைத் தகடு தட்டித்
துரிசான வெடியுப்புப் பலந்தான் பத்து
ஆய்த்திடுவா யடிகனத்த சட்டி தன்னை
யடுப்பிலே வைத்துமே வுப்பைப் போடு
ஓய்த்திடுவா யுருகையிலே செம்பைந்து பலந்தான்
ஞெக்கவிட்ட டுப்பேற்றி யெரித்தி டாயே. (867)

எரித்திடுவாய் நாற்சாமங் கமலம் போல
விதமாக வாறவிட்டு மருந்து டைத்துத்
தெரிந்திடுவாய் செம்பெல்லாந் தெரிந்தெடுத்துச்
சிதரும வுடைத்துமே செம்பை வாங்கு
தரித்திடுவாய் கல்வத்தில் நொறுக்கிக் கொண்டு
கண்டவெடை வெடியுப்புச் சுண்ணம் போட்டு
அரைத்திடுவாய் வெடியுப்பு நீரி னுனே
யாண்மையாய் வில்லைகட்டி ரவியில் போடே. (868)

போடவே புளிப்புறணி காட்டெ ருத்தான்
போர்போலக் குவித்துமே வில்லை தன்னை
ஓடவே யோட்டில்வைத்துத் தீயைப் போடங்
குத்தமமாஞ் சுண்ணம்பாஞ் செம்பு தானுங்
காடவே கல்லுப்புப் பலந்தா னென்று
காரியச் சுண்ணமது பலந்தா னென்று
வீடவே வெடியுப்பு நீரா லரைத்து
மிடுக்காக வோட்டிலிட்டுப் புடத்தைப் போடே. (869)

இட்டுமே சாரமது பலந்தா னென்றங்
கேற்றமாஞ் செம்பென்ற சுண்ண மொன்று
விட்டுமே வெடியுப்பு நீரா லரைத்து
மிரளாதே யண்டோட்டுக் குள்ளே வைத்துத்
துட்டுமே சுண்ணம்புச் சீலை செய்து
துப்புரவாய் லகுபுடமாய்ப் போட்டெ டுக்கக்
கெட்டுமே சுண்ணம்பாஞ் சீனந் தன்னைக்
கெடியாகப் பலமைந்து தூக்கிக் கொள்ளே. (870)



தூக்கியே துத்திநா கத்தின் சுண்ணந்
துணையாக வைந்துபலங் கூடப் போட்டு
வீக்கியே வெடியுப்பு நீரா லாட்டி
மிடுக்காக வோட்டிலிட்டுப் புடத்தைப் போடு
தேக்கியே சுண்ணம்பாஞ் சீனச் சுண்ணந்
துரிசியொரு பலந்தானு நிறுத்துக் கொண்டு
வாக்கியே வெள்ளீயச் சுண்ண யொன்று
மறவாதே வெடியுப்பு நீரா லாட்டே. (871)

ஆட்டியே வில்லைபண்ணிப் புடத்தைப் போடங்
காகாகா கொடுஞ்சுருக்குத் துரிசி சுண்ணந்
தூட்டியே சூடனொரு பலநி றுத்துத்
துரிசான லோகத்தின் சுண்ண மொன்று
பூட்டியே வெடியுப்பு நீர்தன் னாலே
பொருந்தரைத்து வில்லைபண்ணிக் காயப் போடு
ஓட்டியே யேரலென்ற கிளிஞ்சிற் குள்வைத்
துறுதியாய் மூடியே புடத்தைப் போடே. (872)

மூடியே புடம்போட மிடுக்காஞ் சுண்ண
மிக்காகப் பலநிறுத்துக் கல்வத் திட்டு
ஆடியே வகைவகைக்குப் பலநி றுத்து
மருவநன்ருய்ப் பொடிபண்ணி முன்னீரிற் போட்டுத்
தீடியே நாலாநாள் தெளிவி றுத்து
செயபிட்டி தன்னையெல்லாங் காயப் போடு
பாடியே பதனமாய் வைத்துக் கொண்டு
பாங்கான நீர்தன்னிலே போடக் கேளே. (873)

கேளுநீ குருவண்டோ வைம்பத் தொன்று
கெடியான புழுகோடே யுரமுஞ் சூதம்
வேளுநீ வீரமொடு கருநாபி பூரம்
மிடுக்கான வெண்மலமும் வராக னிட்டு
மீளுநீ முன்தண்ணீர் தனிலரைத்துக் குழம்பி
மிக்கான குக்குடத்தின் வெண்கருவை வாரு
ஆளுநீ வைம்பதுட னென்றுதான் வார்த்த
தட்டியே கவர்கழியால் கடைந்து வையே. (874)

கடைந்துமே மூன்றுநா ளான பின்பு
கலங்காமல் தெளிவிறுத்து வைத்துக் கொண்டே
இடைந்துமே யிந்நீரில் சவுக்கா ரத்தை
யேற்றமாய்ப் பலம்பத்து நிறுத்துப் போட்டுக்
குடைந்துமே கல்வத்தில் குளிர வாட்டிக்
கொடுந்தெல்லு போலவே வில்லை கட்டி
நடைத்துமே ரவியிலிட்டுக் காயப் போட்டு
நலமான பூநீற்றை யோடுதனிற் பரப்பே. (875)

பரப்பியே யதன்மேலே வில்லை வைத்துப்
பாங்காகப் பூநீறு மேலும் போட்டே
அரப்பியே யைம்பதெரு வடுக்கிப் போடங்
காறவிட்ட ரைத்தரைத்தைந் துபுடம் போடு
புரப்பியே பூப்போலச் சுண்ண மாகும்
பேசாதே யொருவருடன் பதனம் பண்ணு
உரப்பியே யிம்முறைதா னொருவர்க் குமுல்லை
யுலகமெல்லாம் பொன்மயமா முண்மை தானே. (876)

உண்மையாய்ச் சொல்லிவிட்டேன் சவுக்கா ரத்தை
யுத்தமமாஞ் சீடருக்கிம் முறையைச் சொல்லு
வண்மையாக் குணம்பாரு வணக்கம் பாரு
மனவுறுதி தனைப்பார்த்து வழலை போதி
துண்மையா யழும்பருடன் பேசி டாதே
துன்மார்க்கர் காமுகர்க்குச் சொல்லி டாதே
தண்மையாங் குணம்பார்த்துச் சவுக்காரத்தைச்
சாற்றியே சீடனெனச் சாரப் பண்ணே. (877)

## சவுக்காரச் செயநீர்

பண்ணியதோர் சவுக்காரச் சுண்ணந் தன்னைப்
பலம்நிறுத்துக் கல்வத்திற் போட்டுக் கொண்டு
நண்ணியதோர் நவசாரம் வெங்கார மிட்டு
நாட்டுவாய் வகைவகைக்குப் பலந்தான் கூட
கண்ணியதோர் கல்வத்தில் போட்டுக் கொண்டு
கடிசாக வரைத்துமே நாலு சாமம்
ஒண்ணியதோ ரண்டோடு தனில டைத்தங்
குற்பனமாய்ப் புடம்போட்டுப் பனியில் வையே. (878)



பனியில்வைக்கப் பலபலெனச் செயநீ ராகும்
பாங்கான விந்நீரில் வீரம் பூரம்
நினியவே பொடிபண்ணி நீரிற் போட்டு
நிசமான பீங்கானி லெடுத்து வைப்பாய்
அனியில்வைக்க வறுபத்து நாலுங் கட்டு
மடங்கலா முபரசங்கள் சத்து மாகுந்
தனியில்வைத்த சாரகாரங் களெல்லாந்
தயங்காமற் கட்டியே மணிபோ லாமே. (879)

மணியாகக் கல்லுப்புக் கரியினின் றுடும்
வயிரமா முப்பாலே கட்டினங்கள் கோடி
துணியாகத் தரைதன்னில் கிடந்தால் சும்மா
துடியிலே கட்டினால் விருது மாச்சு
உணியாக வுப்படங்கிக் கட்டிற் றுனு
லுகாந்தவரைச் சடந்தானு மிருக்க லாகும்
பிணியான ததுபோச்சு சாவும் போச்சுப்
பிராணயோ கங்களெல்லாம் பிசகி டாதே. (880)

பிசகாமல் யோகம்விட்டு ஞானம் பார்த்தால்
பேயரே யென்னசொல்வேன் மனஞ்செவ் வாமோ
அசகாம லடிமரத்தை யேறு மற்று
னந்தரமாய் நுனிமரத்தி லேற லாச்சு
இசகாம லிளமையினி லெல்லாந் தான்கண்
டேற்றமாம் மூப்பில்மன மற்றுப் போகும்
உசகாமல் யோகத்தை யுன்னித் தான்பார்த்
துயர்ந்தபின்பு ஞானத்தி லுன்னி டாயே. (881)

உன்னவே மனமதுதா னலைந்தி டாம
லுறுதியா யோகத்தி லுற்று னால்
பன்னவே யுள்மகிழ்ச்சி கண்டு பார்த்தும்
பறந்தோடு மைம்புலன்கள் பாழிற் சேரும்
கன்னவே காயசித்தி செய்தா னால்
கடிசிலே யோகமது சித்தி யாகும்
முன்னவே மூலமதைச் சித்தி யாக்கி
மூதண்ட மனத்தைமெள்ள மேலே யேற்றே. (882)

ஏற்றியே லட்சியத்தை நாட்கள் தோறு
மிருக்கினல் சடந்தானு மழிந்தி டாது
மாற்றியே மனங்குவிந்து யோகம் பார்த்தால்
மகத்தான சித்தியெல்லா மாட லாகுந்
தூற்றியே வாதமது சொன்னபடி கேட்குஞ்
சொரூபமணி செய்வதற்குச் சித்தி யாகுங்
கூற்றியே மனதாசை பட்ட தானல்
கொடியவிடப் பாம்புபோற் கொல்லுந் தானே. (883)

கொல்லுகிற வாசையினல் பெண்ணைக் கூடிக்
கூருன வாதத்தைப் பார்த்தா னுனல்
மல்லுகிற மயக்கத்தி லழுந்திப் போவான்
மாண்டபின்பு நரகெய்தும் பிறவி தோறும்
செல்லுகிற செவனுடைத் திரிகைபோல
செகச்சாலத் தேசுழன்று சிறுத்துப் போவான்
வெல்லுகிற பூரணத்தில் மேவி நின்ருல்
வேண்டியதோர் சித்தியெல்லா மாடலாமே. (884)

சித்தியா முப்பொன்று சிவன்தான் சொன்னர்
தேவியவள் மனமகிழ்ந்து நந்திக்குச் சொன்னுள்
நத்தியாம் நந்திதிரு மூலருக்குச் சொன்னர்
நலமாகத் திருமூலர் காலாங்கிக் குரைத்தார்
கத்தியாங் காலாங்கி நாதர் தாமுங்
கடாட்சித்துப் பக்குவத்தி லடியேற்குச் சொன்னுர்
புத்தியா யடியேனும் பார்த்துத் தேறிப்
புகழ்ந்தவே ழாயிரத்திற் பாடி னேனே. (885)

## சித்தர்கள் நூல் தொகுப்பு

பாடினர் மச்சமுனி யேழு கண்டம்
பதஞ்சலியா ரைந்துகண்டம பாவாய்ச் சொன்னுர்
கூடினர் கோரக்கரைந்து கண்டம் வெண்பா
குறுமுனிதா னெட்டுப்பா நவகண்டஞ் சொன்னர்
தேடினர் காசிபர்தாம் வண்ணஞ் சொன்னர்
சிவயோக முனிதானுந் தாழிசைப்பாச் சொன்னர்
ஓடினு ருரோமமுனி வடுகிற் சொன்னு
ருசிதமாஞ் சிவவாக்கிகுறு விருத்தப்பாவே. (886)



விருத்தமா யெண்ணிறந்த வாதஞ் சொன்னர்
வீருன சட்டமுனிநெடு விருத்தஞ் சொன்னர்
திருத்தமாய்க் நந்தீசர் சந்தஞ் சொன்னர்
திருமூலர் சொன்னதுதான் மந்திர மாலே
வருத்தமாய் காலாங்கி யையர் தாமு
மட்டுவி நத் தப்பாவால் வகையாய்ச் சொன்னர்
கிருத்தமாய்ச் சங்கரமா முனிவர் தாமுங்
கெடியான குறும்பாவாற் சொன்னுர் தாமே. (887)

சொன்னதோர் இடபமாம் யோகி தானுஞ்
சூட்சமாய் வண்ணவிருத்தஞ் சூட்டிச்சொன்னர்
கன்னதோர் கருவூரார் கழிநெடிலின் விருத்தங்
கரைகாணுச் சாத்திரங்கள் மெத்தவுண்டு
இன்னதோர் சித்தரெல்லா முப்பு சொன்ன
ரிழுக்கான வுப்பதுதா னேற்ற மில்லே
பன்னதோ ரிந்தவுப்புக் குருவுக் கொப்பாய்ப்
பாடினேன் பலபேரும் பிழைக்கத்தானே. (888)

## பஞ்சசாரக் காரச் சுண்ணம்

பிழைக்கவே யுப்பைநன்ருய்க் கட்டி யாடு
பொய்யொன்றும் போகாது வாதந் தானும்
உழைக்கவே யுப்பென்ருல் வாய்க்கெளிதோ மக்கா
ளுப்பதுவே தென்றக்கால் சொல்லக் கேளும்
வழைக்கவே மாயயுடை நாத மாகும்
வாருதிக்குள் பாறைபோ லிருக்கும் பாரு
விழைக்கவே யுப்பறிந்து வெட்டித் தானு
மிக்கான பாக்குப்போ லுடைத்துக் கொள்ளே. (889)

பாக்குப்போ லுடைத்துமே வைத்துக் கொண்டு
பக்குவமாய்ச் சொல்லுகிறே னுற்றுக் கேளு
வீக்குப்போல் முன்வைத்த வெடியுப்புச் சுண்ண
மிடுக்கான சவுக்காரச் சுண்ண மோடு
காக்குப்போல் காரியக் கல்லுப்புச் சுண்ணங்
கனமான செம்புக்கும் சாரச் சுண்ணந்
தீக்குப்போல் நாகத்தின் சீனச் சுண்ணந்
துரிசியினில் வெள்ளீயச் சுண்ணந் தானே. (890)

தானென்ற லோகத்தில் சூடன் சுண்ணஞ்
சமனுக விவையெல்லா நிறுத்துக் கொண்டு
வேனென்ற சாரமது சமனுய்ச் சேர்த்து
மிடுக்காக வரைத்திடுவா யெட்டுச் சாமம்
வானென்ற மருந்தெடுத்துக் கலசத் திட்டு
மறவாதே சீலைசெய்து புடத்தைப் போடு
தேனென்ற பனியில்வைக்கச் செயநீ ராகுஞ்
செயநீரில் வீரந்தான் தோய்த்தி டாயே. (891)

வீரமொடு வெங்கார மிலிங்கந் தானு
மீருமற் பூரமொடு பொடியாய்ப் பண்ணித்
தீரமொடு செயநீரில் கலக்கிக் கொண்டு
சிறப்பாகக் கல்லுப்பைத் தோய்த்துப் போடு
பாரமொடு பத்துநாள் தோய்த்துத் தோய்த்துப்
பாங்கான ரவிதன்னிற் போட்டுவா நீ
தாரமொடு முன்சாரஞ் சவுக்காரச் சுண்ணஞ்
சார்ந்ததோர் செயநீரில் தோய்த்துப் போடே. (892)

தோய்த்துமே மூன்றுநாள் போட்ட பின்பு
சுளுக்கான காரமொடு வீரம் பூரம்
நீய்த்துமே யிலிங்கமொடு வகைக்குக் காசெடைதா
னேரான வுப்புநாற் பலத்திற் பூசு
ஓய்த்துமே யுலர்ந்தபின்பூ சரத்தி லேவைத்
துருகவே புடம்போட் டெடுத்துக் கொண்டு
தீய்த்துமே முன்னுலுஞ் செயநீ ரிலரைத்துச்
செப்பமாய்ப் பூசியே புடத்தைப் போடு. (893)

பூசியே கடுபுடமாய்ப் போட்டெ டுத்துப்
பின்புமே கடுங்காரப் பிட்டியிலே போடு
வாசியே முடிந்திடம்போல் மணியு மாகு
மகத்தான கரியினின்று கண்விட் டாடுந்
தேசியுடை யோட்டம்போல் தூர வோடுந்
துட்டருடன் சேராதே செய்தொழிலைப் பாரு
மாசியே கிஞ்சிதமு மில்லை கண்டாய்
வாதமுறை கைகட்டி மருவிப் போச்சே. (894)



போச்சென்ற காயசித்தி யோக சித்தி
பொய்போகா வாதசித்தி யெல்லா மாகுங்
கூச்சென்ற குளிகைசித்தி கொடுஞ்சுருக்கி லாச்சு
கூர்மையாய்ச் சத்துவகை மெதுவு மாச்சு
பாச்சென்ற தீநீருங் களங்கு சிந்தூர
மாசற்ற குருவெல்லாம் கணத்தி லாச்சு
மாச்சென்ற ரசவித்தை பாலை யாச்சு
பரவிச்சு அண்டரண்ட முப்பி னுட்டே. (895)

உப்பாலே பொருளாச்சு ஞான மாச்சு
உயர்ந்திட்ட தவமாச்சு யோக மாச்சு
உப்பாலே யுற்பனமு மொடுக்கினமு மாச்சு
ஒடுகிற கடுவேக முப்பா லாச்சு
உப்பாலே ருசியாச்சு பெலனுண் டாச்சு
உப்பில்லா வறுசுவையு மொளித்துப் போச்சு
உப்பாலே புடசெயங்க ளெல்லா மாச்சு
உப்பைவிட்டா லொன்றுமில்லை யொக்கப் பாரே. (896)

இல்லையென்ற வுப்பினுடைக் கட்டைப் போலே
யெந்தெந்தச் சாத்திரத்தில் பார்த்தே னில்லை
அல்லையென்ற வுப்பினுடை யாண்மை போலே
யடங்காத புகையெல்லா மடக்க மாட்டா
தல்லையென்ற விரும்பதுவுஞ் சவுதிரை யற்றுத்
தயங்காம லுருகாதே யூற லாகும்
பல்லையென்ற பாடாண முருகித் தானும்
பாங்காகக் கரியினின் ருடும் பாரே. (897)

ஆடுகின்ற வுப்பாலே களங்கு கேளு
அரப்பொடியைப் பழச்சாற்றி லூறப் போட்டு
நாடுகின்ற நாலாநாள் தண்ணீரிற் கழுவி
நலமாக நிறுத்துமே கல்வத் திட்டுக்
கூடுகின்ற வயத்துக்குப் பாதி தானுங்
குதிரைப்பல் பாடாணங் கூட விட்டுக்
காடுகின்ற கட்டுப்புக் கால்வாசி யிட்டுக்
கடிந்தரைத்து வெடியுப்பி னீரா லாட்டே. (898)

அரைத்துமே மூசைக்குள் வாரி யிட்டங்
காக்கமா யுலேயில்வைத் துருக்கி னக்கால்
கரைத்துமே யீயம்போல் கண்விட் டாகுங்
காரிய மாயெடுத் தப்பால் வைத்துத்
திரைத்துமே செம்பதனைச் சுத்தி பண்ணித்
திறமான வெடியுப்புச் சேரி ரண்டு
தரைத்துமே யடிகனத்த சட்டியிலே போட்டுத்
தங்காம லுருகையிலே செம்பைப் போடே. (899)

போடவே தகடுதட்டிச் சேரு வொன்று
போட்டுலும் புருகையிலே கூடப் போடு
நாடவே நாற்சாம மெரியிட் டிறக்கி
நலமாக வாறியபின் செம்பெல்லாம் வாங்கி
ஊடவே காரமிட்டு ருக்கிக் கொண்டங்
குருகினதோ ரயமதுவும் பலந்தா னென்று
தீடினதோர் செம்பதுவும் பலந்தா னுலு
சேர்த்துமே யொன்றாக வுருக்கி டாயே. (900)

## அருஞ்சொற்பொருள்

பா. எண். 851 முதல் 900வரை

பா. எண் : 851—கருத்துன்னினேன் = உளங்கொண்டேன்

பா. எண் : 852—வியாக்கிரமர் = வியாக்கிரபாதர். (இப் பெயர் புலிப்பாணி என்று பெயர் கொண்ட இவருடைய சீடரைக் குறிக்கா தென்பதை உணர்க)

பா. எண் : 853—இடபயோகி = ரிஷபயோகி என்பது வடசொல்; பரிபாடை = அறிவியல் சிறப்பு வழக்கு (குழூஉக் குறி என்பது போன்றது).

பா. எண் : 855—ஆத்தாள் = உன்மனை ; திறந்திட்டேன் = மறைவாக இருந்த முறையை வெளிப்படையாகச் சொன்னேன்

பா. எண் : 856—மகத்தானவித்தை = பெரிய அரிய ஆய்ந்தறிந்த மெய்ப்பயனை; ஒளித்தால் = (பிறர் அறியா வண்ணம் அறிவியாது) மறைத்து விட்டால்; தோடம் = பாவம்; ஏற்றம் = மேன்மை



பா. எண் : 857—தீனி = உணவு (மனிதரல்லாத மற்றச் சீவர்கள் உண்ணும் உணவு, இழிவுக்குறிப்பு) சேர = ஒருங்கே

பா. எண் : 858—குருபதம் = ஆயிரத்தெட்டிதழ் தாமரை (சகஸ் ராரம் என்றும் வடநூல்) அற = மிச்சமின்றித் தீர்ந்துபோகும்படியாக; ஆங்காரம் = சினம், தாம் தமது என்ற செருக்கு.

பா. எண் : 859—மடிமை = இன்மை (தரித்திரம்); விற்பன்னன் = புலவன், சதுரன்; மிடுக்கன் = வல்லவன்; திடிமை = விரைவு, திண்மை, நிறைவு முதலியவைகளைக் குறிக்கும் பண்புப் பெயர்; தீர்க்கன் = (தீர்க்கதரிசி) இறந்தது எதிரதுநோக்கிச் சொல்லு மாற்ற லுள்ளோன்; கொள்ளையோ = மிகுதிக்கண்வந்த வழக்கு.

பா. எண் : 860—பழுப்பதற்கு = வெற்றிகாண, தங்கமாக

பா. எண் : 861—கல்லுச்சுண்ணம் = கற்சுண்ணும்பு

பா. எண் : 867—சண்டாள = கீழ்த்தரமான ; ஊறல் = இது அயத் துக்கு இயற்கையாக உள்ள ஒரு குறைபாடு. இக் குறைபாடு இந்த உலோகத்தைத் துருப்பிடிக்க வைக்கிறது.

பா. எண் : 868—தெரிந்தெடுத்து = தேடி எடுத்து

பா. எண் : 870—துப்புரவு = சுத்தமாக; கெடியாக = சரியாக

பா. எண் : 872—ஏரலென்ற கிளிஞ்சில் = கும்பிடு கிளிஞ்சில்

பா. எண் : 873—செயபிட்டி = வெற்றி தரும் மா (சுண்ணம்)

பா. எண் : 874—உரம் = நெல்லிக்காய்க் கந்தகம்; வெண்மலம் = கோழியின் வெண்ணிற மலம்; குக்குடம் = கோழி (முட்டை); கவர்க்கழி = மத்துப் போன்ற ஒரு கருவி;

பா. எண் : 875—தெல் (தெல்லு) = திலக்க (பனையேடு)

பா. எண் : 876—பதனம் = பத்திரம்.

பா. எண் : 877—வணக்கம் = பணிவு.

பா. எண் : 878—கடிசாக = விரைவாக; ஒண்ணிய = (ஒளி பொருந்திய) சுத்தி செய்யப்பட்ட.

பா. எண் : 880—துடியில் = மிக்கவிரைவில்; விருது = அரசுதரும் கௌரவப் பட்டம்; பிசகிடாது = தப்பாகாது

பா. எண் : 883—லட்சியம் = குறிக்கோள்; இறுக்கினல் = வலியச் செய்தால்; குவிந்து = அடங்கி; வாதம் = கட்டு, களங்கு, சுண்ணம் முதலான மருந்துகள் செய் முறை; சொரூபமணி = இது இரசமணிகளில் ஒரு வகை. இதன் விவரம் யோகமுனிவர் மூன்ரும் ஆயிரத்தில் காணலாம்

பா. எண் : 884—மல்லுகிற = அரிக்கின்ற; திரிகை = (திகிரி) சக்கரம்; செகச்சாலம் = மாயை; சிறுத்துப் போவான் = புகழின்றி அற்பனுவான்

பா. எண் : 885—நத்தியாம் = விரும்பிவந்தடைந்தவனுகிய; பார்த்துத்தேறி = ஆராய்ந்து பார்த்துத் தெளி வடைந்து

பா. எண் : 886—பாவாய் = பாடலாய்; நவ = ஒன்பது; வடுகிற் சொன்ஞர் = தெலுங்கில் கூறினர்; குறுவிருத்தப்பா = கலிவிருத்தம் போன்ற பாடல்

பா. எண் : 889—மாயியுடை நாதம் = மனேன்மணித்தாயின் நாத மாகும்; வாருதி = (வாரிதி) கடல்

பா. எண் : 894—கிஞ்சிதமும் = ஒரு துளியும்.

பா. எண் : 895—கணம் = (க்ஷணம்) ஒரு நொடி.

பா. எண் : 896—உற்பனம் = தோற்றம்; ஒக்கப்பாழ் = முற்றும் ஒழிந்தது.

பா. எண் : 897—சவுடு = துரு; திரை = மேல்மட்டம் சுரசுரத்து மேடுபள்ளங்கள் ஏற்படுதல்; ஊறல் = பொடிப் பொடியாய்விடும் தன்மை.

———

உருக்கியே திரிவங்கங் கட்டக் கேளு
உயர்ந்ததோர் நாகமது பலந்தா னுலும்

வெருக்கியே வெள்ளீயம் பலந்தா னுலு
மீருமல் காரீயம் பலந்தா னுலு

முருக்கியே மூன்றுமொன்ரு யுருக்கிக் கொண்டு
முனையான கல்லுப்புச் சேரி ரண்டு

கருக்கியே கள்ளிப்பால் வார்த்தங் காட்டிக்
கணக்காக நாற்சாமம் புடத்தைப் போடே. (901)



புடம்போடு கள்ளிப்பால் வார்த்த ரைத்துப்
பெரிதாக வைந்துபுடம் போட்ட பின்பு

கடம்போடு உப்பெடுத்துக் கற்ருழஞ் சாற்றிற்
கலந்தரைத்து மெழுகுபோல் திரிவங்கந் தன்னில்

நடம்போட்டு மேற்கவச நன்ருய்க் கட்டி
நலங்காம லோட்டிலிட்டுப் புடத்தைப் போடு

மிடம்போட்டு மேற்கவசங் கலந்து போனல்
மிரளாதே முன்போல அரைத்துக் கட்டே. (902)

கட்டியே நூறெருவிற் பத்துவிசை போடு
கடுங்கட்டு மணிபோலக் கரியி லாடுந்

தெட்டியே யயமொன்று செம்பு நாலு
திரிவங்க மூன்றுபலங் கூடவிட்டு ருக்கிப்

பட்டியே யுருகையிலே கட்டு முப்புப்
பலமொன்று சுத்தித்த சூத மொன்று

கொட்டியே கல்வத்தி லிரண்டும் போட்டுக்
குப்பைமேனிச் சாற்ரு லரைத்தி டாயே. (903)

அரைத்திட்டு மிளகுபோ லுண்டை பண்ணி
யைந்துந்தா னுருகையிலே நாலிலொன்று தங்கங்

குரைத்திட்டுச் சேர்த்துநின் றுருகும் போது
கொடுத்திடுவா யுண்டைதன்னை யொவ்வொன் ருகக்

கரைந்திட்டுக் காரமிட் டடிக்கடிக்குத் தானுங்
களங்காகு மாறவிட்டு மதியி லொக்க

நரைத்திட்டு நாற்பதுக்கொன் றீந்தால் மிக்க
நலமான மாற்றேழு காணுங் காணே. (904)

## உப்புச் சிந்தூரம்

காணுமே சிந்தூரஞ் செய்யக் கேளு
கடிசான களங்கத்தி லுலக் கொன்று

வேணுமே கெந்தகந்தான் மனேசிலையுங் காரம்
வீரந்தான் முன்களங்கி லெட்டிலொன்று கூட்டி

பூணுமே பொற்றலையின் சாற்றி லாட்டிப்
புகழாகப் புடம்போடச் சிந்தூர மாகுங்

கோணுமே நூற்றிலொன்று கொடுத்தா யானல்
குறையாது பத்தரைதான் கூர்ந்து பாரே. (905)

பாரென்ற முன்களங்கில் வீரம் பூரம்
பாங்கான புழுகொடு நல்லூரமுஞ் சீனம்
வாரென்ற வகைக்குக்கா செடையே கூட்டி
மார்க்கமா யெருக்கம்பால் விட்டே யாட்டிக்
காரென்ற களங்கில்விட்டுப் பிசறிக் கொண்டு
கசபுடமாய்ப் போட்டெடுக்கக் குருவு மாகும்
நேரென்ற குருவாலே சூதங் கட்டும்
நிரைநிரையாய்ப் பாடாணங் கட்டிப் போமே. (906)

போமென்ற குருவாலே கோடிகவ ராடும்
போக்கிதிலே மெத்தவுண்டு பிரித்துப் பாரு
ஆமென்ற வுப்பாலே வழலை தொட்டே
யாடினுல ண்டரண்டந் துளைந்தே யாடும்
வாமென்ற வழலையில்லா வுப்புக் கட்டு
வாருகோற் கட்டுக்குச் சமான மாகும்
காமென்ற வழலையினிற் கட்டிற் ருனல்
கண்விட்டுக் கரியினின் ருடுந் தானே (907)

தானென்ற வுப்பெடுத்து ருக்கிப் பாரு
சமரசமாய்க் கரியினின்று பொன்போ லாடும்
நானென்ற வழலைதொட்டு உப்பைக் கட்டி
நாதமாங் குளிகைகட்டி யாடித் தேர்ந்து
ஆனென்ற வண்டத்திற் குவடு புக்கி
யடுக்கெல்லாஞ் சோதித்தா ராய்ந்து பார்த்து
மானென்ற வாறுவரை தாண்டி யேறி
மாசற்ற நிர்க்குணத்தில் மனமுன்னி னேனே. (908)

## ஆதி நூல்

மனமுன்னி நூற்றறுப தாமண் டத்தில்
வைத்திருந்த சாத்திரத்தில் மனம்பா வித்து
நனவுன்னி நந்தியென்ற பாட்டருடைக் குருவை
நாவினுல் துதிசெய்தேன் பார்நீ யென்ருர்
கனவுன்னித் திருமூலர் பேரன் யான்தான்
கடாட்சிக்க வேணுமென் றடியேன் வந்தேன்
துனவுன்னி வந்ததோர் கரும மென்னச்
சொல்லென்று கேட்டலுமே பணிந்தேன் யானே. (909)



பணிந்துநின்று கைகட்டி வாய்பு தைத்துப்
பாட்டருடை நூற்காதி யெங்கே யென்றேன்
துணிந்துநின்ற நூற்றறுப தாமண் டத்தில்
சுருதியா நந்திபக்க லிருக்கு தென்ருர்
அணிந்துநின்ற வடியேனு மதனி னேர்மை
யறியவென் றையர்பக்கல் வந்தே னென்றேன்
கணிந்துமே காப்போடுங் கடையேடு மட்டுங்
கருத்துடனே பாரென்று கடாட்சித் தாரே. (910)

பாரென்று கைகொடுத்தார் சுருதி நந்தி
பாங்கான வெழுகண்டப் பாவை யெல்லாந்
தூரென்று சோதித்து வரைந்து கொண்டு
சுருதியாய் நந்திதனை யனுப்பிக் கொண்டு
காரென்ற மலைமுழைஞ்சில் வந்தி ருந்து
கலக்கமா யிருந்தவெல்லாங் கருதிப் பார்த்தே
ஏரென்ற வெழுகண்ட மெழுபது நூறங்
கெழுதினே னிணையொன்று மில்லை தானே. (911)

## உப்புச் சுண்ணம்

இல்லாத வுப்பினுடைச் சுண்ணங் கேளு
ஏற்றமாய்க் கட்டியதோ ருப்புத் தன்னை
கல்லாத பலம்பத்துக் கல்வத் திட்டுக்
கடுகுபோ லுடைத்துமே சட்டியிலே போட்டு
நல்லாத நாயுருவி நுனிக்கதிரைக் கொய்து
நறுக்கியே போட்டுமே பயத்தால் கிண்டு
பல்லாத பன்னிரண்டு சாமந் தானும்
பாங்காக வறுத்திடவே சுண்ண மாகும் (912)

சுண்ணத்துக் கெடைக்கெடைதான் சாரஞ் சேர்த்துத்
துவளவரை நெட்டடங்கு மட்டுந் தானும்
வண்ணத்துக் கலசத்தில் வாரி யிட்டு
மார்க்கமாய்ப் புடம்போட்டுப் பணியில் வைப்பாய்
பண்ணத்துப் பலபலெனச் செய நீராகும்
பாங்கான விந்நீரில் வீரம் பூரம்
புண்ணத்துப் பொடிபண்ணி நீரில் தானும்
போட்டிடவே சிவப்பாகும் பெருமை கேளே. (913)

பெருமையாம் நீரதுவும் பலந்தா னென்று
பீங்கானி லிட்டுமே பூரம் பச்சை
நிருமையாம் பலம்நிறுத்து நீரிற் போட்டு
நிழலில்வைத்து மூன்றுநாள் ரவியில் மூன்று
அருமையாய் ஆறு நாளான பின்னர்
அரைத்துமே வில்லைபண்ணி ஆறப் போட்டு
எருமையா மேரலென்ற கிளிஞ்சில் தன்னில்
இசைவாக வைத்துமே புடத்தைப் போடே. (914)

புடம்போடக் கடுஞ்சுண்ணம் பூரஞ் சுண்ணம்
பேரண்டம் கணத்திலே நீறிப் போகுந்
தடம்போடச் சாரத்தில் சமனுய் சேர்த்துத்
தாக்கியரை கடுநெட்டாஞ் சலமு மாகும்
விடம்போட வீரத்தைப் பூரவெடை சேர்த்து
மேருவுக்குப் போட்டிட்டா னீறிப் போகுங்
கடம்போட நிமிளையிந்த நீரில் தோய்த்துக்
கடிசாக வூதிடவே சுண்ண மாமே. (915)

சுண்ணமென்ற நிமிளையைத்தான் கண்டர் மேலே
சூட்சமாய் லேபிக்கக் கண்டர் சுண்ணஞ்
சுண்ணமென்ற கண்டரைத்தான் சூதத் தூட்டுத்
தொனியாக வீறிட்டுக் கத்திச் சாகுஞ்
சுண்ணமாஞ் சூதமது செயநீர் பட்டால்
துடியாகுஞ் செயசுண்ணஞ் சூத ராசன்
சுண்ணமென்ன விந்நீர்தான் துறைதோறுஞ் சுண்ணஞ்
சூட்சமா யூதவெல்லாம் சுண்ண மாமே. (916)

ஆமென்ற பாடாண மறுபத்து நாலும்
அங்கலா முபரசங்கள் நூற்றிரண்டு பத்துங்
காமென்ற லவணமுத லிருபத் தைந்துங்
கட்டாகுங் களங்காகுங் குருவு மாகுந்
தேமென்ற சிந்தூரஞ் செயமான மெழுகாஞ்
செகச்சால வித்தையெலாம் கணத்திலாகும்
வேமென்ற செயநீரில் கெந்தி வீர
மிடுக்கான மனோசிலையுந் தாளகமுங் கூட்டே. (917)



## பஞ்சலோகக் களங்கு

கூட்டியே செயநீரி லரப்பொடியைத் தானுங்
குலாவியதோர் பழச்சாற்றி லூற வைத்து
மூட்டியே மூன்றுநாள் கழுவிப் போட்டு
முயற்சியாய்ச் செயநீரி லூற வைத்துக்
கூட்டியே குகையிலிட்டு ருக்கிப் போடு
குமுறியே யுருகினதை யுடைத்துக் கொண்டு
தேட்டியே செயநீரி லூற வைத்துச்
சிறப்பாக வைந்துதர முருக்கி டாயே. (918)

உருக்கிடவே யீயம்போல் சத்து மாகும்
உண்மையாஞ் சத்திலே நாலுக் கொன்று
தருக்கிடவே சாதிலிங்கஞ் செயநீரி லரைத்துத்
தாக்கான வெங்கார மெட்டி லொன்று
குருக்கிடவே கூடவிட்ட ரைத்து நீரிற்
கூசாமல் சத்திலே பூசி வைத்துப்
பருக்கிடவே குகையிலிட்டு ருக்கிக் கொண்டு
பாங்காக நாலிலொன்று தங்கஞ் சேரே. (919)

தங்கத்தைத் தகடடித்துக் காவி தன்னைத்
தாக்கான பழச்சாற்றி லரைத்துக் கொண்டு
பங்கத்தைத் தகட்டின்மேற் பூசிப் பூசிப்
பத்துவிசை கரியோட்டில் பழுக்கக் காய்ச்சி
வெங்கத்தை வெள்ளீயம் பலந்தா னென்று
மிரளாதே நாலிலொன்று சூதஞ் சேர்த்து
மங்கத்தை கரண்டிதனி லுருக்கிக் கொண்டு
மனோசிலைதான் கூடவிட்டுக் கல்வத் தாட்டே. (920)

சிலைதானு மரைப்பலந்தான் கூடப் போட்டுச்
செயநீரா லிருசாம மரைத்து மைபோல்
உலைதன்னில் குகையிலிட்டு ருக்கிப் போடங்
குயர்ந்ததோர் சத்தாகு மெடுத்து வைப்பாய்
கலைதானுங் காரீயம் பலந்தா னென்று
கசடகற்றுஞ் சூதமது பலமுங் கால்தான்
உலைதானு முருக்கியே யிரசத் தைச்சேர்த்
துற்பனமாய்க் கல்வத்திற் பொடியாய்ப் பண்ணே. (921)

பண்ணியே கெந்தகமு மரைப்ப லந்தான்
பாங்காகக் கல்வத்தில் கூட விட்டுத்
திண்ணியே செயநீரா லரைத்து மைபோல்
சிறிதாக வகலிலிட்டுப் புடத்தைப் போடு
அண்ணியே யாறவிட்டெ டுத்துப் பார்க்க
அழகான பொரிப்போலச் சத்து மாகுந்
தண்ணியே சத்தெடுத்துப் புறம்பாய் வைத்து
சமரசமாய்ச் செம்பினரப் பொடிதான் சாற்றே. (922)

சாற்றவே செம்பதுவும் பலந்தா னென்று
சாதிலிங்கம் பலமரைதான் கல்வத் திட்டுத்
தேற்றவே செயநீரா லரைத்து மைபோல்
செம்பான வரப்பொடியில் பிசறிக் கொண்டு
பாற்றவே யகலிலிட்டுப் பருப்புடமாய்ப் போடு
பாங்காக வாறவிட்டு ருக்கிக் கொண்டு
ஆற்றவே யப்புறமா யெடுத்து வைத்தங்
காண்மையாய் நாகமது பலந்தா னென்றே. (923)

ஒன்ருன நாகத்தைச் சுத்தி பண்ணி
உருக்கியே நாலிலொன்று சூதஞ் சேர்த்துக்
கன்ருன கல்வத்திற் பொடியாய்ப் பண்ணிக்
கனமான தாளகத்தைச் செயநீரா லரைத்து
நன்ருன நாகத்தி னெடையரைதான் கூட்டி
நாகத்தைச் சேர்த்தரைத்துப் புடத்தைப் போடு
பன்ருன வாறவிட்டுக் குகையிலிட்டு ருக்கிப்
பலமொன்று நிறுத்துமே யெடுத்துக் கொள்ளே. (924)

எடுத்துமே யிரும்புசத்துப் பலந்தா னென்று
மிதமான வெள்ளீயம் பலந்தா னென்றுங்
கடுத்துமே காரீயம் பலந்தா னென்றுங்
கரைகாணுச் செம்பதுவும் பலந்தா னென்றும்
நடுத்துமே நாகமது பலந்தா னென்றும்
நல்லதங்கம் பலமொன்றுங் கூடக் கூட்டி
அடுத்துமே யொன்ருக வுருக்கிக் கொண்டங்
குருகுகின்ற சூதமது பலந்தா னென்றே. (925)



ஒன்ருன சூதத்தைச் சுத்தி பண்ணி
உறுதியாந் தங்கத்தைத் தகடு வாங்கி
பன்ருன சூதத்தில் தொந்தித் துருட்டிப்
பருவமாய் முன்னைந்து முருகும் போது
கன்ருன காரமிட்டு ருகின்ற முகத்தில்
காரியமா யெலுமிச்சம் பழத்துள் வைத்துத்
துன்ருன சூதத்தை நூறுபுடம் போட்டுத்
துப்புரவா யுருக்கையிலே யீந்தி டாயே. (926)

உருகையிலே யீந்திட்டா லுட்கொண்டு வாங்கி
உயர்ந்திட்ட களங்காகும் பணவெடைதான் தூக்கிப்
பருகையிலே செம்பிரண்டு வெள்ளி யெட்டுப்
பணவெடைதான் தூக்கியே களங்கை யீவாய்
அருகையிலே யாறேழு மாற்றுக் காணும்
அருகுகட்டிப் புடத்தினுக் கிறங்கும் பாரு
திருகையிலே யிக்களங்கைச் சிந்தூ ரித்துத்
தினந்தோறும் பாலிலே யுண்டி டாயே. (927)

உண்டிடவே சட்டையொன்று கக்கிப் போடும்
உகாந்தவரைச் சடந்தானுங் கற்று ணுகு
பண்டிடவே தேகமது சிவந்து மின்னும்
பசுநரம்பு மோடியே பருத்துக் காணும்
விண்டிடவே யுடம்பெங்குங் கத்தூரி வீசும்
மேனியுமோ லகுவாகக் கமன மோடும்
அண்டிடவே சந்திரனிற் குளிர்ச்சி யில்லை
யதிர்ந்துவிழு மிடியெல்லா மகண்டு போமே. (928)

## சிதம்பர நடன தரிசனம்

அகண்டான பூரணத்தை யடுத்து நோக்கு
அடுக்காறு தளத்தினிற்கு மட்சரத்தைப் பாரு
திகண்டான சிதம்பரத்தி னடனந் தானுந்
தெரிசித்துக் கங்கைதனில் மூழ்கிப் பின்பு
பகண்டான சுழிமுனையோ டுருவி யேறிப்
பாலமென்ற கேசரியா மவுனத் தூடி
நிகண்டான பிருதிவியி லாரு ரெல்லை
நீங்காமல் மவுனமாய் நில்லு நில்லே. (9 9)

நில்லான சித்தென்ற பரப்பிரம மதுதான்
    நிகரரிய சிதம்பரமென் றிசைக்க லாகும்
நல்லான சித்தர்முனி யோகி நிற்கும்
    நாதாந்த புண்டரிக புரமேயாகும்
பல்லான சித்தலயஞ் சிதம்ப ரந்தான்
    பண்பான சிற்சபையு மூலட் டானஞ்
சில்லான சிவகங்கை யாக்கினையின் மேலே
    சிறந்தநதி தனில்மூழ்கித் தியானஞ் செய்யே (930)

செய்யவே பிண்டவிருத வாகா யத்தைச்
    சீவசாட்சி யேயென்றும் பெரிய தானம்
அய்யவே விராட்புருட னிருத யந்தா
    ஞர்க்கமாம பிரமமென்று மயிக்கிய மென்றும்
உய்யவே யிரண்டற்றே யிருப்பர் யோகி
    யுறைதலங்கள் சிதம்பரமா முண்மை யுண்மை
நையவே யகக்கண்ணி லறிந்து பாரு
    நலமாகுஞ் சித்திமுத்தி யாகுங் காணே. (931)

காணவே பிருதிவியாஞ் சுவாதிட் டானங்
    கலந்துநின்றி ருக்குவேத மாரூ ராகும்
மாணவே மணிபூர மெசுரு வேத
    மகத்தான வப்புதிரு வாணைக் காவல்
ஆணவே யனுகதந்தான் சாம வேத
    மக்கினிதா னிருப்பிடமா மருணை யாகும்
பூணவே விசுத்தியஃ ததர்வண வேதம்
    பேரான மாருதங் காளத்தி யாமே. (932)

ஆமென்ற வாகாசஞ் சிதம்ப ரந்தா
    ஞக்கினைமேற் சிவகங்கை சிறந்தால் தாயுந்
தாமென்ற தங்குசபா பதியுந் தானுய்த்
    தத்பதமுந் தொம்பதமுங் கடந்து நின்றோர்
தோமென்ற சித்தருறை தலமே தில்லைச்
    சுயமாகுஞ் சபைதனக்கோ ரழக தாகக்
காமென்ற தராதலத்துள் மதில தான
    கனகசபை சபைநாத வீசன் தானே. (933)



தானென்ற வவனைவிட நீக்க முண்டோ
    தனித்துநின்ற வங்காரச் சலனந் தீர்த்துப்
போனென்ற பொறிபுலனு லறிவ தில்லை
    போகமாங் கரணத்தா லறிவ தில்லை
ஆனென்ற நெறியயன்மா லறிவ தில்லை
    யப்பொருளே சிதம்பரமா யறிவார் வல்லோர்
தேனென்ற சராசரங்க ளாண்பெண் ணுகிச்
    சிறந்திருந்தார் சித்தருடை நினைவில் தானே. (934)

தானுன துரைச்சியைத்தான் பூசை பண்ணிச்
    சாங்கமாய் மதுவுண்டு மேலே நோக்கித்
தேனுன சிற்சபையில் நடன வோசை
    தெரிசித்துச் சிதம்பரத்தைப் பூசை பண்ணு
பானுன லாகிரியில் மனது வேருய்ப்
    பாழான மாயைதனில் மனம்போக் காதே
ஊனுன வுள்மூலம் பார்த்து ரைத்தங்
    குறுகின்ற பின்புமேல் மூலம் பாரே. (935

மூலத்தின் கீழக்கினி மண்ட லத்தில்
    மூழ்கியே கரையேறி முத்தி பெற்று
மூலத்தி னடுவான சிகார வீட்டில்
    முனையான ஆதித்த மண்ட லத்தில்
மூலத்தி னடுமூலம் பிராண மூலம்
    மூழ்கிநித்தம் பரத்தினுடைப் பாதம் பார்த்து
மூலத்தின் மேல்மூலஞ் சந்திர வீட்டில்
    மூழ்கிடவே மூன்றுகமுஞ் சிணத்தி லாமே. (936)

சிணத்திலே மனந்தன்னைத் திடாக ரித்துத்
    தேசிக்குச் சிங்னென்றகடி வாளம் பூட்டிக்
கணத்திலே குருபதத்தில் குதிரை கட்டிக்
    கண்காணு வொளிதானுங் கருத்தி லுற்றல்
குணத்திலே சைதந்நியப் பாலை யுண்பாய்
    கோடிமின்னல் தளுப்பாகக் கண்தான் கூசும்
மணத்திலே முண்டகமாம் பூவைக் கொய்து
    மாதாவின் பாதத்தி லர்ச்சித் தேத்தே. (937)

ஏத்தியே வத்துவொடு சுத்தி தானு
    மெளிமையாய்ப் பூசித்தே யெட்டெ மூத்தைப்
போற்றியே கும்பித்து நடுமூ லத்தில்
    புகழ்ந்துநின்று ருத்திரர்தம் பாதம் போற்றி
மாற்றியே காயசித்தி வாத சித்தி
    வரவேண்டு முள்ளத்தில் மகிழ்ந் தெனக்குத்
தோற்றியே தரவேண்டு மென்று சொல்லித்
    தொழுதுமே யருள்தரவே துதித்தங் குன்னே. (938)

## நவலோகக் களங்கு

உன்னவொரு களங்குவகை சொல்லக் கேளு
    ஒருவருடன் சொல்லாதே யுண்மை சொன்னேன்
அன்னவயப் பொடிதானும் பலமீ ரெட்டங்
    கழுந்தவே பழச்சாற்றி லூற வைத்து
நன்னவே நாலாநாள் கழுவி வாங்கி
    நயமாக வுலரவிட்டு நாட்டங் கேளு
துன்னவே துருசியது பலமும் பத்துச்
    சுருக்கான வெடியுப்பு நீரில் தோயே. (939)

தோச்சுமே பத்துநாள் காயப் போடு
    சுருக்காகுந் திராவகத்தில் பத்து நாள்போ
டாச்சுமே யடிக்கடிக்குத் தோய்த்துப் போடங்
    காண்மையா யிருபதுநாள் காய்ந்த பின்பு
தேச்சுமே சீனமொன் றன்றிரண்டு
    சேர்த்தரைத்துப் பழச்சாற்றில் வில்லை பண்ணிக்
காச்சுமே கனபுடமாய்ப் போட்டெ டுத்துக்
    காரியமாந் துருசியின்மேற் கவசங் கட்டே. (940)

கட்டியே சீலைசெய்து குக்குடமாம் புடத்தில்
    காயவிட்டுப் போட்டெடுக்கக் குருவு மாகுந்
தெட்டியே யிக்குருவைச் செம்பரத்தம் பூவில்
    சிறுகவிட்டுப் பிசைந்துமே சாறு வாங்கிக்
குட்டியே குதிரையென்ற பாடா ணந்தான்
    கூட்டியே யரப்பொடிக்குப் பாதி தானுங்
கட்டியே கல்வத்திற் பொடியாய்ப் பண்ணிக்
    கலந்தரைப்பாய் முன்சாற்றிற் கலரத் தானே. (941)



கலரவே யேழுநாள்பூச் சாறு விட்டுக்
    கடிந்தரைத் தரப்பொடியில் பிசறிக் கொண்டு
மலரவே பின்பொருநாள் பூச்சா றுவிட்டு
    மயனம்போ லரைத்துமே புடத்தைப் போடு
உலரவே குகையிலிட்டு ருக்கிக் கொள்ளு
    உருண்டுமே மணியாகு மப்பால் வைத்து
அலரவே யுருகுமயம் பலந்தா ஞென்று
    மிடுக்கான காந்தமது பலமு மொன்றே. (942)

ஒன்ருன குதிரைப்பல் பாடாண மொன்று
    முறவாக மூன்றையுந்தான் பூச்சாற் ருட்டிப்
பன்ருன புடம்போட்டுக் குகையிலிட் டுருக்கிற்
    பாரமாய்க் காந்தமயஞ் சத்தாலை நிற்குந்
தன்ருன சத்தெடுத்துப் புறம்பாய் வைத்துத்
    தாக்கான நிமிளையது பலந்தா ஞென்று
முன்ருன முன்னுருக்கு மிரும்ப தொன்று
    முனையான சிலையதுதான் பலமு மொன்றே. (943)

பலமூன்றுங் கல்வத்திற் போட்டுக் கொண்டு
    பாங்கான பூச்சாற்றி லரைத்து மைபோல்
பலமூன்று மோட்டிலிட்டுப் புடத்தைப் போட்டுப்
    புரளவே குகையிலிட்டு ருக்கிப் போடு:
தலமூன்றுஞ் சத்தெடுத்துப் புறம்பாய் வைத்துச்
    சமரசமாய் முன்னுருக்கு மிரும்ப தொன்று
துலமூன்று துத்தமொன்று தாளகமு மொன்று
    செம்பரத்தம் பூச்சாற்ரு லரைத்தி டாயே. (944)

அரைத்துமே யோட்டிலிட்டுப் புடத்தைப் போடங்
    கானபின்பு குகையிலிட்டு ருக்கிக் கொண்டு
தரைத்துமே சத்தெடுத் தப்பால் வைத்துத்
    தளுக்காகு முன்னுருக்கு மிரும்ப தொன்று
கரைத்துமே கிருட்டிணவப் பிரக மொன்று
    கடிசான வீரமது பலமு மொன்று
திரைத்துமே செம்பரத்தம் பூச்சாற் ருட்டிச்
    செப்பில்வைத் துப்புடம்போட் டுருக்கிப் போடே. (945)

போடென்ற சத்தெடுத்துப் புறம்பாய் வைத்துப்
புரண்டதோர் முன்னுருக்கு மிரும்ப தொன்று
தேடென்ற செம்பதுவும் பலமு மொன்று
செப்பமா யிலிங்கமது பலமு மொன்று
நாடென்ற செம்பரத்தம் பூச்சாற் ருலே
நலந்தரைத்துப் பன்னிரண்டு சாமந் தானும்
ஆடென்ற வகலிலிட்டுப் புடத்தைப் போட்டங்
கதுட்டாக வுருக்கியே மணியாய் வாங்கே. (946)

வாங்கியே முன்னுருக்கு மிரும்ப தொன்று
வங்கமென்ற காரீயம் பலந்தா னென்று
தேங்கியே கவுரியது பலமு மொன்று
செம்பரத்தம் பூச்சாற்று லரைத்து மைபோல்
ஓங்கியே யோட்டிலிட்டுப் புடத்தைப் போட்டங்
குருக்கியே குகைதன்னி லெடுத்து வைப்பாய்
நாங்கியே நாகமது பலந்தா னென்று
நாறும்பூப் பலமொன்றே டிரும்ப தொன்றே. (947)

இரும்போடே மூன்றையுந்தான் கூடக் கூட்டி
யேற்றமாம் பூச்சாற்றி லரைத்து மைபோல்
பெரும்புடமா யோட்டில்வைத்து மூடிப் போடு
பின்புமே குகையில்வைத் துருக்கிப் பாரு
அரும்புபோல் நாகமது மணியு மாகு
மப்பாலே யெடுத்துவைத் தறியக் கேளு
துரும்புபோல் வெள்ளீயம் பலமு மொன்று
துப்புரவாய் முன்னுருக்கு மிரும்ப தொன்றே. (948)

உருக்கியே யிரண்டுமொன்றுய்ச் சேர்த்துக் கொண்டங்
குடைத்துமே கல்வத்தில் தூளாய்ப் பண்ணி
நருக்கியே துருசியது பலமு மொன்று
நளினமாம் பூச்சாற்றி லரைத்து மைபோல்
தெருக்கியே செப்பில்வைத்துப் புடத்தைப் போட்டுச்
சிறப்பாக வுருக்கிடவே மணியு மாகும்
மருக்கியே மணியெடுத் தப்பால் வைத்து
மாட்டுதற்குத் தங்கமொரு பலமுந் தானே (949)



தங்கமோர் பலந்தன்னைத் தகடு தட்டித்
தனியான காவிதனைப் பழச்சாற்று லரைத்துப்
பொங்கமாய்த் தகட்டிற்குப் பூசிப் பூசிப்
பேரான கரியோட்டில் காய்ச்சித் தோய்ப்பாய்
பங்கமாய்ப் பதின்மூன்று தரந்தான் தோய்த்துப்
பாங்கான முன்னுருக்கு மிரும்ப தொன்று
துங்கமா நிமிஷயொன்று காந்த மொன்று
சொல்லான துத்தமொன்று கூட்டி டாயே. (950)

## அருஞ்சொற்பொருள்

**பா. எண். 901 முதல் 950 வரை**

பா. எண் : 906—புழுகு = புனுகு

பா. எண் : 907—வாருகோல் கட்டு = துடைப்பக் கட்டு

பா. எண் : 908—குவடு = உச்சி

பா. எண் : 909—பாவித்து = நாடி கருமம் = வேலை

பா. எண் : 911—கலக்கம் = குழப்பம், தெளிவின்மை

பா. எண் : 915—பேரண் டம் = மனிதர் மண்டை ஓடு

பா. எண்: 916—கண்டர் = துருசு, மயில்துத்தம்; லேபிக்க = பூச; வீறிட்டு = பெரிய இரைச்சலிட்டு

பா. எண் : 918—குமுறி = நிலைகுலைந்து

பா. எண் : 920—பங்கம் = குழம்பு (சேறு)

பா. எண் : 921—கசடகற்றும் = குற்றம் நீக்கப்பட்ட

பா. எண் : 922—புறம்பாய் = வெளியிலே

பா. எண் :—928 - கத்தூரி வீசும் = கத்தூரி மணம் வீசும்; லகுவாக = இலேசாக (நொய்தாக); கமனம் = செல்லல் விண்வழிப் பறத்தல் முதலியன; அகண்டு = அகன்று

பா. எண் : 930—சித்தலயம் = மன ஒடுக்கம்; மூலட்டானம் = மூலாதாரம்

பா. எண் : 932—மாருதம் = காற்று (வாயு)

பா. எண் : 935—துரைச்சி = உன்மணித்தாய்
பா. எண் : 936—மூன்றுகம் = மூன்று யுகங்கள்; சிணத்தில் = கணத்தில் (ஒரு நொடிப்பொழுதில்)
பா. எண் : 937—திடாகரித்து = திண்மையுறச் செய்து; முண்டகம் = தாமரை
பா. எண் : 938—அத்து = செவ்வையாக; கும்பித்து = கைகுவித்து
பா. எண் : 941—கலரத்தானே = கலந்திடத்தானே
பா. எண் : 942—மயனம் = மெழுகு
பா. எண் : 947—நாறும்பூ = கெந்தி
பா. எண் : 948—நளினம் = தாமரை; சிலர் அழகென்று பொருள் கொண்டு அழகிய பூவாகிய செம்பரத்தைப்பூஎன்பர்

---

சூட்டிட்ட வப்பிரகச் சத்த தொன்று
துலக்கமாஞ் செம்பொன்று காரீய மொன்று
நாட்டிட்ட நாகமொன்று வெள்ளீய மொன்று
நவலோகம் பத்தையுந் தானொன் ருகக்கூட்டி
வாட்டிட்ட குகையிலிட்டு ருக்கிக் கொண்டு
வட்டுப்போல் வில்லையாய் வளமாய் வார்த்துத்
தேட்டிட்ட துருசியென்ற செம்பி ரண்டில்
சேரொன்று நவலோகக் களங்கு மாமே. (951)

களங்கத்தை மதிதனிலே யிருபதுக் கொன்று
காட்டிடவே கறுப்பாகக் கனமாய் நிற்கும்
உளங்கத்த வோட்டில்வைத் தூதிப் போட்டங்
குருக்கியே யுரைத்திடவே யேழு மாற்றுத்
திளங்கத்த தேவதைக்கா பரணம் பண்ணிச்
சிறப்பாகப் பூட்டிடவே முத்திக் கேது
வளங்கத்தை யித்தனைநாள் மனத்தில் வைத்து
மாயிக்கே யொப்பாக வரைந்திட் டேனே. (952)

### நல்லறிவு கூறல்

வரைந்திட்டே னிதைத்தொட்டுச் செலவு செய்து
மகத்தான கற்பத்தைப் பண்ணித் தின்னு
திரைந்திட்டுப் போகாமல் காயந் தானுஞ்
சிங்கவென்ற கடிவாளந் தேசிக் கிட்டுப்
கரைந்திட்டு மனந்தன்னை யறிவிற் சொக்கிக்
கசகாமல் கண்களித்துக் குருப தத்தில்
நிரைந்திட்ட நடனத்தைத் தரிசித் தப்பால்
நீங்காமல் மவுனத்தி லுன்னி டாயே. (953)



உன்னியே யோகத்தை யெந்நே ரந்தா
னுத்தமித்தாய் பதந்தன்னில் மனத்தைக் கட்டி
வன்னியா மண்டலத்தில் விளக்கைத் தூண்டில்
மாசற்ற வொளிதானுங் கண்ணே கூசும்
பன்னியே பலகாலும் வேதாந் தத்தில்
பழக்கமாய்க் கருவெல்லாம் பாரு பாரு
முன்னியே பெண்மாயை தள்ளி னிற்று
முழியாதே பேய்போலே முனிந்து கூடே. (954)

முனிந்துமே யோகத்தில் மனத்தைப் பூட்டு
முட்கரமா மைம்புலனை முறித்துக் கூட்டு
கனிந்துமே காயத்தின் கசட்டைப் போக்கு
கரைகாணுத் தத்துவத்தில் கருத்தை யோட்டு
நனிந்துமே சஞ்சலத்தில் மனக்கு ரங்கு
நாடியே போனபடி நாடொட் டாதே
குனிந்துமே கண்ணிரண்டுங் குறியிற் கூடிக்
குவிந்துநின்ற வொன்றுக்குட் கூடி யாடே. (955)

ஆடுவது எக்கால மெப்போ தென்றங்
கலையாதே சமுத்திரத் தினலையைப் போலே
கூடுவது நிலைத்துடனே கொள்கிக் கூடு
கூசினல் மனந்தானு மாயை சண்ணுந்
தேடுவது சீக்கிரத்தில் சித்தி தேடு
திடப்படுத்தி மனந்தன்னை மறித்துக் கட்டிப்
பாடுவது எந்நேர மாயி பாதம்
பரிந்துமே கனிந்துருகிப் பாடு பாடே. (956)

பாடுபட்ட பணத்தினுற் பலனுண் டாமோ
பக்குவமா மங்கையரால் மோட்ச மாமோ
சோடுவிட்ட தம்பியராற் றுணையுண் டாமோ
சுகத்தில்வந்த புத்திரரால் சொர்க்க மாமோ
ஊடுபட்ட பந்துவினு லுதவி யாமோ
உண்மையா யுரைத்தமொழி யுறுதி யாமோ
தேடுபட்ட வறுசுவையாந் தீனி யாலே
செடந்தானும் பிறப்பிறப்புச் செனித்தி டாதோ. (957)

செனித்திடா திருக்கவல்லோ சித்த ரெல்லாஞ்
செப்பினுர் சாத்திரங்க ளனேகங் கோடி
தனித்திடா மனதுவயி ராக்கி யத்தால்
சாதித்தே யனேகநாள் சமாதி யுற்றுக்
கனிந்திடாக் கற்பங்க ளுண்டு கொண்டு
க்ருணே நிதி கடாட்சத்தால் சித்தி பெற்றுப்
பினித்திடாப் பிறவியோ டொழிப்பு நீங்கிப்
பேரின்ப வருள்தனேயே பிடித்தார் தானே. (958)

பிடித்துமே மனதுவயி ராக்கி யத்தால்
பெரியோர்கள் பதமிறைஞ்சிப் புத்தி கேட்டு
மடித்துமே பெண்ணரவு மயக்கந் தீர்ந்து
மாமாயை தன்னேயெல்லா மறுத்துத் தள்ளி
நொடித்துமே பிரபஞ்ச செகச்சா லத்தை
நுணுக்கமாய்க் கீழ்த்தள்ளிச் சமாதி யுற்றுப்
படித்துமே வேதாந்தக் கூட்டத் தோடு
பராபரத்தாய் பதந்தன்னிற் பற்றி ஞரே. (959)

பற்றியே வத்துசுத்தி பானம் பண்ணிப்
பாங்கான குண்டலியிற் காரம் வைத்துப்
புத்தியாய் மேலேறி யுன்மனேயைத் தாண்டிப்
போக்கோடே தெருவீதி வலமாய் வந்து
அத்தியென்ற தத்துவமாங் குப்பை யெல்லா
மாராய்ந்து அங்கங்கே யெல்லாங் கண்டு
சித்தியென்ற நடனவொலி செவியிற் கேட்டுச்
சிற்சபையில் குடியிருந்து சிறந்திட் டாரே. (960)

## நவலோகச் சிந்தூரம்

சிறந்திட்ட நவலோகச் சிந்தூ ரத்தைச்
செப்பவே நவலோகக் களங்கு தன்னேப்
பிறந்திட்ட பலமைந்து பொடியாய்ப் பண்ணிப்
பேராகச் சுத்தித்த சூத மைந்து
நிறத்திட்ட கெந்தியது பலமு மைந்து
நீக்கான தாளகமும் பலமி ரண்டு
மறத்திட்ட மனேசிலேயும் பலமி ரண்டு
மாசற்ற வெங்காரம் பலமு மூன்றே. (961)



மூன்றுக விவையெல்லாங் கல்வத் திட்டு
முகுளிதமாஞ் செம்பரத்தஞ் சாற்று லாட்டித்
தூன்றுக நாற்சாம மரைத்து லர்த்திச்
சூரணமாய்ப் பொடியாக்கிக் காசி மேருக்
கீன்றுகக் கெட்டியாய் மண்ணேச் செய்து
கெட்டியாங் குப்பிதனக் கரைவா சியிட்டு
வான்றுக வாலுகையின் மேலே வைத்து
வரிசையாய் முத்தீயு மாட்டிடாயே. (962)

மாட்டியே தீயெரிப்பா யெஞ்சா மந்தான்
மாதுளம்பூ நிறமாகச் சிந்தூர மாகும்
ஆட்டியே யாறவிட் டெடுத்து வாங்கி
யாயிரத்துக் கொன்றிடவே யதிக வேதை
பூட்டியே பணவெடைசிந் தூரந் தானும்
பேரான தேனிலுண்ணு மண்ட லந்தான்
காட்டியே சட்டையொன்று கக்கிப் போடுங்
காணவொண்ணு மின்னலொளி மேனி யாமே. (963)

மேனியாங் காயமது கற்று ணுகும்
மின்னலுக்கு ளிடிக்குள்ளும் புகுத லாகுந்
தீனியாங் கபமெல்லாந் தள்ளிப் போடுஞ்
சீறியதோர் வாசியெல்லா முள்ளே யாகுங்
கூனியாய் வலேந்தவுட னிமிர்ந்து போகுங்
குருட்டுவிழி நல்விழியாய்க் குணமாய்க் காணும்
பானியா யலேயாதே நவலோ கத்தைப்
பார்த்தபின்பு சிந்தூரம் பண்ணி யுண்ணே. (964)

## இரசித (வெள்ளி) வித்தை

உண்ணவே ரசிதவித்தை யொன்று சொல்வே
னுடலிரண் டுயிரொன்று மூமைச் சிப்பி
பண்ணவே பலம்பத்து நிறுத்துக் கொண்டு
பாங்கான வண்டோடு பலமும் பத்து
கண்ணவே பெருஞ்சட்டி தன்னிற் போட்டுக்
கலந்திடுவா யுவர்மண் சுண்ணும்பு நேரே
தண்ணவே தண்ணீரை விட்டுக் காய்ச்சிச்
சமர்த்தாக நாற்சாம மெரித்தி டாயே. (965)

எரித்தபின்பு தண்ணீரைச் சுத்தி பண்ணி
    யிடித்துமே பொடியாக்கிப் பத்துக் கொன்று
தெரித்தபின்பு சீனத்தைப் பொடித்துப் போட்டுச்
    சேர்த்தரைத்துச் சீலைவடி கட்டிக் கொண்டு
குரித்தபின்பு சுட்டகுகை தன்னில் தானுங்
    கூர்மையா யடிதன்னிற் பொடியைப் போட்டு
விரித்தபின்பு வெள்ளீய மதன்மேல் வைத்து
    மீண்டுமேற் பொடிபோட்ட ழுத்தி டாயே. (966)

அழுத்தியே குகைசிவக்கத் துருத்தி கொண்டங்
    கதட்டியே பூதினபின் பாறப் போடு
தழுத்தியே யரப்பொடியை நீக்கி வைத்துச்
    சமரசமாய் மறுபடியு முன்பு போலே
குழுத்தியே குகைக்கீழ்மேற் பொடியை வைத்துக்
    கூசாமல் நடுவினிற்க வீயம் வைத்துத்
தழுத்தியே யேழுவிசை யுருக்கிப் போடச்
    சாங்கமாய் வெள்ளீயங் கட்டிப் போமே. (967)

கட்டியதோர் வெள்ளீய மறுபத்தி னலு
    கடிதான வுருக்கரப் பொடிதா னெட்டுத்
தெட்டியதோர் வெள்ளீய மிரண்டு கூட்டிச்
    சிறப்பான பித்தளைதா னென்று கூட்டிக்
குட்டியதோர் குகையிலிட்டு ருக்கிக் கொண்டு
    குழம்பான சாணிதனில் சாய்த்திட் டக்கால்
எட்டியதோர் ரசிதமஃ தெட்டு மாகு
    மெளிதாகும் வெள்ளிவித்தை யேற்றந் தானே. (968)

ஏற்றமாம் யோகசித்தி யெய்தி னக்கா
    லெட்டெட்டா மறுபத்து நாலுஞ் சித்தி
மாற்றமாங் காயசித்தி வாதசித்தி
    மனஞ்செம்மை யானக்கா லுடனே யாகு
மூற்றமா மடவார்மே லாசை யுற்ரு
    லோகோகோ பெண்ணாசை சுழித்துக் கொல்லுங்
காற்றமாஞ் சித்தியெல்லாஞ் சேரப் பொய்யாய்க்
    கடுநரகில் வீழ்ந்துமே வுழல்வன் ருனே. (969)



தானன ரசவாதி யோக வாதி
    தனிக்காய சித்திசெய்யுந் தன்மை வாதி
வேனன சாத்திரத்தின் கருவறிந்த
    மேன்மையா நிசவாதி யுண்மை வாதி
தேனன தம்முயிர்போல் சீவ செந்து
    செகத்திலுள்ள சகலவுயிர் சிறந்து பேணி
கோனன சுகதுக்கஞ் சரியாய்க் கொண்டு
    குறிப்பிட்டோர்க் கெல்லாந்தான் கொள்கை யாமே. (970)

### செம்புசுத்தி

கொள்கையாய் வங்கம்வைத்த பொடியைத் தானுங்
    குகைதனிலே வைத்துருக்கிப் பலந்தான் செம்பு
துள்கையா யுருகையிலே தூவித் தூவித்
    துப்புரவாய்க் கம்பாலே கிண்டிக் கிண்டி
எள்கையா யேழுதா முருக்கிச் சாய்க்க
    வேற்றமாய்ச் செம்பதுவுஞ் சுத்தி யாகுந்
தெள்கையாய் ரவிவந்த விடங்க ளெல்லாஞ்
    சுத்தித்த விச்செம்பு கூட்டி டாயே. (971)

### சூதக்கட்டு

கூட்டவே சூதம்வந்த விடங்க ளெல்லாங்
    குறிப்பாக விளவயது ரோமந் தன்னைப்
பாட்டவே பரும்பாண்டந் தன்னிற் செம்பிற்
    பக்குவமாய் மேல்மூடி யடியில் தானும்
ஆட்டவே யஞ்சுதுரு வடுக்காய்ப் போட்டங்
    கதன்கீழே கலயம்வைத் தரைமட்டும் புதைத்துப்
பூட்டவே புடம்போடத் தயில மாகும்
    பீங்கானி லெடுத்துமே பதனம் பண்ணே. (972)

பண்ணவே சுத்தித்துச் சூதந் தன்னைப்
    பலநிறுத்துக் கல்வத்திற் போட்டுக் கொண்டு
தண்ணவே ரோமமென்ற தயிலம் வார்த்துச்
    சமர்த்தாக நாற்சாம மாட்டிப் பின்னர்
உண்ணவே யுருட்டியதை யுண்டை யாக
    வூமத்தங் காய்க்குள்ளே வைத்து மூடி
அண்ணவே யவிபுடமாய்ப் போட்டெ டுத்தங்
    கரைத்துமே தயிலத்தால் முன்போற் போடே. (973)

போடவே யிப்பபடிதா ஊம்பத் தொன்று
　　பிலத்திறுகி மணியாக நிற்கும் பாரு
தூடவே சுத்தித்த கெந்தி யோடு
　　சூடனுமே சரிகூட்டி யரைத்து மைபோல்
மாடவே மணிமேலே கவசம் போட்டு
　　வைத்துமே செங்கலுக்குள் மருவ மூடி
ஆடவே யவிபுடமா யைம்ப தோடொன்
　　றதட்டியே புடம்போடச் சிந்தூர மாமே. (974)

புடம்போட்ட சிந்தூரம் பாலி லுண்ணப்
　　புத்தியுண்டாய்ப் பொன்போலத் தேக மாகும்
நடம்போட்ட நவலோக நூற்றி லீய
　　நாலிரண்டு மாற்றுக்கு நயக்கும் பின்னேக்
குடம்போட்ட மனோன்மணித்தாய் குறிப்புச் சொல்வாள்
　　குதிகொள்வாள் லட்சுமியுங் குறையொன் றில்லை
திடம்போட்ட சிற்சபையாந் தில்லைக் குள்ளே
　　சேர்ந்தேறி நடனத்தைச் செவியிற் கேளே. (975)

## யோகமும் ஞானமும் அடைந்த பெருமை

கேளென்ற பாட்டர்திரு மூல் நாதர்
　　கிருபையாம் பதமென்றன் சிரசில் வைத்துக்
காளென்ற கருவெல்லாங் கேட்டுக் கேட்டுக்
　　காலாங்கி யையர்சொன்ன கருவுங் கேட்டுத்
தேளென்ற தட்சிணு மூர்த்தி சொன்ன
　　திறமான வுபதேசஞ் சிரசில் வைத்து
வாளென்ற பாட்டர்பதஞ் சலியார் வாக்கின்
　　வகையெல்லாங் கேட்டறிந்து பாடி னேனே. (976)

பாடினேன் சித்தர்பதஞ் சிரசில் வைத்துப்
　　பயின்றெடுத்த மாயிசொல்லின் பண்பி னாலே
ஓடினே னடுக்கெல்லா முன்னிப் பார்த்தங்
　　குற்றேழு வரைகடந் தொலியுங் கேட்டு
நாடினே னூற்றறுப தாமண் டத்தில்
　　நந்தியடி தனைத்தொழுது நாட்டங் கேட்டுத்
தேடினே னுபரசங்கள் பாடா ணங்கள்
　　சேகரித்துக் குளிகையெல்லாஞ் செய்திட் டேனே. (977)



செய்திட்டுக் குளிகைவகை யாயிரத் தெட்டுச்
　　சித்தர்மெச்சுங் கடுவோட்டங் குளிகை தானும்
அய்திட்டண் டத்தி லதிச யங்க
　　ளாராய்ந் தறிந்தவெல்லா மடுக்காய்ச் சேர்த்து
உய்திட்டுச் சகலசன மறிய வென்றே
　　யுகந்தவே ழாயிரத்தி லுற்ப னத்தை
வைதிட்டு மானிடர்கள் மாடன் பாலே
　　மறைப்பெல்லாம் வெளியாக வரைந்திட் டேனே. (978)

வரைந்திட்டேன் யோகத்தின் வண்மை யெல்லாம்
　　வரிசையாய்க் காயசித்தி வழக்கஞ் சொன்னேன்
திரைந்திட்டேன் சீவனத்துக் கிடத்தைச் சொன்னேன்
　　சித்தாகக் கமனத்தின் குளிகை சொன்னேன்
கரைந்திட்ட காயத்திற் கசடு போக்கிக்
　　கடிசான வாறுதலம் வெளியாய்க் கண்டு
மறைந்திட்ட சமுசார வலையை யுக்கி
　　மாயமாய் வாசனையை நீக்கி டாயே. (979)

நீக்கியே யேழுவரை தாண்டி யேறி
　　நிசமான சிலம்பொலியைக் கண்டு மீண்டு
தாக்கியே பானமென்ற வமுதந் தன்னேச்
　　சமாதியிலே யிருந்துரைத்துக் கற்பாந்த காலம்
போக்கியே மேதினியை வலமாய் வந்து
　　புகழான சிவாலயத்துட் பலியேற் றுண்டு
தேக்கியே சஞ்சார சமாதி யுற்றுச்
　　சித்தருக்குத் தொண்டுபண்ணித் திடமாய் நில்லே. (980)

நில்லான சராசரங்கள் சீவ ராசி
　　நிலையான புவனமோ டண்ட மெல்லாம்
வல்லான பூரணத்தி லுதிப்புக் கண்டாய்
　　மருவிநின் றெவ்வாற்ரு லுதித்த தென்றுல்
உல்லான வேழுவகை யோனி நாலு
　　உற்றுக்கே ளண்டமொடு மண்ணுந் தண்ணீர்
கல்லான யோனியொடு நாலிற் ருனுங்
　　கருவான விந்துவொடு போத மாச்சே. (981)

ஆச்சென்ற தரங்கத்தி னீரைத் தானு
மடுக்கடுக்காய் மேகமுண்டு வருடித் தாற்போல்
தேச்சென்ற செனனமங்கே செனித்த வாறு
சேர்ந்தோடி யாசையென்ற பாச நீங்கி
வாச்சென்ற வண்டோடி மதுவை யுண்டு
வாசனையால் செண்பகத்துண் மாண்டு போகும்
போச்சென்ற பூரணத்தின் மருவி நின்றுள்
பிறப்பற்றுச் செனனமென்ற பிறவி போமே. (982)

பிறவியற்றுப் போகவென்றுற் பூரணத் திற்சேர்
பிறக்கவென்றுற் பெண்மாயை தன்னி னில்லு
துறவியற் றிரண்டையுந்தா னறிய வேண்டில்
சீக்கிரத்திற் காயசித்தி பண்ணிக் கொள்ளு
சிறவியற்றுக் குளிகையிட்டுத் தேச மெல்லாஞ்
சிறப்பாகப் பார்த்தங்கே சென்று தேறு
உறவியற்று உலகத்தில் மாயம் பூண்டா
லொழியாத பிறவியினி லுழலு வாயே. (983)

உழலாதே பூணியடி மூலத் துள்ளே
யுறுத்தியே நந்திதனி லூதி யேறு
நழலாதே நந்திவந் துபதே சிப்பார்
நலமாகு மெட்டெட்டுச் சித்தி யெல்லாம்
புழலாதே வாசிகொண் டூதி யூதி
புருமையத் தேநின்று புகழ்ந்து பாரு
வழலாதே வராட்டியணைத் தாண்டி நின்று
வழியோடே சென்றேறிம னோன்மணியே காணே. (984)

காணவே மனோன்மணியைப் பணிந்து போற்றிக்
களிகூர்ந்தே யிருவினையி னுட்டுத் தானும்
பூணவே பிறப்பிறப்பி ரண்டி னாலே
பெருமாய வலைவிசிறிப் பெண்போற் காட்டி
வாணவே வறுமைபிணி யிரண்டு மாகி
மாயமாம் பெண்ணோடே யானு மாகி
தாணவே சிற்றின்பம் பேரின்ப மிரண்டாய்த்
தொலையாத சீவசெந்து செனித்த வாறே. (985)



செனித்துமே யுணையறிந்தாற் பிறவி போச்சு
சிற்றின்ப மகன்றுபே ரின்ப மாச்சு
தனித்துமே தாயறிந்தால் பூரணப்பா லூட்டிச்
சச்சிதா னந்த வெள்ளந் தன்னின் மூழ்கி
நினைத்துமே யோனியினி லவத்தை தன்னை
நீக்கியே நின்றலைந்த நினைவு மாற்றி
நனித்துமே ஞானவழித் தடமுங் காட்டும்
நாயகிதன் பதம்போற்றி நாட்டம் பாரே. (986)

நாட்டான வாமத்தாற் றுயைப் போற்றி
நலமான சக்கரங்க ளாறுங் கண்டு
தாட்டான தமர்வாசற் குள்ளே சொக்கித்
தாயினுடைக் கொலுக்கண்டு சந்தோ சித்து
நீட்டான சிற்சபையி னிணைவை யுன்னி
நிலைத்தநட ராசருடை நிருத்தங் கண்டு
ஏட்டான விளைப்பாற்ற லெங்கே யென்று
லேகமாம் பூரணத்தி லிருந்தங் காறே. (987)

ஆறவே வறுமைவந்து மூண்ட தென்று
லமும்பான மனக்குரங்கால் ஞானம் போகும்
தேறவே வேதாந்தஞ் சித்தாந்த மிரண்டுஞ்
செணத்தில்போய் விடுஞ்சேரப் பொய்யாம்
பாறவே பசிதன்னால் மனம்பே யாகிப்
பாசியாங் குளத்திலிட்ட கல்லுப் போலாம்
வாறவே வாசியொடு சமாதி நிட்டை
வறுமையாற் சகலமுமே மண்ணாய்ப் போமே. (988)

போகாம லாயிபதம் பூசை பண்ணு
போக்கோடே யாதாரம் புக்கி யேறு
வேகாம லைம்புலனை விரைந்து சாடு
வேண்டியதோர் கற்பமுண்டு சித்தி யாக்கு
தேகாமல் சீவனத்துக் கிடமே யாகச்
செப்பியதோர் நவலோகக் களங்கு பண்ணு
நோகாமல் சகலசெந்துந் தன்னுயிர்போ லெண்ணு
நுட்பமாய் வேதாந்த நுணுக்கம் பாரே. (989)

நுணுக்கமாய் ஞானத்தி லேற வென்றால்
நோயாகும் பசிப்பிணியாற் சுழற்றிப் போடும்
வணுக்கமா யிதனாலே வாத நூலை
வகையாகக் கண்டித்து வழுத்தி னேனான்
நணுக்கமாய் ஞானமாம் யோகத் துக்கும்
நற்காய சித்திக்கு நலிவில் லாமல்
இணுக்கமா யேமவித்தை யெளிதிற் சொன்னே
னெனையாண்ட மூலர்பத மிறைஞ்சித் தானே. (990)

தானென்றே யேறுதற் கிதுவே போக்குச்
சாதித்தே யடிதொடுத்து நுனிமட் டுக்கும்
மானென்றே வாதசித்தி யோக சித்தி
வண்மையாம் ஞானசித்தி குளிகை சித்தி
தேனென்றே தேசிகர் காலாங் கியையர்
செப்பினதோ ரனுபோகந் திறந்திட் டேன்யான்
கானென்றே யிருந்தாலு மிந்த நூலைக்
கசடற்றே பார்த்திருந்து வைத்திட் டீரே. (991)

பார்த்திடீர் வேதாந்தஞ் சித்தாந் தத்தின்
பயனெல்லா மனுபவித்துப் பாடி னேன்யான்
கோர்த்திட ரிந்நூல்தா னேழு கண்டங்
கொட்டினேன் பிற்கண்டங் கொள்ளை வாதஞ்
சேர்த்திடீர் நூலெல்லாங் கோவை யாகச்
சிறுபிள்ளை பார்த்தாலுஞ் சித்த னாவான்
தூர்த்திடீர் வேதாந்தக் கூட்டத் தோடு
சோம்பலாய்க் கருவதனை மறக்கா காதே. (992)

மறக்காதே சரக்கினுடை வரிசை கண்டு
மாட்டலாஞ் செகச்சால வாதத் தாட்டு
திறக்காதே யொருவருடன் பேசி டாதே
செயித்திடுவாய் பஞ்சவிந் திரியந் தன்னைப்
பிறக்காதே பூரணத்திற் புக்கி யாடு
பெரியோர்கள் பிழைக்கவென்று போதித் தேன்யான்
பறக்காதே காமுகனாய்த் திரிந்தி டாதே
பரத்திலே மனத்துன்னிப் பாரு பாரே. (993)



பார்க்கவே பசிதனக்கு வாதஞ் சொன்னேன
பாலையா யிருக்கவல்லோ கற்பஞ் சொன்னேன்
தார்க்கவே சமாதிக்கு வாசி கொண்டு
தாங்கியே யிருப்பதற்குத் தாவு சொன்னேன்
நேர்க்கவே யண்டரண்ட பதங்க ளெல்லா
நிமைக்குமுன்னே சுற்றுதற்குக் குளிகை சொன்னேன்
சேர்க்கவே சரக்குவகை வைப்புச் சொன்னேன்
செயவீரம் வைக்கின்ற திறஞ்சொன் னேனே. (994)

சொன்னதோர் முதற்காண்டச் சுளுகை யெல்லாஞ்
சிவன்சொல்ல மாயிசொல்ல நந்தி சொல்லப்
பன்னதோர் பாட்டர்திரு மூலர் சொல்லப்
பதஞ்சலியார் சனகாதி நால்வர் சொல்லத்
தென்னதோர் தட்சிணா மூர்த்தி சொல்லச்
சிரசான முனிவர்சொல் லச்சித்தர் சொல்லக்
கன்னதோர் காலாங்கி யையர் சொன்ன
கடாட்சத்தாற் கைகண்டு கருதி னேனே. (995)

கருதினேன் யோகத்தை முன்பு தானுங்
களிகூர்ந்து கற்பத்தைச் சொன்னேன் பின்னே
வருதினேன் வாதத்தைக் கடையிற் சொன்னேன்
வகைமூன்றில் சிங்கயோ கத்தைச் சொன்னேன்
நிருதினேன் ரோமபுரிக் கடலிற் றானும்
நிசமான ஆதிரச மெடுக்கச் சொன்னேன்
நருதினே னால்வேதம் பூனை வாயால்
நழுவாமற் சொல்லுதற்கு நாட்டி னேனே. (996)

நாட்டினேன் கோவுதான் கற்பந் தின்று
நற்காய சித்தியாய் ஞான மாகி
ஆட்டினே னனேகநாள் மேதி னிக்கு
ளல்லாந்தான் காயசித்தி யாகிப் பின்பு
மூட்டினேன் மோட்சத்தி லடைந்த வாறு
முனையான நவலோகக் களங்கு பற்பம்
வீட்டினேன் வெளியாகச் சொல்லிப் போட்டேன்
மேன்மேலுஞ் சித்தர்மய மாக வென்றே. (997)

சித்தர்மய மாகவேழா யிரத்தைத் தானும்
செப்பினேன்தான் வெகுநூலைத் திரட்டிச் சேர்த்து
பத்தர்மய மெத்தவாய்த்தான் யோகஞ் சொன்னேன்
பரமறியா மோடருக்கு ஞானஞ் சொன்னேன்
நித்தர்மய மாகவேதான் பசிய டக்க
நேராக வாதமுறை சுளுவாய்ச் சொன்னேன்
புத்தர்மய மாகாமல் நூலுக் குள்ளே
போதித்தேன் வெகுபேர்க்குப் போதித் தேனே. (998)

போதித்த குருவான மூலர் பாதம்
போற்றியே யடிபணிந்தேன் முக்கா லுந்தான்
போதித்த சனகாதி சிவயோக முனிக்கும்
பேரான தட்சிணாமூர்த் திபதஞ் சலியார்
போதித்த மாயியொடு சிவந்தா னந்தி
பெற்றெடுத்த காலாங்கி இருடி தனக்கும்
போதித்த மலர்தூவித் தெண்ட னிட்டுப்
போற்றினேன் முதலாமா யிரந்தான் முற்றே. (999)

சொன்னாலும் நீர்கேளீரே சும்மாசிவன் மேலிருந்தீரே
பொன்னும் பொன்னு வாரையுடன் பொன் னூமத்தை யிலைச்சாற்றில்
கன்னார் வேதி சிலையிரதங் காந்தம் வெள்ளி கலந் துருக்க
என்னு மென்னு மென்னுதே பொன்னும் பொன்னும் பொன்னுமே. (1000)

## அருஞ்சொற்பொருள்

பா. எண். 951 முதல் 1000 வரை

பா. எண் : 955—முட்கரம் = பிசைதல், கலக்குஞ் தன்மை

பா. எண் : 957—சோடு = இரண்டு (சோடி என்பது உலக வழக்கு) சோடிவிட்ட = இரண்டிலுள்ள இணைப்பை விட்ட (ஒற்றுமை நீங்கிய); ஊடுபட்ட = நெருங்கிய; பந்து = உறவினர்; செனித்தல் = பிறத்தல்

பா. எண் : 958—ஒழிப்பு = மரணம்

பா. எண் : 960—முகுளிதம் = மலர்ந்ததான

பா. எண் : 965—உடல் = கெந்தகம்; உயிர் = இரசம்



பா. எண் : 968—உருக்கரப் பொடி = எஃகு அரப்பொடி; ரசிதம் = வெள்ளி

பா. எண் : 969—மடவார் = மங்கையர்; சேர = முற்றுமாக

பா. எண் : 970—பேணி = காத்து

பா. எண் : 972—இளவயது ரோமம் = சிறுவயதினர் (கறுப்பு) தலைமயிர்

பா. எண் : 974—மருவமூடி = பொருந்த மூடி

பா. எண் : 982—தரங்கம் = கடல்

பா. எண் : 983—சிறவி = கீழ்நிலையில் ஒழுகும் விந்து முதல் ஆனவை

பா. எண் : 986—தடம் = இடம் (விசாலமான)

பா. எண் : 987—விளைப்பாற்றல் = ஆக்கசத்தி; ஏட்டான = மேலான

பா. எண் : 990—நலிவு = சோர்வு

பா. எண் : 993—காமுகன் = பேராசைக்காரன்

பா. எண் : 994—தாவு = இடம்.

பா. எண் : 997—கோவு = கோ, பசு.

பா. எண் : 998—மோடர் = மூடர்; புத்தர்மயமாகாமல் = கடவுளைக் கருதாத புத்தர்கள் கூட்டம் பெருகாதிருக்கவென்று

முற்றிற்று







